38 - ஆம் ஆண்டு மலர்

# சிவாஜி



பொய்யாக் கணபதி அருளைப் போற்றிப்
புரையில் வாழ்விற் பொருந்துக மன்னோ!



1972 புரட்டாசி, அக்டோபர்

Grams: ATHISONS. Phone: 1 Res: 1-A Mill: 393

# ATHI. V. SURYANARAYANA & ATHI. V. RAMACHANDRAN

Post Box No. 1, KARUR.

---

**Agents: Burma Shel, Shaw-Wallace & Dalmia Cement.**

Distributors: INDIA TOBACCO COMPANY LIMITED, WIMCO & CENTURY FLOUR MILLS.

*

**FOR**

KARUR, KULITHALAI, MANAPPARAI, ALANGUDI, PUDUKKOTTAI AND TIRUMAYAM TALUKS.

---

தீபாவளி வாழ்த்துக்கள்

காமதேனு வனஸ்பதி

காமதேனு இருமுறை சுத்திகரிக்கப்பட்ட தாவர எண்ணெய்

காவேரி பார் சோப்

காவேரி சோப்புத்தூள்







மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிமிடெட்

மேட்டூர் அணை-2, சேலம் ஜில்லா, தமிழ்நாடு

easterns MC 268

போட்டோ சம்பந்தமான எல்லா வேலைகளுக்கும்
உங்களுக்கு உகந்த ஊழியர்கள்

# டீலக்ஸ் போட்டோ சர்வீஸ்

திண்டுக்கல் ரோடு, கரூர்.

---

With best
compliments
from



# Trichy Cafe

Big Bazaar,
TIRUCHIRAPALLI-8.

---

போன்: 4954 தந்தி: Peeyar
P. B. No. 202

## P. RAMASAMY

Handloom Cloth Manufacturers
WORIUR P. O., TIRUCHI-3.

எங்கள் சொந்த கைத்தறிகளில்
தயாராகும் 100நெ. கலர் புடவைகளும்,
நவீன சோளி பீஸ் ரகங்களும்
உத்திரவாதத்திற்கு பெயர் பெற்றவை.

வியாபாரிகளுக்கு மிகவும் சகாயமான
விலைக்கு சப்ளை செய்கிறோம்.

## பெ. ராமசாமி

கைத்தறி ஜவுளி உற்பத்தியாளர்கள்
தபால் பெட்டி எண்: 202
உறையூர், — திருச்சி-3.

---

*திருச்சி நகரத்தின் சிறந்த பாத்திரக்கடை* போன்: 6852

பித்தளை, தாமிரம், வெங்கலம், எவர்சில்வர்
முதலிய எல்லாவகைப் பாத்திரங்களுக்கு நம்பிக்கையும், நாணயமும் உள்ள இடம்!

# திருநெல்வேலி பாத்திரக்கடை

சி. வ. கந்தசுவாமி பிள்ளை சன், பாத்திர வியாபாரம்,
பெரியகடைவீதி. திருச்சிராப்பள்ளி-8.




ஆண்டு : 37 அக். 1972 இதழ்: 10



ஆசிரியர்கள் :
ஆங்கிலப் பகுதி : T. N. ராமச்சந்திரன், B.COM. B.L.
பத்திராதிபர் : திருலோகசீதாராம்
காப்பாளர் : அமுசு பெரியசாமி

ஆண்டுக் கட்டணம் ரூ. 10

அலுவலகம் : 2-A, கோட்டை ஸ்டேஷன் ரோடு, திருச்சி-2. (டெலிபோன் : 7822)

## INDEX TO ADVERTISERS



ஸ்ரீ காஞ்சி ஆச்சார்யாள் சென்ற 20 ஆண்டுகால மாகக் கலந்துகொண்ட புண்ணிய நிகழ்ச்சிகள் பலவற்றை 16 m. m. திரைப்படமாக திருச்சி J. S. ரேடியோ அதிபர் **J. சடகோபன்** எடுத்திருக்கிறார். ஹிந்து கலாசார வரலாற்றில் இந்த நூற்றாண்டின் இணையற்ற பொக்கிஷமான இதனை 1973 மே மாதம் ஆச்சார்யாளின் 80-வது ஜயந்தியன்று அவர்களுக்கு சமர்ப்பிக்கவிருக்கிறார். இம்முயற்சிக்கு அனைவரும் துணைசெய்வார்களாக.



# அருள் வேட்டல்

மாதவம் சிறந்து
மானிடம் உயர்க

37 ஆண்டுகள் நம்முடன் கலந்துறவாடிய காலம் மற்றுமோர் புத்தாண்டின் சோபனத்துக்கு நம்மை அழைக்கிறது. இன்ப துன் பங்களின் வலைப் பின்னலில் சிக்காது இந்த விளையாட்டில் மேலும் தொடர்வோம். திரை விழுவதும் திரை விலகுவதும் எப்பொழுது என்று நமக்குத் தெரியாது. ஆயினும் ஏற்றுக் கொண்ட பாத்திரங் களை சரிவர நடிக்கும் வல்லமைக்கு நாம் வரங்கிடப்போம்.

வாழ்க்கையின் சூத்திரக்கயிறு எண்ணற்ற இழைப்பின்னல் களால் முறுக்கேற்றப்பட்ட ஒன்று. ஒரு இழை பிரிந்தாலும் சூத்தி ரக்கயிறு முறுக்கு விட்டுப்போகும். தன்னம்பிக்கையே அதன் முறுக்கு.

ஒன்றை நம்பாதவன் தன்னுள்ளேயே நம்பிக்கை குறைந்தவனு வான். அவனே நாஸ்திகன். இன்ப துன்பங்கள், நன்று தீதுகள், பாவபுண்ணியங்கள் எல்லாமே நம்பிக்கைக்கு உரியன. ஒன்றை யும் அவநம்பிக்கையுடன் காண்பது தன்னம்பிக்கையன்று.

தன்னம்பிக்கையின் அடிப்படையை ஆழங் காண்பவனே கலைஞன். அவநம்பிக்கையில் ஆழ்ந்து முரண்பட்டுக் கொண்டிருக் கும் உலகில் தன்னம்பிக்கையின் தூதனுக அவதாரம் செய்பவன் அவனே. கோடி கோடி கலைகளும் மண்ணில் புழுதியளைந்து கொண் டிருக்கும் மாந்தருக்குள்ளே நம்பிக்கையொளி பரவச்செய்வனவே யாகும்.

தற்செருக்கு வேறு, தன்னம்பிக்கை வேறு. தற்செருக்கு ஆண வத்தின் வெளியீடு. இது பிறவற்றின்மேல் நம்பிக்கையற்ற தன்மை. படைப்பில் அனைத்தையும் ஏற்று இங்கிதப் படுத்திக்கொள்ளும் உரிமையுள்ள மனமே தன்னம்பிக்கையின் ஆதார நிலையம்.

தன்னம்பிக்கையை விமர்சித்து உலகை நம்பிக்கையில் இயங்கச் செய்யும் வித்தைகளில் இலக்கியம் தலை சிறந்தது. மனிதனைச் சோர் வினின்றும், தோல்வியினின்றும், தொல்லைகளினின்றும் மீட்டு அவ னைத்தெய்வநிலைக்கு ஏற்றும் வேதகமே இலக்கியம். ஈயைக் கருடநிலை ஏற்றுவோம் என்கிறுர் பாரதி.

கடைசி மனிதனையும் கடைத்தேறச்செய்யும் வரையிலும் இலக் கியம் இருக்கும். அத்தகைய இலக்கியப்படைப்பே தங்கள் பிறவி யின்பயனுகக் கருதும் வல்லார் கைக்கு ஒரு கருவியாக நிற்கும் வாய்ப்பு சிவாஜிக்குத் தொடர்ந்து கிடைக்கட்டும். அதில் நமக்கு நண்பர்களின் வழித்துணை உதவட்டும் என்பதே நமது அருள்வேட்டல்.

—*பத்திராதிபர்*



# தெய்விக எழில்

— திருலோகசீதாராம்

எழிலும் இன்பமும் இரட்டைப்பிள்ளைகள்
இன்பம் வேண்டுவோர் எழிலை நாடுவர்
எழிலோ வடிவின் அருமையைச் சார்ந்தது

அருமையாய்க் காணக் கிடப்பவை அழகாம்.
ஆயினும் உலகில் அழகாய் இருப்பவை
அனைத்துமே இன்பம் அருளுவதில்லை

விளக்கின் திரியில் சுடர்விடுகின்ற
தீயின் பிழம்பில் திகழும் அழகை
விரும்பியன்றே சிரிக்கும் மதலை ?
விரலால் அதனுடன் விளையாட்டயரும்
அதனல் விளையும் அபாயம் சிலவோ ?

பிடாரன் ஊதும் பித்தநல் இசையில்
மயங்கி எழுந்து மண்டன மிட்டு
ஆடும் பாம்பை அழகென லாமோ ?

கட்செவி ஆடும் நடனமும் அழகே
ஆயினும் அழகை அணைப்போர் உண்டோ ?

எனவே உணர்ச்சியில் எழில் நின்றாலும்
இன்னல் தவிர்த்த எழிலே இன்பம்

*

எழிலென்ற சொல்லுக்குளன்னபொருளுண்டு
எடுத்துரைப்பாயடி தோழி

அழகென்று செம்பொருளாகும் இதற்கொரு
அர்த்த மெதற்கடா தோழா

அழகென்றுகூறி அகப்பட்டுக் கொண்டாய்
அழகுதான் என்னடி தோழி ?

அகப்பட்டு நிற்கும் வனப்பே அழகன்றி
புறப்பொருள் வடிவத்தில் இல்லை.

உள்ளத் துணர்வில் உதிக்கும் இனிமையை
உண்மை எழில் என்று சொன்னாய்.

வடிவத் தழகும் வண்ணக்கலவையும்
வையத்தில் நிலைபெறல் இல்லை

காணும்தோற்றங்கள் கணத்தில் மறையும்
கருத்தை விளக்கின போலும்

அழிகின்ற தன்மையை அமர எழில் என்று
யாரிங் குரைத்திடக்கூடும் ?

காலையில் வந்து காரிருள் தோய்ந்திடும்
கதிரும் அழகில்லை யோடி!

காலமெனும் பெரும் சக்கர வட்டத்தின்
கருவூல மேயவன் தானே!

கண்ணுக்குக் கண்ணாகிக் கண்ணொளியாகி
காண்பொருட் காட்சியும் ஆகி

மண்ணையும் விண்ணையும் மற்றுளயாவையும்
மாண்புறச்செய்பவன் கதிரே.

அழியும் பொருளுக்கும் அமர எழிலுக்கும்
ஆதாரமானவன் அவனே.

தெய்வ எழிலுக்குத் தேவன் எனும் புகழ்
தினகரன் வந்திடப் பாடு

*

போதுமலர்ந்தோங்கி வரட்டும்-கண்ணை
போதுதயம் ஆகி வரட்டும்

போதலரும்போது வருவாய்-எந்தப்
போதும் உனைக் காணமகிழ்வேன் (போது)

காலைமலர்ந் தோங்கி வரட்டும்-கண்ணை
காகங்கள் கரைந்து வரட்டும்

காலை மலர் கண்மலரினல்-எந்தக்
காலும் உனைக் கண்டு மகிழ்வேன் (காலை)

பூமலர்ந்தோங்கி வரட்டும்-கண்ணு
புட்கள் திசை மாறி வரட்டும்

பூமலரும் புன்னகையிலே-இந்தப்
பூமிசை நடந்து வருவாய் (பூமலர்)

ஓங்குமிருள் ஓடிவிடட்டும்-கண்ணு
உலகில் ஒளி பாய்ந்து வரட்டும்

ஓமிசை பொழிந்து வருவாய்-எங்கள்
உயிரெனும் ஊது குழலாய்.

*

உதய ஞாயிறு தோற்றினன் கீழ்த்திசை
ஓங்கிடும் திருக் கோயிலின் கோபுரத்து
உச்சிவெண்பிறை ஒண்சுடர் காந்துமாம்
ஒற்றை நாமணி ஓதிடும் செய்திகேள்.

அஸதோமா ஸத்கமய.........

புல்லினில் வைரப்படை தோன்றுங்கால்

தமஸோமா ஜோதிர்கமய .........

கல்லினில் அறிவொளி காணுங்கால்

ம்ருத்யோர்மா அம்ருதம் கமய.........

காலவெள்ளத்திலே நிலை காணுங்கால்
பூதலத்தில் பராசக்தி தோன்றுமே.

*

வல்லிருள் போக்கி வருவது கதிர் எழில்
மயக்கிருள்மாற்றி வருவது மதியெழில்
உலகினைத் தாண்டி ஓங்கும் உயிரெழில்
உண்மையின் உளவே உயரெழிலாகும்.

*

இயற்கைத் தாயின் எண்ணறு லீலையில்
இயங்கும் உயிரினம் என்றோ ஒருநாள்
தவத்தின் விளைவாய் தன்பிறப்படுத்த
மேநிலைக்கு ஏறும் மேதகு வடிவம்

பெற்றிடும் என்று பிறப்பின் மரபை
எண்ணிப் பார்த்த இந்நாள் முனிவன்
புதுவையில் திகழ்ந்த பூரணயோகி
புதியதோர் உளவைப் புதுக்கித்
தந்தான் அவன்தன் தத்துவம் வெல்க.

*

உயிர்க் குலம் தன்னில் ஒவ்வோர் அணுவும்
பற்பல பிறவிப் படித்துறை தாண்டி

மானிட மென்னும் மாண்பினையடைந்த
மரபினை விரிக்க வேண்டிய தில்லை

பரிணாம வாதப் பக்குவ முறையில்
இன்றோ நாளையோ எத்தனை ஆண்டோ

சகாத்தமோ யுகமோ யுகாந்தர மேயோ
மானிடம் ஒருநாள் தெய்வநன் னிலையில்
சேர்ந்திடல் உண்மை சிறுமை யகன்று
எழிலே வாழ்வின் வடிவாய் அழியா

இன்பமே அதில்நிறை ஆற்றலு மாகி
விளங்கிடும் அந்த வித்தையோ இயற்கை

அன்னையின் அருளால் ஆகுவ தாகும்
ஆயினும் மானிடர் அரிதின் முயன்று

தெய்வநிலையைச் சேர்வதும் கூடும்
உடலுடன் அமரர் ஊரினிற் சென்று

வாழ்ந்திட ஒருவன் வரமே கேட்டுச்
சென்றான் என்றும் சென்றவன் திரும்பி

மண்ணிடை வீழா வகையில் முனிவன்
புதியதோர் சுவர்க்கம் புகுத்தினான் என்றும்

கதையில் படித்தோம் கருத்தெது வென்றால்
மானிட வடிவில் மலிந்தநல் உயிர்கள்

வானக வாழ்வை வற்றா மகிழ்வை
முற்றா எழிலை முற்றும் பெற்று

அதிமானிடராய் ஆகிடும் சூழ்ச்சி
வேட்கையால் முயன்று விண்ணகம் தன்னை

மண்ணுக் கழைக்கும் மாண்புறு செயலாம்
மாயா சக்தியை மனங்கொண்டழைத்து

மருவினால் இங்கு மாய்ந்திடா எழிலைப்
பெற்று வாழலாம் வாழ்வின் வழியை

வகுக்கலாமென்று கண்டு
உணர்ந்த செய்தியை உரைத்திட்டனரே.

*

மானிட மாண்பில் சிறந்தது அன்பு
அன்பின் பாதை அருள் வழியாகும்

அருளின் ஒளியில் அதிமானுடர்தம்
வருகையை உரைக்கும் வண்ணம் இஃதே.

*

# பாபுவின் ராம ராஜ்யம்

—அருளரசி ஸ்ரீமதி. ஹா. கி. வாலம்

அனைவரும் ஓர் குலம் அனைவரும் ஓர் நிறை
　　அனைவரும் மனித ஜாதி
அனைவரும் ஓர் நிறை அனைவரும் ஓர் விலை
　　அனைவர்க்கும் வாழ்வு ஒன்றே
மனம். மொழி, மெய், தொழில், திறம், இடம்
　　இவையாவும் வேறு வேருயினும் நாம்
அனைவரும் இந்தியர், அனைவரும் பந்துக்கள்
　　அனைவரும் ஒன்ருய் வாழ்வோம்! 　1

திருட்டில்லை, புரட்டில்லை, தீமை, பொய், வஞ்சனை
　　தில்லு முல்லுச்செய் பொல்லாப்
புரட்டர்கள், பொய்யர்கள், பொல்லாத பாவிகள்
　　பூமியில் இல்லாது ஒழிக
விரட்டலும் மிரட்டலும் வீண் பேச்சு, ஜம்பமும்
　　வித்தை கண்கட்டு மாய
உருட்டலும் அதட்டலும் சுரண்டலும் வரண்டலும்
　　சுத்தமாய் ஒழிந்து போக! 　2

லஞ்சம், பொய், பட்டினி லச்சை இல்லாச்செயல்
　　லட்சியம் இல்லாத பேச்சு
வஞ்சனை, ஏமாற்று, வாய்ப்பந்தல், வீண்செய்கை
　　வளம் அழி வறுமை, கொடுமை
தஞ்சம் இல்லா நிலை தருமம் இல்லா மனம்
　　தயவு இல்லாத வாழ்க்கை
அஞ்சிடும் கோழை மனம், அக்ரமம், அநியாயம்
　　அடியோடு அழிக அழிக! 　3

பொய்யுடன் மெய் போலப்புனைத்துரை கட்டுரை
　　பொல்லாத வன்மம், வஞ்சம்
செய்கை எல்லாம் பாவம், சிந்தனை எலாம் லோபம்
　　சொல்வதெல்லாம் புரட்டே
ஐயனே, இவையெலாம் அடியோடு அழிந்திட
　　அஞ்சாத வழி வகுத்த
அய்யன் நம் காந்தியும் அநுதினம் எண்ணிய
　　அரும் ராம ராஜ்யம் வருக! 　4

ஆயிரம் மாற்றுள்ள அபரஞ்சித்தங்கம் என
　　ஆண்மை அஞ்சாமை ஓங்க!
ஆயிரம் முடிச்சேடன் தாங்கிடும் பாரதம்
　　ஆணையில் சிறந்து ஓங்க!
ஆயிரம் மொழி பேசும் ஆருயிர் இந்தியர்
　　அனைவரும் ஒன்று பட்டு
ஆயிரம் ஆயிரம் ஊழி தோறுழியவர்
　　அழியாது வாழ்க, வாழ்க! 　5

தென் திசைக்குமரிமுனை தீர மாகாளியவள்
　　திரு நாட்டைப் பாது காக்க!
வடதிசை வரும் எதிரி வழிதனை மகேசுவரன்
　　வரசக்தி பாதுகாக்க
குடதிசை குணதிசை நடு எலாம் நாம் போற்றும்
　　நாயகன் சத்யம் காக்க!
அடல் ஏறு போல் நமது திடமான இந்தியா
　　ஆண்டாண்டு தோறும் வாழ்க! 　6

ஐந்தாண்டுத் திட்டங்கள் அபரிமிதமாய் ஓங்க
　　அத்திட்டம் யாவும் வெல்க!
எந்தேயம், எந்நாட்டார் எவ்வேலை செய்தாலும்
　　இறையவன் வெற்றி தருக!
மூந்தாயிரம் ஆண்டு முன்னோர்கள் பெயர் வாழ்க!
　　மூதிய பாரதமும் வாழ்க!
சிந்தாகுலம் தீர்க்கும் புதுயுக இந்தியா
　　என்றென்றும் வெல்க வெல்க! 　7

வெற்றி மேல் வெற்றியுறும் வீரமா இந்தியர்
　　வீரர்கள் வாழி வாழி;
சுற்றி நில்லாது பகை! வெற்றி மகள் வந்தனள்!
　　சோபனம் கொண்டு வந்தாள்!
வெற்றியும் வீரமும் ஞானமும் தானமும்
　　வியன் கலாசார ஒளியும்
திக்கெட்டும் புகழ் மூட்டி எக்காலும் வாழ்ந்திட
　　இத்தரை மாது வந்தாள்! 　8

சாமளன் கோமளன் ஜானகியின் நாயகன்
　　சா கேத புரி மன்னவன்
நாம குணமங்களன், ரணதீர சிங்கமவன்
　　நல்லவர் பணி தூயவன்
பிரேமை மிகும் ஈசுவரன், பேர் பெறு மகேசுவரன்
　　பெரும் வில்லைத்துண்டு செய்த
ராமனது ராஜ்ய எழில் ராஷ்ட்ரத்தில் ஓங்கிட
　　ரம்ய பாரதமும் ஓங்க! 　9

# கவியரசி எலிசபெத் பிரௌனிங்

—ஏ. வி. சுப்பிரமணிய அய்யர்

ஆங்கில மொழியிலுள்ள பெண் கவிகளை விரலை வைத்து எண்ணிவிடலாம். அவர்களில் கடந்த நூற்றாண்டில் தோன்றிய எலிசபெத் பாரெட் பிரௌனிங் (Elizabath Barret Browning) முதன்மையானவள்; ஆங்கில இலக்கியத்தின் கவியரசி என்ற ஸ்தானத்திற்கு உரியவள். அவளுடைய வாழ்க்கை வரலாற்றையும் கவித்வ சாதனையையும் சுருக்கமாக வரைவதே இக்கட்டுரையின் நோக்கம். எலிசபெத் 1806-ம் வருடம் டர்ஹாம் என்ற ஊரில் எட்வர்ட் மோல்டன் பாரெட் என்பவரின் ஜேஷ்ட புத்திரியாகப் பிறந்து வளர்ந்தாள். சிறுவயதிலேயே அவளுக்கு இலக்கிய வாசனை கிட்டியது. எட்டாவது வயதிலிருந்து செய்யுட்களை ஆக்கத் தொடங்கினாள். அக்காலத்தில் அண்டையிலுள்ள கிராமத்தில் வாழ்ந்த ஸ்டுவர்ட் பாய்ட் (Hugh Stuart Boyd) என்ற கண் தெரியாத ஒரு அறிஞர் வீட்டிற்கு அவள் அடிக்கடி போய் கிரேக்க மொழியிலுள்ள நூல்களைப் படித்துத் தேர்ச்சி பெற்று வந்தாள். எலிசபெத்தின் கவித்திறனும் மலர்ந்தது. பதினன்காவது வயதில் கிரேக்க வரலாற்றில் முக்கியத்வம் பெற்ற ஒரு போரைப்பற்றி நான்கு புத்தகங்களில் ஒரு காவியமே எழுதிவிட்டாள். பின்னர் தொடர்ந்து பல கவிதைகளையும் புனைந்து கொண்டிருந்தாள்.

சில வருடங்களுக்கப்புறம் எலிசபெத்தின் தாய் மறைந்தாள். தகப்பனாரின் பொருளாதார நிலைமை குன்றியது. இதனால் அவர் லண்டனுக்கு வந்து குடியேறினார். அங்கே எலிசபெத்தின் உடல் நலம் குறைந்ததால் அவள் டார்க்வே என்ற கடலோரமுள்ள ஒரு கிராமத்திற்கு அனுப்பப்பட்டாள். மிஸ். மிட்போர்ட் என்ற ஒரு தோழி அடிக்கடி போய் எலிசபெத்துக்கு உறுதுணையாய் இருந்து வந்தாள். கடலோர கிராம வாழ்க்கையால் அவளுடைய உடல் நிலையில் அபிவிருத்தி ஏற்படவில்லை. இந்த சமயத்தில் எலிசபெத்தின் தம்பி ஒருவன் கடலில் விபத்துக்குள்ளாக்கப்பட்டு இறந்தான். இதனால் அவள் மனமுடைந்து நலிந்து வந்தாள். இரண்டு ஆண்டுகள் வரை எழுந்து நடமாடமுடியாமல் அவஸ்தைப்பட்டாள். அதற்கப்புறம் லண்டனுக்குச் சென்று, சுமார் ஏழு வருடகாலம் தம் வீட்டில் ஒரு அறையிலேயே அடைபட்டு நோயாளியாகவே இருக்க நேர்ந்தது. அவளுடைய கவிதைப் புலமையை அறிந்த தந்தை மிகுந்த கவனத்துடனும் அன்புடனும் அவளைப் பாதுகாத்து வந்தார். எலிசபெத்தும் நோயினால் துன்புற்று வாடிய போதிலும் மனஉறுதியைத் தளரவிடாது சிறந்த நூல்களைப் படித்துக்கொண்டும் கவிகளைப் புனைந்து கொண்டும் கவலையற்றுக் காலத்தைத் தள்ளினாள். அவளுடைய உறவினராகிய ஜான் கென்யன் (Gohn Kenyon) என்பவர் எலிஸபெத்தை அடிக்கடி வந்து பார்த்து உத்சாகப்படுத்தியும், அவளுடைய நூல்களையும் கவிகளையும் பிறபுலவர்களுக்கு அறிமுகப்படுத்தியும் செய்த தொண்டின் பயனாக அவளுடைய புகழ் வளர்ந்தது.

ஜான் கென்யன் மூலம் எலிசபெத்தின் கவிகளைப் படித்துத் தெரிந்துகொண்ட பிரபல கவிஞனான ராபர்ட் பிரௌனிங் (Robert Browning) அவைகளை ஆர்வத்துடன் பாராட்டி ஒரு கடிதத்தை எலிசபெத்துக்கு எழுதினான். அவளும் தனது நன்றியைச் சொல்லி பதில் எழுதவே, தொடர்ந்து இரு கவிஞர்களுக்குமிடையே கடிதப் போக்குவரத்து நிகழ்ந்து கொண்டிருந்தது. 1844ல் ஜான் கென்யன் தமது கூடப் படித்தவரின் மகனான கவிஞன் ராபர்ட் பிரௌனிங்கைக் கூட்டிக்கொண்டு எலிசபெத் வீட்டிற்குச் சென்றார். இரண்டு கவிஞர்களும் நேரில் சந்தித்துப் பேசினார்கள்; நேசித்தார்கள். நேசம் காதலாக மாறி வளர்ந்தது. பின்னர் ராபர்ட் பிரௌனிங் தனது மன நிலைமையைத் தெரிவித்து, தன்னை

மணந்து கொள்ளுமாறு காதலி எலிசபெத்தை வேண்டினன். அவளுக்கு வயது 38. பல வருடங்களாக நோய்வாய்ப்பட்டிருந்ததால் எலும்பும் தோலுமாய் வெளிறின முகத்துடன் இருந்தாள். பிரௌனிங் மீது அவளும் தெவிட்டாத ஆசை கொண்டு தனது உள்ளத்தையும் பறிகொடுத்தாள். நெஞ்சோடு நெஞ்சு கலந்துவிட்டது. ஆயினும், தன்னுடைய நிலையில் மணத்திற்குச் சம்மதித்தால் மணாளனுக்கு என்ன இன்பத்தை அளிக்கமுடியும் என்று கருதி எலிசபெத் வருந்தினள்; ஏங்கினள். மிகுந்த தயக்கத்துடன் பிரௌனிங்கிடம் தனது மறுப்பைத் தெரிவித்து, விளக்கி, இந்த முடிவைத் தவருகப் புரிந்துகொள்ளக் கூடாதென்று கெஞ்சினள்; மன்ருடினள். பிரௌனிங்கோ அவளுடைய மனநிலையைப் புரிந்து கொண்டு பொறுமையை மேற்கொண்டான். அவன் உள்ளத்தில் எலிசபெத்தின் மீதுள்ள காதல் கொழுந்துவிட்டு எரிந்துகொண்டிருந்தது. எனினும் அவன் ஆத்திரப்படவில்லை. சமயம் பார்த்து ஒரு நாள் எலிசபெத்திடம், அவளுடைய உடல் நிலையையும் மனநிலையையும், தான் நன்ருய் அறிந்திருப்பதாயும், அவளுடைய உள்ளத்தின் அழகுக்கும் பண்புக்கும், சீலத்திற்கும், கவித்திறமைக்கும் தான் அடிமையாய் விட்டதாயும், அவள் தன்னை மணந்துகொள்ளாவிட்டாலும், தனது காதல் தணியாதென்றும், இன்மொழிகளால் பிரௌனிங் தனது உள்ளத்தைத் திறந்துகாட்டினன். கவியரசி மனமிளகி, தனது உடல்நிலையை நொந்து கொண்டு பலநாட்கள் சிந்தனை செய்து ஒரு முடிவுக்கு வந்தாள். அவளுடைய ஐயமும் மயக்கமும் தீர்ந்தன. மாபெருங் கவிஞனை தனது காதலனின் தூய உள்ளத்தின் காதல் வெம்மையைக் கண்ட எலிஸபெத் நோயுற்ற உடல் நிலையையும் மறந்து நீண்ட நாளாக வருத்தி வந்த தனிமைக்கு முற்றுப்புள்ளி வைக்கத் தீர்மானித்து, பிரௌனிங்கை மணக்க சம்மதித்தாள். இருவரும் வரப்போகும் இல்லற வாழ்க்கையை எதிர்பார்த்து மனம் ஒருமித்து மகிழ்ச்சி அடைந்தார்கள்.

1845ல் பனிகாலம் எலிசபெத்தின் உடலுக்குக் கேடு விளைவிக்கும் என்று கருதப்பெற்று அவள் இத்தாலி நாட்டுக்குப் போக வேண்டும் என்று ஏற்பாடு செய்தார்கள். கடைசி நேரத்தில் அவள் தந்தை அநுமதி கொடுக்கவில்லை. அதிர்ஷ்டவசமாக அந்த வருடத்து பனிகாலத்தால் அவளுடைய உடல் நலம் குறைவு அடையவில்லை. அடுத்த ஆண்டு எப்படியும் இத்தாலி நாட்டுக்குப் போய்விட வேண்டுமென்று மன உறுதி கொண்டாள். தன் தந்தையின் இசைவோடு போக முடியாதென்று அவளுக்குத் தெரியும். அவர் ஒரு விசித்திரப் பிறவி. தமது மக்களின் மணம் என்ற பேச்சுக்கள் எழும்போது எல்லாம் ஏதாவது ஒரு காரணத்தைக் கூறி எதிர்ப்பைத் தெரிவித்துக் கொண்டே வந்திருக்கிருர். தனது திருமணத்திற்குத் தகப்பனரின் ஒப்புதலை பெற முடியாது என்று எலிசபெத் உணர்ந்தாள். தம் பொருட்டு குடும்பத்தில் ஒரு சச்சரவை உண்டாக்கவும் அவள் விரும்பவில்லை. ஆகையால் தனது குடும்பத்தார் ஒருவருக்கும் தெரியாமல், விசுவாசமுள்ள ஒரு வேலைக்காரப் பெண்ணைத் துணைக்கு அழைத்துக் கொண்டு முன்னேற்பாட்டின்படி ஒரு கோவிலுக்குப் போய் ராபர்ட் பிரௌனிங்கை மணம் செய்து கொண்டு வீடு திரும்பினள். ஒரு வாரங் கழித்து அதேபோல் ரகசியமாகப் புறப்பட்டுத் தன் கணவருடன் பாரீஸ் மார்க்கமாய் இத்தாலி போய்ச் சேர்ந்து பிளாரன்ஸ் (Florence) நகரில் இறுதியாகக் குடியேறினள். இருவருமே இல்லறத்தில் இன்பத்துடன் இறங்கி சிக்கனமான வாழ்க்கையை நடத்தி கவிதைத் தொழிலை உற்சாகத்துடனும் ஊக்கத்துடனும் ஏற்றுக்கொண்டார்கள். 1849ல இந்தக் கவி தம்பதிக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்து இல்லறத்தை இன்பமயமாக்கியது. ஆனல் எலிசபெத்தின் தந்தையின் கோபம் மாத்திரம் தணியவே இல்லை. அவள் எழுதிய பல கடிதங்களுக்கு அவர் பதில் போடவில்லை. அவள் கணவன் அனுப்பிய ஒரு கடிதத்திற்கு அவர்களைத் திட்டி ஒரு பதிலை வரைந்துவிட்டு எலிசபெத் எழுதியிருந்த பல கடிதங்களைத் திறக்காமலே திருப்பி அனுப்பி விட்டார். தந்தைக்கும் மகளுக்கும் இடையே இருந்த உறவு முறிந்தது. இந்த ஒரு விஷயம் அவளுக்கு வேதனையாயிருந்த போதிலும் மற்றப்படி வாழ்க்கையில் எலிசபெத்துக்கும் அவள் கணவருக்கும் வேறெரு குறைவும் இல்லை. அன்பே உருவெடுத்த கணவனுட

னும் இன்பமே உருவெடுத்த பிள்ளைக்கனிய முதுடனும் தனது வாழ் நாட்களை எலிசபெத் பிளாரென்ஸ் நகரிலேயேகழித்தாள். இரண்டு முறை தனது தாய் நாட்டிற்குப் போய் சொற்ப காலம் இருந்து விட்டு திரும்பினுள். பல இலக்கிய நண்பர்கள் பிளாரென்ஸ் நகருக்குச் சென்று இக் கவி தம்பதியைப் பார்த்து வருவதும் உண்டு.

எலிசபெத் பிரௌனிங் இங்கேயிருக்கும் போது பல நூல்களை எழுதினுள். இவற்றில் ''ஆரோராலே'' என்பது மிகப் பெரியது. அதில் அவளுடைய சுய சரிதையின் சில அம்சங்களையும், இலக்கியம், கலை, சமுதாய வளர்ச்சி ஆகியவைகளைப்பற்றிய லட்சியங்களின் விளக்கங்களையும் பார்க்கலாம், பழங் கதைகளைப் போற்றி விரித்து கற்பனுபாவத்தில் பாடுவது எலிசபெத்தைக் கவரவில்லை. நல்லசெய்யுள் நடையில் சமைத்த இந்தக் கதையில் அவள் காலத்து சமூகப் பிரச்னைகளையே பெரும்பாலும் பொருளாகக் கொண்டிருக்கிருள். ஆங்கிலக் கவிதை உலகில் இது ஒரு புதிய பாதை. இதை அமைப்பது தமது லட்சியம் என்று எலிசபெத் தெளிவாகக் கூறியிருக்கிருள். இத்தாலி நாட்டின் விடுதலையிலும் எலிசபெத் மிகுந்த ஊக்கம் காட்டினுள். 1861ல் சுதந்திர இத்தாலி நாடு உதயமான போது கவியரசியின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. ஆனுல் அதற்கப்புறம் அவள் அதிக நாட்கள் வாழவில்லை. திடீரென்று நோய் வாய்ப்பட்டு இறந்தாள். அவளுடைய கணவன் ராபர்ட் பிரௌனிங்கும் குழந்தையும் ஆருத்துயரத்தில் மூழ்கினுர்கள். அவளுடைய உடல் அந்நகரிலேயே அடக்கம் செய்யப்பட்டது. அந்நகரத்தார் நன்றியுடன் அவள் வாழ்ந்த வீட்டில் ஞாபகார்த்தமாக ஒரு பளிங்குக்கல்லை, தகுந்த வாசகத்துடன் அமைத்தார்கள்.

எலிசபெத் பிரௌனிங் எழுதியிருக்கும் பிற கவிதைகளின் நயங்களை ஆராயப்புகுந்தால் கட்டுரை விரியும். ஆனுல் அவள் வாழ்க்கையில் மையமாயும் முக்கியமானதாயுமுள்ள சம்பவம் அவளும் ராபர்ட்பிரௌனிங்கும் பரஸ்பரம் காதலித்து மணம் செய்து கொண்டது. இதில் விளைந்த கவிதையைப்பற்றிச் சொல்ல வேண்டியது அவசியம். 1844ல் பிரௌனிங்கும் எலிசபெத்தும் சந்தித்துக் காதல் கொண்டது முதல் 1846ல் அவர்கள் திருமணம் நடக்கும் வரை எலிசபெத் தனது உணர்ச்சிகளையும் காதல் வெப்பத்தையும் 'சானெட்' என்ற யாப்பினத்தில் 43 பாடல்களைப் புனைந்து ரகசியமாகவே வைத்திருந்தாள். இத்தாலியில் ஒரு நாள் அவள் இந்த பாடற் தொகுதியை கணவனின் சட்டைப் பையில் திணித்து ''என் அன்பே, இவைகளைப் படித்தபின் கழித்தெறிந்து விடுங்கள்'' என்று கூறிவிட்டு சற்று வெட்கத்துடன் அகன்றுள். கவிஞன் தமது மனைவியின் காதற்பாடல்களைப் படித்து ஆச்சரியமடைந்தான். மீண்டும் மீண்டும் படித்துப் படித்துப் போற்றி இன்புற்று புளகாங்கிதமானுன். ராபர்ட் பிரௌனிங், தன் மனைவியின் மீதுள்ள காதற் போதையில் இப்பாடற்தொகுதியைப் போற்றிப் புகழ்ந்தான் என்று சொல்ல முடியாது. இவ்வளவு அழகான பாடல்களை அழிக்க வேண்டும் என்று ஏன் கட்டளையிட்டாள் என்று திகைத்தான். வெட்கத்தால்தான் சொல்லியிருக்க வேண்டுமென்று தெரிந்து கொள்ள அதிக நேரமாகவில்லை. பாடல்களை அச்சிட ஏற்பாடு செய்தான். ஆங்கில இலக்கியத்தில் எத்தனையோ உயர்ந்த காதற் பாடல்கள் இருப்பினும் எலிசபெத் பிரௌனிங்கின் இந்த காதற் கவிதைக்கு அலாதியான சிறப்பு உண்டு. இவை ஷேக்ஸ்பியர் மில்டன் டி. ஜி. ரோசட்டி ஆகியோர் எழுதியிருக்கும் 'சானட்' பாடல்களுக்கு, கவிதை நயத்தில் குறைந்தவை என்று கருத முடியாது என்று தகுந்த திறனுய்வாளர்கள் கருதியிருக்கிருர்கள்.

எலிசபெத் காதலிக்க ஆரம்பித்த போது அவளுக்கு வயது முப்தெட்டு ; இளமைப் பருவமும் பூரிப்பும் தாண்டிய காலம், நாற்பதாவது வயதில் ராபர்ட் பிரௌனிங்கை மணந்தாள். கணவனுக்கு வயது முப்பத்து நான்குதான். இதுபோல் புருஷர்கள், வயதில் மூத்த பெண்களை மணப்பது மேலை நாடுகளில் சகஜமானதுதான். ஷேக்ஸ்பியர் தனக்கு எட்டு வயதால் மூத்தவளை மணந்ததும் டாக்டர் ஜான்சன், தன்னைவிட இருபது வயது மூப்புள்ள ஒரு மாதைக் கல்யாணம் செய்து கொண்டதும் சரித்திரப் பிரசித்தி பெற்ற உதாரணங்கள். எலிசபெத் நாற்பது வயதடைந்து நோய்வாய்ப்பட்டிருந்த போதி

லும் அவளுடைய உள்ளத்தில் எழுந்த காதல் உணர்ச்சி அனல் தன்மையுடன் பொங்கியிருக்கிறது. அது நெஞ்சையும் ஆத்மாவையும் சிக்கெனப் பிணைத்த முதிர்ந்த பாசம். இதன் காரணமாக அவளுடைய காதற் பாடல்களில் எளிமையும், இனிமையும் உயிர்த்துடிப்பும், களங்கமற்ற அடிமனத்தின் மெல்லிய அசைவுகளும் பொதிந்து கிடக்கின்றன. அவைகளில் நிலவின் ஒளியும் குளிர்ச்சியும் எழுப்பும் புனிதமான மன நெகிழ்ச்சியைக் காண முடிகிறது. அவள் மனத்தில் எழுந்து கரை புரண்டு பாயும் இன்ப வெள்ளத்தின் கீதமும், அதன் உணர்ச்சி அலைகளில் தத்தளிக்கும் நெஞ்சுத் துடிப்பு எத்தனையோ கற்பனுபாவங்களில் சமைக்கப்பட்டிருக்கும் இப்பாடல்களுக்கு கனிவும் சுவையும் அளித்திருக்கின்றன. இவைகளைத் தமிழில் மொழி பெயர்ப்பது பிறவிக் கவிஞர்களுக்கே இயலும். இருந்தபோதிலும், பாலும் தேனும் கற்கண்டும் பக்குவமாகக் கலந்து கொடுப்பதற்குப் பதிலாக வெறும் பானகத் தண்ணீரைக் கொடுப்பது போல சில பாடல்களில் உள்ள கற்பனைப் பொலிவுடைய கருத்துக்களை, அங்கிருந்து சில இங்கிருந்து சில வரிகள் என்று பரவலாக எடுக்கப்பட்டு கொடுத்திருக்கிறோம் உரை நடையில்.

எலிசபெத் சொல்வதாவது :— '' நான் மெலிந்து, நோய்வாய்பட்டு, வாழ்க்கையில் நம்பிக்கை இழந்து, மரணத்தை எதிர்பார்த்து இறைவனையே நோக்கியிருந்தேன். மரணம் என்னை நெருங்காமல் தயங்கிப்பின் வாங்கியது. இறைவனைக் காணவில்லை. உன்னையே கண்டேன், என் அன்பே. வலிமை அடைந்தேன். நெஞ்சம் மகிழ்ந்தது. அச்சத்தை ஒழித்தேன். இனி எனக்கென்ன கவலை! வாடிக் கொண்டிருக்கும் என் உள்ளப் பயிருக்கு காதல் மாரி பொழிந்து பசுமையாக்கி என்னை உயிர்ப்பித்தாய். என்னிடம் எந்தவிதத் தகுதியும் கவர்ச்சியும் இல்லை என்று தெரிந்தும் உன் அன்பைக் கொட்டினாய். என்னிடம் எதைப் பார்த்துக் காதலித்தாய் என்று அறியேன். எல்லாவற்றையும் துறந்து என்னையே உனக்கு நான் அர்ப்பணம் செய்து விட்டால், நீயும் உன்னையே எனக்கு அர்ப்பணம் செய்து விடுவாய் அல்லவா ? அதை நினைந்து நினைந்து பூரிக்கிறது என் மனம். நான் எவ்விதத்திலும் உனக்குத் தகுந்தவளாயில்லாதிருந்தும், உன்னுடைய ஆழ்ந்த அன்புதான் உன்னை அடைய எனக்குத் தகுதியை அளித்திருக்கிறது. நாம் பரஸ்பரம் பெற்றிருக்கும் அன்புச் செல்வம் ஆண்டவனின் அருள். வேறொருவராலும் இந்தச் செல்வத்தை நம்மிடமிருந்து பறிக்க முடியாது. என் மீது நீ கொண்டிருக்கும் நேசத்தைப்பற்றி அடிக்கடி பகர்வாயாக. என் எண்ணங்கள் எல்லாம் உன்னையே சுற்றி ஓடுகின்றன. அடேயப்பா! உன் மீது என்னிடம் எழும் காதல்! அம்மம்மா! எப்படி நான் அதைச் சொல்வேன். எண்ணிச் சொல்லட்டுமா. எனது ஆன்மா எவ்வளவு ஆழத்தையும், உயரத்தையும், அகலத்தையும் வியாபிக்க முடியுமோ அந்த எல்லை வரையும் உன்னைக் காதலிக்கிறேன். என்னிடம் உயிரின் மூச்சும் முறுவல் பூக்கும் இன்பமும் கண்ணீர் சுரக்கும் துன்பமும் இருக்கும் வரை உன்னைக் காதலிக்கிறேன். கடவுளின் சித்தம் இருந்தால் இறந்த பின்னும் உன்னையே ஆட்கொள்வேன்.'' பெண்மைக்கே உரிய கனிந்த உணர்ச்சி பாவம் எவ்வளவு அடக்கத்துடனும், ஆனால் வலி குன்றாமலும், இங்கே பேசுகிறது!

ராபர்ட் பிரௌனிங் சாமானிய கவிஞன் அல்ல. சிறந்த கருத்துப் பண்பும் கற்பனைத் திட்பமும் நிறைந்த கவிஞன். அவன் கவிதையில் ஞானப் பொருண்மையும் திண்ணமான வாக்கும் பொதிந்து கிடக்கும். கடவுள் தத்துவத்தையும், ஆத்ம ஞானத்தையும் கற்போருக்கு இன்பம் தரும் முறையில் பல பாடல்களில் விளக்குகிறான். உலகியல் வாழ்க்கையிலும் அரிய குணங்கள் படைத்தவன். ஆடம்பரங்களையும் வெளிப்பகட்டுகளையும் வெறுக்கும் மனப் போக்குடையவன். இவ்வளவு பெருமை வாய்ந்த ராபர்ட் பிரௌனிங் எலிசபெத்தின் பாடல்களைப் படித்துப் போற்றி அவளைப் பார்க்கச்சென்றதும், கண்டதும் அவள் மீது காதல் கொண்டு, அவளைத் தன்னை மணக்கும்படி கேட்டதும், அக்கவியரசி முதலில் சற்றுத் தயங்கி, பின்னால் ஆசையால உந்தப் பெற்றுத் தன் தந்தையையே துறந்து தனியாகப் போய் பிரௌனிங்கை மணந்து இத்தாலி நாட்டில் குடியேறியதும், இவர்களுடைய மெய்யன்பில் விளைந்த காதற் கவிதையை ஊன்று நோக்கினால், இவ்விரு கவிஞரின் வாழ்க்கை சரித்திரப் பிரசித்தி பெற்றது மன்றி, காதலின் இதிஹாஸமாகவும் விளங்குகிறது என்று சொல்லலாம். இலக்கிய உலகில் இவ்வளவு சிறப்பு வாய்ந்த கவிஞர் தம்பதியைப் பார்ப்பது அரிது ; அரிதிலும் அரிது *

# அம்ருதஸ்ய புத்ரா:

ஸ்ரீ சத்ய சாயிபாபா ஆற்றிய சொற்பொழிவு ஒன்றிலிருந்து
"தி. ஜானகிராமன்" மொழிபெயர்த்தது

பக்தியை எப்படி அளப்பது? ஒருவர் நிறுவிய அல்லது நிறுவ உதவிய ஸ்தாபனங்களினாலா, கட்டிய அல்லது புதுப்பித்த கோவில்களாலா. கொடுத்த நன்கொடைகளாலா? அல்லது இறைவன் பெயரை எழுதிய எண்ணிக்கைகளாலா? இறைவனைத் தொழச் செலவான சக்தியாலா? இவை ஒன்றும் முக்யமல்ல, இரண்டாம் பட்சமாகக்கூட முக்யமல்ல. பக்தி பிரேமை, அன்பு. வரும் பயனால் மாசுபடாதது. தோன்றியதற்குக் காரணமும் இதற்குத் தெரியாது. பெரிய ஆத்மாவிடம் ஆத்மா கொண்ட காதல் இது. கடல் மீது ஆறு கொண்ட காதல். மரத்தின் மீது கொடி கொண்ட காதல். வெளி மீது நட்சத்ரம் கொண்ட காதல். பாயும் குன்றின் மீது ஓடை கொண்ட காதல். நல்ல காலமோ, கெட்ட காலமோ எப்போதும் அது இனிப்பாகத் தான் இருக்கும். பக்தி, ரொட்டி வெண்ணெய் மீது தூவுகிற உப்பு, மிளகுப் பொடி அல்ல. இதுவே ரொட்டி, அதுவே வெண்ணெய். சார உணவு. இரண்டு பிடி கூடுதலாகச் சாப்பிட தொட்டுக் கொள்ளும் ஊறுகாயல்ல. மாறுத மனப் பாங்கு. மனத்தின் இனிய போக்கு. இன்பத்திலும் துன்பத்திலும் அசைந்து கொடாமல் ஒரே மாதிரியாக நிற்பது. தன்னையறிவதால் வரும் பேரின்பத்திற்கு உண்மை சாட்சி பக்தன் தான்.

மூத்த பாண்டவன் யுதிஷ்டிரனுக்கு இது இருந்தது. வனவாசத்தில் அவன் இம்மிகூட தன் நம்பிக்கையிலிருந்து விலக வில்லை. சிம்மாசனம் திரும்பி வந்ததும், ஏதும் அவன் தலைக்கேறிவிட வில்லை, தங்கள் செயல்களின் தீய விளைவுகளி லிருந்து தப்புவதற்காக துர்யோதனன் போன்றவர்கள், தர்மத்தை, ஒரு சாக்காகக் கையாண்டார்கள். தர்மம் தப்ப வழி காட்டும் திட்டி வாசல் இல்லை. அது வாழ்விற்கு உபாயம். பாண்டவர்களிடம் ஒரு நாள் கூட தர்மசிந்தை காட்டாத துர்யோதனனால், இறுதியில் ஒன்றிக்கு ஒன்றியாக வீமன் விடுத்த அழைப்பைத் தவிர்க்கமுடியாமல் போய் விட்டது. இந்தக் கணத்தில், வஞ்சகச் சூது, அரக்கு மாளிகை, அரசியின் மானத்திற்கு ஊறு, இளம் அபிமன்யுவின் படுகொலை இந்த அநீதிகளுக் கெல்லாம் பரம நாயக னனவன் தர்ம வாதத்தில் புகல் கொண்டு சாத்திரம் பேசத் தொடங்கினான்!

எந்த அளவுக்கு இயங்க வேண்டும், எத்திசையில் இயங்க வேண்டும், சாதித்த பூரிப்பை எவ்வாறு அடைய வேண்டும் என்ற உணர்வுகளை அளிப்பது தன்னை அறியும் போதம். இதில் நிலை பெரு விட்டால் தர்மத்தைப்பற்றி தயக்கமும் சலனங்களும் தோன்றுகின்றன, அதனால் தான் க்ஷேத்ரம், க்ஷேத்ரத்தை அறிந்தவன் என்ற இரண்டையும் அறிய

வேண்டும் என கீதை வற்புறுத்துகிறது. இரண்டையும் அறிந்தால், அமிர்தத்தின் புதல்வன் என்னும் பட்டத்திற்கு உரியவர்களாகலாம், மற்ற பட்டங்கள் தலைக்குச் சுமை. அவற்றால் யாரையும் சில ஆண்டுகளுக்குமேல் ஏமாற்ற முடியாது.

இந்த அறிவு பக்தியால்தான் உண்டாகும். பக்தி இதயத்தைத் தூயதாக்கி, உணர்வுகளை உயர்த்தி, பார்வையை பிரபஞ்ச அளவுக்கு விரிவாக்கிவிடும். இறை அருளையும் கீழே இறக்கிக் கொண்டு வரும். மேகங்கள் மேலே திரிந்தால் போதாது. வயல் மீது இறங்கி, மழையாகப் பொழியவேண்டும், உயிரூட்டும் மழையைக் குடிக்க, வான் வரையில் பயிரால் எழமுடியாது. குழந்தையைக் கொஞ்சும் தாய் தொட்டிலில் குனிந்தாக வேண்டும். அருளைக் கீழே கொணரும் சக்தி பக்திக்கு உண்டு. உலகில் உள்ள பொருட்களில் மிக முக்கியமானது எதுவென்று ஒருமுறை கேட்டபோது நாரதன் ''பூமி'' என்று சொன்னான். ஆனால் பூமியில் முக்கால் பாகம் தண்ணீர்; கால் பகுதி பூமியையும் அது விழுங்கினாலும் போச்சு என்றதும் தண்ணீருக்குத்தான் சக்தி அதிகம் என்றான் நாரதன்.

''தண்ணீரனைத்தையும் அகத்தியன் ஒரு தடவை குடித்து, கடலையே உலரச் செய்து விட்டான். அவன் இப்போது வானத்தில் ஒரு நக்ஷத்திரம்''

''அப்படியானால் வானமே பெரிது.''

''வானத்தை வாமனன் ஒரு அடியால் அளந்தான்.''

''பின்னர் வாமனன் தான்—கடவுள் தான் பெரியவன்.''

''கடவுள் பக்தனின் உள்ளத்தில் புகுந்து வசிக்கிறானே.''

''ஓ! அப்படியானால் சிருஷ்டிகளிலேயே மிகச் சிறந்தது பக்தனின் உள்ளம் தான்'' என்றான் நாரதன்.

அதனால் தான் பலஹீனங்களின் சின்னங்களைக்கூட நான் கண்டிக்கிறேன். நாம் பலமற்றவர்கள்-குறை நிறைந்தவர்கள் என்று நினைப்பதே பாவம்—மன்னிக்கமுடியாத பாவம். அமரத்துவம் என்ற நம் வழிவழி செல்வத்திற்கு இழைக்கும் ஊறு அது—மனிதனுக்கு உரித்தான, அவன் தேட வேண்டிய ''அமிர்தத்தின் புதல்வர்கள்''என்னும் பட்டத்திற்கே ஒரு இழுக்கு. பலஹீனம், மனத்தில் அதா இதா என்று அலைபடுவது, நம்பிக்கை இன்மை—இவை யாவும் ''அமிர்தத்தின் புதல்வர்கள்''என்று உங்களை கௌரவித்த பரம் பொருளுக்கு நாம் இழைக்கும் அபசாரம். நீங்கள் பலமே உருவானவர்கள்—வல்லமை உங்கள் இயல்பு. தாக்கப்பட்ட போதெல்லாம், ''நாங்கள் வல்லமையின் வடிவங்கள்'' என நீங்கள் சொல்ல வேண்டும், வளைந்து குழைந்து உங்கள் தன்மானத்தை விற்று விடாதீர்கள். சின்ன உடம்பென்னும் சதைப்பிண்ட உங்களை நினைத்துக் கொள்ளாதீர்கள். அழிக்க முடியாத, அமரத்வம் கொண்ட ஆத்மா நீங்கள்—பிரம்மத்தின் இயல்பினர்கள்.

அமரத்வத்தை உறுதியாக்கும் அமுதத்தை உங்களுக்குப் பொழிந்த அருளுக்கு நன்றி செலுத்துங்கள். இன்பத்திலும் துன்பத்திலும் அசையாமல் நீங்கள் நிற்க வேண்டும் என்பதே அதன் விருப்பம். மிருகங்கள்கூட நன்றி செலுத்துகின்றன. நாம் வளர்க்கும் செல்லப் பிராணிகள் மட்டுமல்ல. வனவிலங்குகள் கூட, காலில் முள் ஏறித்தவித்த சிங்கத்தின் கதையை நீங்கள் கேட்டிருப்பீர்கள். காட்டில் பயந்து ஓடிய அடிமை ஒருவன் அதன் மீது இரங்கி முள்ளை எடுத்துவிட்டுப் போனான். வழியில் பிடிபட்டு ரோம் நகருக்குப் போனான். அங்கே அவனை ராட்சத விளையாட்டரங்கில் தள்ளி, அண்மையில் பிடித்த சிங்கத்தையும் தள்ளினர்

கள், அடிமை முள்ளை எடுத்துக் காத்த சிங்கம் தான் அது. அதன் நன்றி, காத்த வனுக்கே தீங்குசெய்ய அனுமதிக்கவில்லை. நமக்கு பாகுபடுத்தும் ஆற்றலும் பற்றின்மையும் மதிப்பிடும் ஆற்றலும் தந்த இறைவனுக்கு நன்றி செலுத்துங்கள்.

நான்கு உறுதிப்பாடுகள் உங்களுக்குத் தேவை. ஒன்று தூய்மை. தீயநினைவு தீய வழக்கங்கள், புல்லிய செயல்கள்-இவையெல்லாம் நம் தன்மானத்தை நைந்து போகுமாறு செய்துவிடும். இன்னொன்று, தொண்டு. நாம் எந்த உண்மையின் பிரதிபிம்பங்களோ, அதே பிரதிபிம்பங்கள் தான் மற்றவர்களும். அவர்களுக்குத் தொண்டு செய்தாகவேண்டும். ஒரு முதல் அசல்பரம் பொருளைத்தவிர உங்களுக்கு வேறு பிரமாணம் ஏதும் கிடையாது. மூன்ருவது அன்யோன்யம். படைப்புகள் அனைத்தும் நம் உறவு, பிரபஞ்சத்தின் எல்லா பொருட்களிலும் ஒரே மின்னோட்டம் ஓடுகிறது. நான்காவது, உண்மை. உங்கள் அனுபவத்தைத் திரித்து மாற்றி உங்களையும் பிறரையும் ஏமாற்ருதீர்கள்.

படித்தவர்களின் — மாணவர்களின் உள்ளத்தில் நம் பழைய பண்பாட்டிடம் பற்றும் மரியாதையும் புதுப்பிக்கப்பட வேண்டும். இதெல்லாம் நடக்காத காரியம் என்று வெட்டிப் பேசுவோர்களுக்கு வால் பிடிக்கத் தேவையில்லை, மாருக, அவர்கள் பேச்சு நம்மை இன்னும் உந்த வேண்டும். ஒரு தடவை கோதாவரி பாலத்தின் மீது ரயில் போகும்போது ஒரு சம்பவம் நடந்தது. ஒரு எளிய குடியானவன் ஒரு பைசா தேடி எடுத்து ஆற்றில் எறிந்தான். புனித நதிக்கு செய்யும் மரியாதை அது என்று அவன் எண்ணம். உடனே சொகுசாக உட்கார்ந்திருந்த சகப் பிரயாணி ஒருவருக்கு ஆத்திரம் வந்து விட்டது. இது என்ன மௌடீகம், பொருளாதார விரயம் என்று எண்ணத் தொடங்கினர். இந்த நாடு உருப்படாமல், வறுமையில் உழல்வதெல்லாம் இந்த மாதிரி காரியங்களால் தான்'' என்று சிகரெட்டைப் புகைத்துக்கொண்டே பொருமினர். விவசாயி சும்மா இல்லை. "சாமி, இத பாருங்க. ஏதோ வருசத்துக்கு ஒருக்க இந்தப்பாலத்துமேலே நான் போறேன். ஒரு பைசாக்கு மேல நான் இழந்ததில்லெ.

இதனுலெ எனக்கு மனசுக்கு நெறவா, திருப்தியா ஆயிடுது. ஆனு, நீங்க விடாம புகைச்சுக்கிட்டேயிருக்கீங்களே, இதுனுல என்ன லாபம், பொருளாதாரம்னு சொன்னீங்களே, அப்படித்தான் என்ன கிடைக்குது இந்தப் புகையாலெ உங்களுக்கு, சொல்லுங்களேன் . வண்டிமுளுக்க நச்சாப் பரவுது. உங்க உடம்புக்கும் கெடுதல் எங்க உடம்புக்கும் கெடுதல். குடிக்கறப்பவே என்னமோ பெரிய்ய மனுசன் மாதிரி ஒரு எண்ணம். வேற என்ன ? கடைசி

மிச்சம் நடுக்கம், தளர்ச்சிதான்?'' என்றான்.

உங்களுக்குள் உறங்குவதுபோல் நடக்கும் தவறுகளைப் பார்த்து நீக்க முயலுங்கள். மேடை ஏறி தர்மம், தானம், தொண்டு, இரக்கம், சமத்துவம், மதச்சார்பற்ற பாங்கு என்றெல்லாம் வெறும் பிரசங்கம் செய்வதில் பயனில்லை. இறங்கி கொஞ்சமாவது பழக முயலுங்கள். அடுத்த வீட்டுக்காரன் கடுமையான நோயின் பிடியில் அவதிப்படுகையில், நல்ல வேளையாக நமக்கு வரவில்லை என்று திருப்திப்பட வேண்டாம். யாருக்கும் இந்த விடுதலை யில்லை. நாம் ஒரு பிராணிக்குத்தரும் உணவு நிச்சயமாக கடவுளையும் சேர்கிறது. அதே போல நாம் ஆற்றும் தொண்டும் இறைவனை ஆனந்தப்படுத்துகிறது.

இப்பொழுது பூஜை பக்தி எல்லாம் புத்திக்குத்தான் செய்யப்படுகின்றன. தொழுகிறவனுக்கு நல்ல சௌகர்யம், சுகபோகம்—இவைகளுக்காகவே பூஜை நடக்கிறது. பக்தி வியாபாரமாகி விட்டது. நான் தின்ன தருவேன்—நீ இவ்வளவு தா. அந்த சுவாமி நிறைய கொடுத்தால் இந்த சுவாமி நட்டாற்றில். அங்கும் உடனே பலனில்லையானால் வேறுசுவாமி—வேறு கோவில். அதனால் கிலி பிடித்தஒரு சம்சய அலைச்சல். "கூட்டத்தில் இருந்தால் கடவுள் என்னைப் பார்க்கமாட்டார். ஆகவே அவர் கவனத்தை இழுக்க தனியாக நின்று கத்துவேன். இல்லாவிட்டால் என்னை அவர் புறக்கணித்து விடலாம்'' இது பலரின் வாதம், நடவடிக்கை லக்ஷியத்தை விடாதீர்கள். உங்கள் குறுகிய பார்வைக்கு ஏற்ப இறைவனை இறக்கிக் குலைக்க வேண்டாம். எழுந்து நின்று, பற்றற்ற விவேகத்தை வலுப்படுத்திக் கொள்ளுங்கள். உங்கள் இலக்கு நெருங்கி வரும். ●

# இசையுலகில்

# புதியயுகம்

— T. S. பார்த்தஸாரதி

இசை, நடனம், நாடகம், ஓவியம் முதலிய உயிருள்ள லலித கலைகள் மாறுதல் இன்றி நெடுங்காலம் இருந்துவிட முடியாது. மாறுதலே இக்கலைகளின் இயற்கையான குணம் ஆகும். "பழையன கழிதலும், புதியன புகுதலும்" என்பது கலையுலகிற்கே பெரிதும் பொருந்தும். புதுப் புது கலை வடிவங்களைப் படைக்கும் முயற்சிகள் ஒரு புறம் எப்பொழுதுமே நடந்து கொண்டிருக்குமாதலால் ஒரு பழைய கலையும் ஆதி உருவத்துடன் இருந்துவிடாது. ஆயினும் புரட்சிகளும், மாறுதல்களும், வளர்ச்சியுமே ஒரு கலையின் முன்னேற்றம் என்று கூறிவிட முடியாது. மாறுதல்கள் காரணமாக சில கலைத் துறைகளில் நலம் குறைவதும், மரபுகள் குன்றுவதும், தூய்மை கெடுவதும் உண்டு. காலப் போக்கில் தான்ஸேன், தியாகராஜர் போன்ற மேதைகள் தோன்றும் பொழுது தான் ஒரு கலையில் ஏற்படும் புதிய வடிவங்கள் அக் கலையை அணி செய்து அதன் எதிர் காலத்தை அடியுடன் மாற்ற வல்லன.

தென்னிந்திய இசை சிலப்பதிகாரக் காலம் முதல் சிறந்த வடிவில் விளங்கி வந்த ஒரு கலையெனினும் பின்னர் ஏற்பட்ட மாறுதல்கள் மூலம் பல புதிய அம்சங்களை மேற்கொண்டு தற்காலத்திய கர்நாடக சங்கீதமாக மலர்ச்சி பெற்றது. தேவாரமும், திவ்விய பிரபந்தப்பாசுரங்களும் பாடப் பெற்று வந்த பண்களும் திறங்களும் தாளங்களும் பிற்காலத்திய இசை முறையாகிய கர்நாடக சங்கீதத்தின் மேளங்களுடனும், ராகங்களுடனும் இரண்டறக் கலந்து விட்டன. ஸாம வேதத்திலிருந்து தோன்றிய இசை வடிவமும் காலப் போக்கில் மறைந்து போய், பிரபந்தங்கள் என்ற வடிவங்கள் சில நூற்றுண்டுகள் காலம் வழக்கத்தில் இருந்தன. 14-ம் நூற்றுண்டிலிருந்து கிருதி அல்லது கீர்த்தனம் என்ற இசை வடிவம் தோன்றவாரம்பித்து அதுவே தற்சமயம் கர்நாடக சங்கீதத்தின் முக்கிய அம்சமாக விளங்குகிறது. கீதம், வர்ணம், பதம், ஸ்வரஜதி, ஜாவளி, தில்லானு முதலிய உருப்படிகளும் இக்காலத்தில் தோன்றியவையே.

### கலைக்கு அமோக ஆதரவு

இரண்டாவது உலக மகா யுத்தம் முடிந்து (1946) இந்தியா சுதந்திர நாடாக மாறும் தருவாயிலிருந்து (1947) தென்னிந்தியாவில் சங்கீதம், நடனம், நாடகம் முதலிய கலைகளுக்கு அமோகமான ஒரு நல்ல காலம் பிறந்ததென்றே கூறலாம். நாட்டில் பணப் புழக்கம் அதிகமாகிமக்கள் கலை நிகழ்ச்சிகளில் வெகுவாகக் கலந்து கொள்ளத் தொடங்கவும், தமிழ் நாட்டின் நகரங்களில் ஏராளமான சபைகளும் நாடக மன்றங்களும் தோன்றவாரம்பித்தன. சென்னை நகரில் பேட்டைக்கு ஒரு சபையாக நிறுவப்பட்டு அவை வெற்றிகரமாக நடந்து வருகின்றன. தமிழ் நாடெங்கும் ஸ்ரீராமநவமி, ஸ்ரீஜயந்தி,

கிறிஸ்மஸ் முதலிய சமயங்களில் பெரிய சங்கீத விழாக்கள் நடத்தப் பெற்று ஏராள மான கச்சேரிகளும் மற்ற கலை நிகழ்ச்சி களும் ஏற்பாடு செய்யப்படுகின்றன.

இசைப்பிரியர்கள் தங்கள் இசை யறிவை விருத்தி செய்து கொள்ளும் வகை யில் நிகழ்ச்சி நிரல்களும், மலர்களும் அச்சிடப்பெற்று கச்சேரிகளில் வழங்கப் பெறுகின்றன. டேப் ரிகார்டர்கள், அதிக நேரம் பாடும் இசைத் தட்டுக்கள், ஸ்டீ ரியோ முதலிய சாதனங்கள் சர்வ சாதார ணமாக உபயோகிக்கப் பெறுகின்றன. சைக்கிள்களில் பிரயாணம் செய்யும் தொழி லாளிகள் கூட டிரான்ஸிஸ்டர் ரேடியோக் களை மாட்டிக்கொண்டு சங்கீதம் கேட்டுக் கொண்டே வேலைக்குச் செல்கின்றனர். இசைப்பள்ளிகளும் நடனப் பள்ளிகளும் நூற்றுக்கணக்கில் பெருகி அனேக ஆசிரி யர்களுக்கு ஜீவன உபாயமாக இருந்து வருகின்றன. ஒவ்வொரு சர்வகலாசாலை யிலும் சங்கீதப் பகுதிகள் ஏற்படுத்தப் பட்டு மாணவர்கள் உயரிய பட்டங்களைப் பெற உதவுகின்றன. பல வித்வான்களும் நடனமணிகளும் சொந்தத்திலேயே பள்ளி களை நடத்தி சங்கீத நாடக சங்கத்தின் உதவியைப் பெறுகின்றனர். சென்னை, சிதம்பரம், மதுரை முதலிய பட்டணங்களி லுள்ள இசைக் கல்லூரிகளிலும், வட இந் தியாவில் தமிழர் மிகுதியாக வாழும் நகர் களிலும் நமது சங்கீத, நடன ஆசிரியர் களுக்கு நல்ல பிழைப்பு நடந்து வருகிறது.

பல பாடகர்கள் சொந்த சாகித்தியங் கள் இயற்றி அப்பாடல்களையே தங்கள் கச்சேரிகளில் பாடி வருகின்றனர். பழைய ராகங்களுள் பல மறைந்து போய் புதுப்புது ராகங்கள் தோன்றி நமது இளம் பாடகர்க ளால் பிரபலப்படுத்தப் பெற்று நமது இளை ஞர்களின் மனத்தைக் கவர்கின்றன. வாத் திய இசையிலும் பல மாறுதல்கள் ஏற்பட்டு வருவது இயற்கையே. வீணை, வயலின், புல்லாங்குழல் ஆகிய இசைக் கருவிகள் சேர்ந்து வாசிக்கப் பெறுகின் றன. இசையுலகில் புதுமையைப் புகுத்தும் ஒரே நோக்கத்துடன் ஒரு வித்வான் வீணைக்குத் தவிலை பக்க வாத்தியமாக வைத்துக் கொண்டு அனைவரையும் வியப் பில் ஆழ்த்தினர்.

சங்கீதம், நாட்டியம் ஆகிய கலைகளை விளக்கும் நூல்கள் பல தமிழில் வெளிவந் துள்ளன. தியாகராஜர் போன்ற மகான் கள் இயற்றியுள்ள இசை நாடகங்கள் தமிழ் மொழிபெயர்ப்புடனும், சுர தாளக்குறிப்புக் களுடனும் அச்சிடப் பெற்று வருகின்றன. இது போலவே அண்ணாமலை சர்வகலா சாலையும், சென்னை தமிழிசைச் சங்கமும் தமிழ்ப் பாடல்களைத் தொகுத்து பல பாகங் களாக வெளியிட்டுள்ளன. பல இயலிசைப் புலவர்கள் தாங்கள் இயற்றியுள்ள பாடல் களுக்கு சுரம் அமைத்துப் புத்தக உருவில் வெளியிட்டு வருகிறார்கள். நமது இசைக் கருவிகளிலிருந்து இன்னும் சிறந்த ஓசை பிறக்குமாறு பல புதிய மின்சார சாதனங் கள் பொருத்தப்படுகின்றன. திருவையாற் றில் நடைபெறும் தியாகராஜ ஆராதனை, திருவண்ணாமலையில் நடைபெறும் அருண கிரிநாதர் விழா, டிஸம்பரில் சென்னையில் நிகழ்த்தப் பெறும் சங்கீத விழாக்கள் ஆகியவற்றைப் பல்லாயிரக் கணக்கான மக்கள் கண்டு களிக்கின்றனர்.

சிறந்த கலைவாணர்களுக்குப் போதிய ஆதரவும் உற்சாகமும் அளித்து அவர் களைக் கலைத் தொண்டில் ஆர்வத்துடன் ஈடுபடச் செய்ய வேண்டுமென்ற நோக்கத் துடன் மத்திய அரசாங்கமும் மாநில அரசு களும் பல திட்டங்கள் வகுத்துள்ளன. டெல்லி சங்கீத நாடக அகாதெமியும், மாநில சங்கீத நாடக சங்கங்களும் ஆண்டு தோறும் சிறந்த கலைவாணர்களுக்கு விருது களும், சன்மானங்களும், பதக்கங்களும், உபகாரச் சம்பளங்களும் அளித்து வருகின் றன. டெல்லி அகாதெமியின் சன்மானம் தற்பொழுது தலா ரூ 5000 ஆக உயர்த் தப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

இதைத் தவிர வித்துவான்களுக்கு ஜனாதிபதியின் பரிசுகளும், மாணவர்களுக்கு தாராளமாக உபகாரச் சம்பளங்களும் மத்திய சர்க்கார் அளித்து வருகிறது. நம் நாட்டுக் கலைவாணர்கள் பிற நாடுகளுக்குச் சென்று அங்கு தங்கள் கலைத் திறனைக் காட்ட போதிய வாய்ப்புகளும் அளிக்கப் பெற்று வருகின்றன. முன்னர் கலைகளையும் கலைவாணர்களையும் ஆதரித்து வந்த சமஸ்தானங்கள் இன்று மறைந்து விட்டதால், அவற்றின் ஸ்தானத்தை சர்க்காரும் பொது மக்களும் ஏற்றுக் கொண்டு கலைஞர்களுக்கு ஆதரவும் ஊக்கமும் அளித்து வருவது இயற்கையேயல்லவா ?

### இசைக்கலை உயர்கிறதா?

நமது கலைகளுக்கும் கலைவாணர்களுக்கும் இத்தகைய ஆதரவும் கிடைத்து வருவது பற்றிப் பெருமையும் மகிழ்ச்சியும் அடையாத தமிழன் இருக்கமுடியாது. ஆயினும் இவ்வளவு ஆதரவு அளிக்கப் பெற்று வந்தும் நமது கலைகளின் தரம் உயர்ந்திருக்கிறதா என்ற கேள்வி பல ரசிகர்களின் உள்ளத்தைவாட்டிவருகிறது. சுமார் 50 வருடங்களுக்கு முன்புவரையில் தமிழ்நாட்டில் இராமநாதபுரம் பூச்சி அய்யங்கார், கோனேரிராஜபுரம் வைத்தியநாதய்யர், மதுரை புஷ்பவனம் அய்யர் என்ற மூன்று மகா வித்வான்கள் கர்நாடக சங்கீத உலகின் இணையற்ற நட்சத்திரங்களாக விளங்கி வந்தனர். இவர்களுக்குச் சமானமான அந்தஸ்து உடைய வயலின் வித்வான்களும், மிருதங்க வித்வான்களும், வீணை வாசிப்போரும் மற்ற வாத்தியக்காரரும் அக்காலத்தில் இருந்தனர். 1920க்கு பிறகு சங்கீத உலகில் பிரபலமாக விளங்கியவர்களுள் மகாராஜபுரம், அரியக்குடி செம்பை, முசிரி,செம்மங்குடி, மதுரைமணி ஆலத்தூர் சகோதரர்கள் ஆகியோரை முக்கியமாகக் குறிப்பிடலாம். மகாராஜபுரம், அரியக்குடி போன்ற இசைமணிகள்

ஏறக்குறைய அரை நூற்றுண்டு காலம் இசையுலகில் புகழ் மங்காது கச்சேரிகள் செய்தனர். இவர்களுடைய ஸ்தானங்களை இட்டு நிரப்புவதற்குத் தகுதியுள்ள இளம் வித்வான்கள் தோன்ற வில்லையென்பது பலருடைய அபிப்பிராயம். மேலும், மிக விரைவாக முன்னேறிக்கொண்டு வந்த சில இளம் வித்வான்கள் தங்களுடைய பதவிகளை நிலை நிறுத்திக்கொள்ள முடியாமல் நடுவில் நின்றுவிட்டது வருந்தத்தக்க விஷயமாகும்.

முதற்கூறிய சீனியர் வித்வான்கள் அனைவரும் குருகுலவாசம் என்ற கடினமான கல்வி முறையில் தேறி வந்தவர்கள். மனம்போனபடி பாடுவது, சம்பிரதாயத்தைப் புறக்கணிப்பது முதலியவை முறையன்று என்று பய பக்தியுடன் மனப்பூர்வமாக நம்பியவர்கள். தற்பொழுதுள்ளகால நிலையில் குருகுலவாசம் என்ற முறையை மீண்டும் அனுசரிப்பதுமுடியாத காரியம் என்று அனைவரும் அறிவர். ஆயினும் தற்காலத்து இளம் வித்வான்களுக்கு இருக்கும் பல வசதிகள் பழைய நாள் வித்வான்களுக்குக் கிடைத்ததில்லை. பல கச்சேரிகளைக் கேட்கும் வசதி, புத்தகங்களைப் பார்த்து ராக லக்ஷணங்களையும் சாகித்தியத்தையும் சரிசெய்து கொள்ளல், சங்கீத மகாநாடுகளில் கலந்து கொள்வது, ரேடியோ, டேப் ரெகார்டர்கள் மூலம் தங்கள் ஞானத்தை விருத்தி செய்து கொள்வது போன்ற வசதிகள் தற்காலத்து வித்வான்களுக்கு எளிதில் கிடைக்கின்றன. ''புத்தி கூர்மையுள்ள தற்காலத்து இளம் வித்வான்கள் எதை வேண்டுமானாலும் குருவின் உதவியின்றிக் கற்றுக்கொள்ள வசதிகள் உள்ளன. எங்கள் காலத்தில் அவை இல்லை'' என்று பண்டித ரவிசங்கர் வருத்தத்துடன் கூறுகிறார்.

ஆகவே தற்காலத்து இளம் வித்வான்கள் போதிய அளவிற்கு முன்னேறுததற்கு ஏதோ காரணங்கள் இருக்க வேண்டும். இவர்களுள் பெரும்பான்மையோர் புத்திசாலிகளாகவும், படித்தவர்களாகவும் இருப்பதால் இக்காரணங்களை அவர்களே யோசித்துப் பார்த்து ஊகிக்க வேண்டும். இவர்களுக்குப் பழைய 'கர்நாடக' வழிகளில் ஓரளவு வெறுப்பும் அசிரத்தையும் ஏற்பட்டிருப்பது ஒரு காரணமாக இருக்கலாம். இதன் விளைவாக சில வித்வான்கள் அபூர்வ ராகங்கள், அபூர்வ கீர்த்தனைகள் சொந்த சாகித்தியங்கள் ஆகியவற்றை ஓயாது பாடி வருகிறார்கள். ஒவ்வொரு கீர்த்தனைக்கும் கற்பனை ஸ்வரம் பாடும் வழக்கமும் அதிகமாகி வருகிறது. ஒரு கச்சேரியில் அளவுக்கு மீறி கற்பனை ஸ்வரம் பாடிய ஒரு வித்வானை நோக்கி தருமபுரம் ஆதீன கர்த்தர் ஒருவர் ''உங்கள் கச்சேரியில் ஊறுகாய் நிறையவும் சாதம் குறைவாகவும் இருந்தது'' என்று கூறினாராம். அபூர்வ ராகங்களையே பாடும் வித்வான்களைப்பற்றியும் நாம் அவ்விதமே நினைக்க நேரிடுகிறது.

நிற்க, நமது சங்கீதத்தின் நுட்ப அழகுகள் அனைத்தும் தியாகராஜர் போன்ற பெரியோர்களின் சாகித்தியங்களில் பொதிந்து கிடக்கின்றன. அவற்றை நீக்கிவிட்டால் அந்த கச்சேரிகள் களையிழந்து போவதில் வியப்பொன்றுமில்லை.

தினமும் சாதகம் செய்து சாரீரத்தைப் பண்படுத்தும் நல்வழக்கமும் நமது வித்துவான்களிடையே குறைந்து வருகிறது. ஒலி பெருக்கி வருவதற்கு முன், உயர்ந்த சுருதியில் கணீரென்று வித்வான்கள் பாடி வந்தனர். அவ்விதம் பாடாவிடில் அவர்கள் கச்சேரியே செய்திருக்க முடியாது.

தற்சமயம் ஒலி பெருக்கியின் உதவி கிடைப்பதால் இளம் வித்வான்கள் கூட சுருதியை மிகவும் குறைவாக வைத்துக் கொள்கின்றனர். ஒலி பெருக்கி வைத்தால் வாசிப்பதில்லை என்று மிருதங்க வித்வான் பாலக்காடு மணி அய்யர் சபதம் செய்து அதைப் பாதுகாத்து வருவது குறிப்பிடத்தக்கது.

சாரீர விஷயத்தில் நமது வித்வான்கள் இந்துஸ்தான் பாடகர்களிடம் கற்றுக்கொள்ளவேண்டியது நிரம்ப இருக்கிறது. இந்துஸ்தானி சங்கீதத்தில் மூன்று ஸ்தாயியும் மூன்று காலமும் பேசாத சாரீரமுடைய ஒருவர் வித்வானென்ற பெயருடன் மேடை ஏறிவிட முடியாது. நமது வாத்தியக்காரர் காரர்களும் போதிய அளவுக்கு சாதகம் செய்வதில்லை. "வீணை 12வருட வாத்தியம் 12 ஆண்டுகள் சாதகம் செய்த பிறகே ஒருவர் மேடை ஏறமுடியும் என்று காரைக்குடி சாம்பசிவய்யர் அடிக்கடி கூறுவதுண்டு. சாதக பலத்தினுல் சாதிக்கக் கூடியதை புத்தி சாமர்த்தியத்தால் சாதித்துவிடலாம் என்று சில வித்துவான்கள் நினைப்பது தவறு.

## ரேடியோவின் இசைத்தொண்டு

நமது தேசத்து சாதாரண மக்கள் சங்கீதம் கேட்பதற்குப் பெரும்பாலும் ரேடியோவையே நம்பிவாழ்கின்றனர். ஒவ்வொருநாளும் அ.இ.ரேடியோ ஒலிபரப்பும் மொத்தம் 7-00மணி நேரத்தில் 3-00 நேரம் இசைக்காக செலவிடப்படுகிறது. தற்காலத்தில் பிரபலமாக விளங்கிவரும் பாடகர்கள் பலர் ரேடியோவின் மூலமாகவே முன்னுக்கு வந்தவர்கள். ஒவ்வொரு சனிக்கிழமையும் ரேடியோ அளிக்கும் "நாஷனல் புரோகிராமும்". சங்கீத சம்மேளனங்களும் இசைக்குச் சிறந்த தொண்டாகும். நூற்றுக்கணக்கான சங்கீத வித்வான்கள் அகில இந்திய ரேடியோவின் 66 நிலையங்களில் பணி ஆற்றுகின்றனர். தற்சமயம் இந்திய நாட்டில் ஒரு கோடியே பத்துலட்சம் லைசென்ஸ் பெற்ற ரேடியோக்கள் இயங்கி வருகின்றன.

நமது சங்கீதத்தில் அறிமுகப்படுத்தப் பட்டுள்ள புதிய அம்சங்களுள் பலவும் ரேடியோவின் மூலம் ஒலி பரப்பப் பெற்றனவே. இவற்றுள் முக்கியமானது வாத்திய கோஷ்டி இசை. பல ஆண்டுகளுக்கு முன்னர் சென்னையில் பேராசிரியர் சாம்பமூர்த்திஅவர்கள்ஒருவாத்தியகோஷ்டியை நிறுவி வெற்றிகரமாக நடத்தி வந்தார். அகில இந்திய ரேடியோ வாத்தியக்குழு 1949ல் பண்டித ரவிசங்கரால் அமைக்கப்பெற்றது. பின்னர் சங்கீத கலாநிதி டி. கே. ஜயராமய்யர் அவர்கள் தமது மேதையினுல் பல புதிய இசை வடிவங்களைப் படைத்து வாத்திய கோஷ்டியின் உதவிகொண்டு வழங்கினுர். தற்சமயம் இந்த வாத்திய கோஷ்டியை நிர்வகித்து வரும் ஈமனி சங்கர சாஸ்திரியவர்களும் பல புதிய ஸ்வரக் கோவைகளை இயற்றி நமது நாட்டிலும் அயல் நாடுகளிலும் புகழ்பெற்றிருக்கிருர்.

சாஸ்திரீய சங்கீதத்தைப் போற்றி வளர்ப்பதுடன் ரேடியோ நிர்வாகிகள் நாட்டிய இசை, பக்திப் பாடல்கள், திரைகானம் நாடோடிப்பாடல்கள், வில்லுப் பாட்டு முதலியவற்றிற்கும் ஆதரவு

அளித்து வருகிருர்கள். இல்லாவிடில் இக்கலை வடிவங்கள் காலப் போக்கில் மறைந்துவிடக்கூடும். திருச்சி, பாண்டிச்சேரி ஆகிய ரேடியோ நிலையத்தினர் தமிழ் இசைக்கும் தமிழ் நாட்டின் மற்ற கலை வடிவங்களுக்கும் முக்கியத்துவம் கொடுத்துவருவது இயற்கையேயாகும்.

### கடல் கடந்த தென்னிசை

கர்நாடக இசை கடல் கடந்து அமெரிக்காவிலும் கானடாவிலும் பரவிக் கொண்டு வருவது ஒவ்வொரு தமிழனும் பெருமை கொள்ளவேண்டிய விஷயம். தற்சமயம் அமெரிக்காவில் நான்கு சர்வ கலாசாலைகளிலும் கானடாவில் டாரண்டோ யார்க் சர்வகலாசாலையிலும் தென்னிந்திய இசை கற்பிக்கப்படுகிறது. கர்நாடக இசை பயின்ற அமெரிக்க மேதை ஜான் ஹிக்கின்ஸ் கானடாவில் பணி யாற்றுகிருர். சிலப்பதிகாரத்தில் விளக்கப் பெறும் இசை நுணுக்கங்களை ஆராய்ந்த பேராசிரியர் எஸ். ராமநாதன் வெஸ்லியன் சர்வகலாசாலையில் வீணையும் வாய்ப்பாட்டும் கற்பிக்கிருர். தேவார - திவ்விய பிரபந்த திசையைப்பற்றிய சிறந்த தொரு ஆராய்ச்சி நூலை இவர் தற்சமயம் ஆங்கிலத்தில் எழுதி வருகிருர்.

கர்நாடக இசையையும் பரத நாட்டியத்தையும் பயிலப் பல அமெரிக்க யுவர்களும் யுவதிகளும் தமிழ் நாட்டிற்கு வந்து தகுந்த ஆசிரியர்களிடம் பயிற்சி பெறுகின்றனர். பரத நாட்டியக்கலை தமிழ் நாட்டிற்கே சொந்தமான ஓர் உன்னதக் கலை வடிவமாகும். இதற்கு ஒரு தனிச் சிறப்பை ஏற்படுத்தி வெளி நாட்டினரும் அதை வியந்து கொண்டாடுமாறு செய்த பெருமை கலாக்ஷேத்திரத்தின் தலைவியாகிய ருக்மிணி தேவியையே சார்ந்த தாகும்.

### நமது கலைகளின் எதிர்காலம்

தென்னிந்திய இசை விரைவாக மாறிக்கொண்டு வருவது போலவே நாட்டியக் கலையும் நாடக மேடையும் பலவித மாறுதல்களுக்கு ஆளாகிக்கொண்டு வருகின்றன. பொதுஜனங்களின் ருசியில் ஏற்பட்ட மாறுதல் காரணமாக புராண சம்பந்தமான நாடகங்கள் வரவரக் குறையலாயின. சரித்திரத்தை அடிப்படையாகக் கொண்ட "ராஜராஜ சோழன்" முதலிய மகத்தான நாடகங்களும் சில காலமே பொதுமக்களைக்கவர்ந்தன. தற்சமயம் நாடக அபிமானிகள் விரும்பிப் பார்ப்பது சமூக நாடகங்களே. இவை பெரும்பான்மையும் கதைப்போக்கு, மக்கள் விரும்பி ரசிக்கும் சம்பாஷணைகள், நகைச்சுவை, சினிமாவை ஒட்டிய சம்பவங்கள், அரசியல் கருத்துக்கள் இவற்றை அடிப்படையாகக் கொண்டவை. ஆனுல் இவற்றுள் பல வெறும் பொழுது போக்காக முடிந்து விடுகின்றனவே தவிர இலக்கியத்திலோ நாடகத் தமிழிலோ இடம் பெறக்கூடியவையாக இல்லையென்பது வருந்தத் தக்க விஷயம். உண்மையில், நாடகத் தமிழ் என்பதற்கு இலக்கியமாகக் கருதக்கூடிய ஒரு நாடகமும் தமிழ் மொழியில் இல்லை.

எதிர்காலத்தில் நமது கலைகளுக்குத் தேவையான ஆதரவிற்கு என்றுமே குறைவிராது தற்பொழுது கலை அரங்குகளில் காணப்பெறும் இட நெருக்கடியே இதற்குப் போதிய சான்ருகும். ஆயினும் கலையென்பது வெறும் பொழுது போக்கு சாதனம் அல்ல. ஒரு நாட்டின் பாண்பாட்டிற்கும் நாகரிகத்திற்கும் அதன் கலைகளே சின்னங்கள். மானிட சாதியை முன்னேறச் செய்து உன்னத நிலைக்கு உயர்த்துவதும் கலைகளே. நமது நாட்டிற்கு விஜயம் செய்யும் வெளிநாட்டினரும் நமது கலைகளைக் கொண்டே நமது நாகரிகத்தை மதிப்பிடுகின்றனர். இசை முதலிய கலைகள் பலருக்கு ஜீவன உபாயமாக விளங்குகிறதெனினும் நமது கலைவாணர்கள் அவற்றை வெறும் தொழிலாகக் கருதாமல் கவுரவத்துடனும் பய பக்தியுடனும் பாதுகாத்துத் தூய்மை கெடாமல் பயிலுவது அவர்களது கடமையாகும். ●

தொடர் ; 2

# திருப்பாவையில் திருக்குறள்

— P. துரைசாமி, B. A.

இயன்ற வழிகளிலெல்லாம், முடிந்த வரையில், அறவினை ஓம்பவேண்டுமென்பது வள்ளுவர் கட்டளை. "இப்போது நாம் எளியவர்களாக இருக்கின்றோம், செல்வம் வந்துற்றபோது அறப்பணி செய்குவோம்" என எண்ணுவது இழுக்கு. இதைத் தள்ளிப் போடாது அவ்வப்போதே செய்வது அறிவுடைமை, அவ்வாறு செய்யும் அறவினை பொன்றுங்காலத்துப் பொன்றாத்துணையாக முன் வந்து நிற்கும் என்பது வள்ளுவர் கூற்று. ஆகவேதான் வாழ்க்கை, அன்பும் அறனும் உடையதாக இருக்கவேண்டும், அதுவே பண்பும் பயனுமாக அமையும் என்று கூறுவார். முப்பாலிலும் அறக் கருத்துக்கள் விஞ்சியிருப்பதைக் காண்கின்றோம். ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே செல்லும் வாயெல்லாம் செயல்" என்றும், "அன்றறிவாம் எண்ணாது அறஞ் செய்க மற்றது பொன்றுங்கால்-பொன்றாத் துணை யென்றும், "அறத்தான் வருவதே இனப மென்றும்," "அறத்தினூங்கு ஆக்கம் இல்லை"யென்றும், வள்ளுவர் வற்புறுத்தும் பான்மையை ஓர்க. இக்கருத்தையே ஆண்டாள் தம் திருப்பாவையில் வைத்துப் பேசுகின்றாள். "ஐயமும் பிச்சையும ஆந்தனையும் கைகாட்டி உய்யுமாறு எண்ணி உகந்து ஏலோர்" என்பது அவள் விடுக்கும கட்டளை யாகும். தகுதியுள்ள, தவம நிறைந்த, பெரியோர்களுக்கு உரிய காலத்தில் தேவை அறிந்து கொடுப்பது, "ஐயமாகும்," "ஐயமிட்டுண்" என்ற ஔவையார் அறிவுரையைக் காண்க. தாழ்ந்த நிலையிலுள்ளவர்களின் வறுமையை உணர்ந்து, உதவி செய்வது "பிச்சையாகும்". இயன்ற வரையில், இருபாலர் மாட்டும், உதவி செய்வதையே வாழ்க்கையின் நெறியாகக் கொள்ளவேண்டும். "ஆந்தனை" என்ற ஆண்டாள் சொல்லில், "ஒலலும் வகையான்" என்ற வள்ளுவர் தொடரில் கூறும் கருத்து தெரிவிக்கிறது. கை எவ்வளவு கொடுத்தாலும், "நாம் என்ன கொடுத்து விட்டோம்" என்று நெஞ்சு நினைக்கும்படி ஒரு சிறிதும் செருக்கு இல்லாமல் கொடுத்து உதவவேண்டும், என்பதை "கைகாட்டி" என்ற சொல் தெளிவுபடுத்துகிறது. எந்த உதவியையும் இவ்விருவர் மாட்டும் செய்ய வகையிலாதவனுக்கு, தன்னை வந்து இரப்போர்களுக்கு, கொடுப்போர் – இடத்தை யாவது வாய் திறந்து கூறு நிலையிலும், கையைக் காட்டியாவது அறவினை செய்க என்ற கருத்தையும் பெறவைக்கின்றது. ஆக இயன்ற அளவு மற்றவர்களுக்கு உதவி புரிந்து வாழும் வாழ்க்கையை அறவாழ்க்கை யாகும், என்பது ஆண்டாள் வற்புறுத்தும் கருத்தாகும். செல்வம், இரவலர்கட்கு ஈதலுக்கும் விருந்தோம்புதலுக்கும் சாதனம் என்பதை

"பெருந் தடங்கண் பிறை நுதலார்க்
கெல்லாம்
பொருந்து செல்வமும் கல்வியும்
பூத்தலால்
வருந்தி வந்தவர்க்கு ஈதலும்
வைகலும்
விருந்தும் அன்றி விணைவன யாவையே!"

எனக் கம்பர் கூறுவர். கோசல நாட்டு மகளிர்க்கு, செல்வமும் கல்வியும் ஒருங்கே உண்டாகியிருத்தலினால், நாள்தோறும் வறுமையினால் வருந்தித் தம்பால் போந்தோர்க்கு அவர்கள் வேண்டுவன கொடுத்தலும் விருந்தினர்க்கு விருந்திடலுமின்றி, வேறு சிறந்த அறச்செயல்கள் ஒன்றுமில்லை என்பது இதனாற் பெறப்படும் கருத்தாகும். "ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே செல்லும் வாயெல்லாம் செயல்" என்ற வள்ளுவர் குறட்பா "ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி உய்யுமாறு

எண்ணி உகந்து ஏலோர்'' என்ற பாவை வரியினை நினைவுபடுத்துகின்றதல்லவா?

நாட்டை ஆள்பவன் நடுவு நிலையோடு ஆட்சியை நடத்துவதே ''செங்கோன்மை'' என்று வள்ளுவர் கூறுவார். நாடாள்பவர்க்கு மன்னருக்குரித்த மிடுக்கான தோற்றப் பொலிவு மட்டும் இருந்தால் போதாது: அரசோச்சுங்கால், தம் செய்கையை நன்கு ஆராய்ந்து. கண்ணோடாமல், நடுவு நிலைமை பொருந்த யாவர் மாட்டுந்தேர்ந்து, ஆணைபடுத்த வேண்டுமென்பது வள்ளுவர் அரசற்கு வகுத்த இலக்கணமாகும். ''தமக்கு இவர் வேண்டியவர், அவர் மாட்டு நல்லது செய்குதும்!'' என நினைக்கும் மன்னன் ஒருபால் கொடுந்தன்மையுடையவன். தன்னினத்தவர் மட்டுமே வாழவேண்டும்: மாறுபட்ட கருத்துள்ளவர்கள் ஒடுங்க வேண்டும், தன்னிச்சைப்படியே செங்கோலோச்ச வேண்டுமென எண்ணும் மன்னன் கொடுங்கோலன். ''ஓர்ந்து கண்ணோடாது, இறைபுரிந்து, யார் மாட்டும் தேர்ந்து செய் அஃதே முறை'' என்ற குறள் மேற்கண்ட கருத்தை வலியுறுத்துவதாகும். இக்கருத்தை திருப்பாவையில் சிங்கப்பாட்டில் காண்கின்றோம்.

சிங்கம் கம்பீரமாகப் புறப்பட்டு வருதல் போல, யசோதை இளஞ்சிங்கமும் புறப்பட்டு வரவேண்டுமென்பது ஆயர்பாடிச் சிறுமியர் கோரிக்கையாகும். வருகின்ற ராஜசிங்கம், சீரிய சிங்காதனத்திருந்து வந்தவர்கள் காரியத்தை ஆராய்ந்து அருள் செய்யவேண்டுமாம். சிற்றஞ் சிறுகாலே சிறுமியார் வந்துள்ளார்களே, அவர்கள் பால் இரக்கங்கொண்டு அருளவேண்டுமென்று, ஆயர்ச்சிறுமிகள் விரும்பவில்லை. கண்ணன் பெற்றம் மெய்த்துண்ணும் குலத்தில் பிறந்தமையால், ஆயர்பாடி வாழ் மக்களுக்கு மட்டும்தான் அருளவேண்டுமென்று அவர்கள் கேட்கவில்லை. சிம்மாதனத்து அமர்ந்து கோலோச்சும் மன்னன், ''ஓர்ந்து கண்ணோடாது இறை புரிந்து யார் மாட்டுந்தேர்ந்து செய்வதுபோல, கண்ணனும் சிற்றஞ்சிறு காலே வந்த சிறுமியர்கள் ''தூயோமாய் வந்துள்ளார்களா'', அல்லது ''இற்றைப்பறை கொள்வான்'' வேண்டி வந்துள்ளார்களா என்பதை ஆராய்ந்து அருளவேண்டுமென்று முறையிட்டுக்கொள்கிறார்கள். மன்னவன் கோல் கண்ணோடாதும், ஒருவர்பாற்கோடாதும் செல்லுதல் போல, இறைவன் வழங்கும் அருளும் ஆராய்ந்து, அஃது உரியார் மாட்டே செல்லவேண்டுமென்பது ஆயர்பாடிச் சிறுமிகள் விண்ணப்பமாகும். கோல்கோடா மன்னன் முறை செய்வதுபோல, இறையருளும் நிகழவேண்டுமென்பது ஆண்டாளின் சிங்கப் பாட்டு வற்புறுத்துவதாகும். ''முறை செய்து காப்பாற்றும் மன்னன் மக்கட்கு இறையென்று வைக்கப்படும்'' என்ற குறள் இறையருள் நிகழும் முறையை உணர்த்துவதன்றோ? அருள் பெற உரியார் மாட்டே இறைவன் கருணை செல்லவேண்டுமென்று இக்குறள் வற்புறுத்துவது நமக்கு விளங்குகின்றதன்றோ? ஆண்டாள் சிங்கப் பாட்டில் ''கோப்புடைய சீரிய சிங்காதனத் திருந்து யாம் வந்த காரியம் ஆராய்ந்து அருளேலோர்'', என வரும் வரிகள், வள்ளுவரின் ''ஓர்ந்து கண்ணோடாது இறைபுரிந்து யார் மாட்டும் தேர்ந்து செய் அஃதே முறை'' எனவரும் குறட் கருத்தோடு ஒப்பத் தோன்றுகின்றதல்லவா?

இம்மை வாழ்க்கைக்குச் செல்வம் அவசியம் என்று வள்ளுவர் கூறுவார். ''பொருளில்லார்க்கு இவ்வுலகமில்லை அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை'' என்பது அவர் வாக்கு. பொருளல்லவரை ஒரு பொருளாகச் செய்வது பொருளாதலாலும், செருநர் செருக்கு அறுக்கும் கூரிய எஃகாதலாலும், ''பொருளை செய்க'' என்றே கூறுவார். ஆனால் அப்படிப்பட்ட பொருள் அருளோடும் அன்போடும் வரவேண்டும், அவ்வாறுன. பொருளால் துய்க்கப்பெறும் வாழ்வுதான் அறனோடு அமைந்த இன்ப வாழ்வாக மலரும் என்பது, வள்ளுவர் பொருளாதாரக் கொள்கையாகும். எப்படியும் பொருள் சமபாதிக்கவேண்டும் என்பது வள்ளுவர் கூறும் நெறியல்ல. இப்படித்தான் பொருள் செய்ய வேண்டுமென்று வற்புறுத்தவே ''அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம் புல்லார் புரளவிடல்'' என்பார். இக்கருத்து பாவைப் பாட்டிலே அழகுற வருகிறது.

ஆயர்பாடிச் சிறுமிகள் கண்ணனின் அருள்வேண்டி அவனை நாடுகின்றார்கள். கண்ணா, உன்னை ''அருத்தித்து வந்தோம், பறை தருதி ஆகில், திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம்பாடி. வருத்தம் தீர்ந்து மகிழ்ந்தேலோர் என்பாவாய்'' என்று தங்கள் குறை இரக்கின்றார்கள். தங்களுக்குச் செல்வம் வேண்டும்; ஆனால் அது ''திருத்தக்க செல்வமாக'' அமையவேண்டுமென்பது அவர்கள் அவா. திருவோடு கூடிய செல்வம்தானே திருத்தக்க செல்வமாகும். திரு நீங்கினால் அது கூடாத செல்வம்; வெஃகியோ வேறுமுறையிலோ சம்பாதித்த செல்வம்: நேர்மையான முறையிலும் ஒழுங்கான வழிகளிலும் செல்வம்கூட வேண்டுமென்பது அவர்கள் விருப்பம். திருத்தக்க செல்வம் பெற்றால்தான் வருத்தமிலா வாழ்க்கை மேற்கொளமுடியுமென்பது அவர்களுடைய அசைவிலா நம்பிக்கையாகும். திருத்தக்க செல்வமே, மகிழ்ச்சியைத் தரும் வாழ்வாக அமையும் என்பதையும் அவர்கள் நன்கு உணர்ந்திருந்தார்கள். குறை இரந்து பெற்ற செல்வம் கூடாச் செல்வமாக அமையாமல், திருந்திய தெய்வ அருளோடு கூடிய செல்வமாகப் பெற வேண்டுமென்பதில் அவர்களுக்கு எத்துணை அக்கறை! தகாத வழிகளால் செல்வம் பெற்றோர் உற்ற இடுக்கணை ஆண்டாள் உணர்ந்திருக்கவேண்டும். ஆகவேதான் வரும் செல்வம் திருந்திய செல்வமாக இருக்கவேண்டுமென்று இறைவனிடத்திலே இறைஞ்சுகின்றாள். ''திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம்பாடி வருத்தமும் தீர்ந்து மகிழந்தேலோ எம்பாவாய்'' என்ற பாவை வரிகள், ''அருளோடும் அன்போடும் வாரா பொருளாக்கம் புல்லார் புரளவிடல்'' என்னும் குறள் நெறியை வற்புறுத்துவதன்றோ?

''பகுத்துண்டு பல்லுயிர் ஒப்புதல் நூலோர் தொகுத்தவற்றுள் எல்லாம் தலை'' என்பது வள்ளுவர் கூறும் சோசிலிச கருத்தாகும். அற்றார் அழி பசி தீர்த்தலும், மேலுலகம், இல்லெனினும் ஈதலே நன்று எனக் கோடலும், ஈதல் இசைபட வாழ்தலும், அதுவே உயிர்க்கு ஊதியமெனக் கொளலும், வாழ்க்கை நெறி யென வள்ளுவர் மேலும் வற்புறுத்திக் கூறுவார். ஈத்துவக்கும் இன்பம் அறியாதவர்கள் பொருளை வைத்திழக்கும் வன்கணார் என்று ஈயாத பெருமக்களை இழிந்து பேசுவார். செல்வம் ஒரே வழித் தேங்காகல் பரவலாக்கப்பட வேண்டுமென்பதே, பகுத்துண்டு பல்லுயில் ஓம்பவேண்டுமென்று கூறுவதின் உட்கருத்தாகும். இக் கருத்து பாவைப் பாசுரத்தில் பேசப்படுகிறதென்றால், நமக்கு வியப்பாகத் தோன்றுகிறதல்லவா?

ஆயர்பாடிச் சிறுமியர் கண்ணனிடம் சில வேண்டுகோள் விடுக்கின்றனர். இறைவன் சன்மானம் தரவேண்டுமாம். அது நாடு புகழும் பரிசாக இருக்க வேண்டுமாம். முன்னைப் பாட்டில் திருத்தக்க செல்வத்தைக் கேட்டார்களல்லவா? அக்கருத்தை மேலும் வற்புறுத்துமாப்போல, அச்செல்வம் எல்லோரும் மெச்சத் தங்களுக்கு நேர்மையான வழியில் கிடைக்கவேண்டுமென்று விரும்புகிறார்கள். அவர்களுக்கு ஆடை வேண்டுமாம். ஆடகம் தோள்வளை, தோடு, செவிப்பூ, பாடகம், போன்ற பல்கலன்கள் வேண்டுமாம். இவ்வளவும் பெற்று, புனைந்து, பொங்கிய பாற்சோறு இறைவனுக்குப் படைக்க வேண்டுமாம், படைத்த பாற்சோற்றை தாங்கள் மட்டும் தனித்து உண்ணாமல் பல்லோருடனும் ஒருசேர இருந்து, உண்ண வேண்டுமாம். இறைவனுடைய திருவருட் செல்வத்தைத் தனித்துப் பெறாமல் எல்லோரும் சேர்ந்து பெற்று, இன்புற மாந்த வேண்டுமென்பதே அவர்கள் மாட்டு எழுந்த வேட்கையாகும். தானே உண்டல், 'சாவா மருந்தெனினும் வேண்டற்பாற்றன்று' அல்லவா? பிறரைப் பசியென்னும் தீப்பிணித்தீண்ட, தான் பசியாறல் கொடுமையல்லவா? இதை உணர்ந்த பாவைப் பாட்டுச் சிறுமியர்கள், கூடியிருந்து உண்ண வேண்டுமென்று விழைகின்றார்கள். ''பாற்சோறு மூட நெய் பெய்து முழங்கை வழிவாரக் கூடி இருந்து குளிர்ந்தேலோர் எம்பாவாய்'' என வரும் பாவை வரி, ''பகுத்துண்டு பல் உயிர் ஓம்புதல் நூலோர் தொகுத்தவற்றுள் எல்லாம் தலை'' என்ற வள்ளுவன் குறட்பா கருத்தோடு ஒப்ப வருகிறதல்லவா?

ஆக, வள்ளுவன் கருத்துக்கள் பாவைப் பாட்டில் பல இடங்களில் பளிச்சிடுவதைக்

காண்கின்றோம் ஆண்டாள் திருக்குறட் கருத்துக்களை எங்ஙனம் ஆள்கின்றாள் என்பது நமக்கு இப்போது விளங்குகிறதல்லவா? அருள் நூலிலே அறக்கருத்துக்கள் தெரிப்பதைத் தெற்றெனக் காண்கின்றோம். கோதைத் தமிழ் மாலையில் குறட்பா உண்டு என்று சொல்வதில் வியப்பென்ன?

### திருப்பாவையும் பண்டைத் தமிழர் நாகரீகமும்

ஆண்டாள் காலம் கி.பி. ஏழாம் நூற்றாண்டெனச் சிலரும், எட்டாம் நூற்றாண்டென வேறுபலரும் கூறுவார்கள். திருப்பாவை எழுந்த காலம் இற்றைக்குச் சற்றேறக் குறைய 1200 ஆண்டுகள் எனக் கணக்கிடலாம். திருப்பாவை தோன்றிய இடம் ஸ்ரீவில்லிப்புத்தூராகும். அது கண்ணன் வாழ்ந்த ஆயர்பாடியாகப் பேசப் படுகின்றது. அங்கு வாழ்ந்தோரின் வாழ்க்கை, தமிழர் நாகரீகத்தைப் பிரதிபலிப்பதாகும். திருப்பாவை முழுவதிலும், தமிழர் அகவாழ்வும் புறவாழ்வும் பின்னிக் கிடப்பதை, அதை ஊன்றி படிப்போர் நன்கு அறிவர்.

கி. பி. ஏழாம் நூற்றாண்டில் தமிழர்கள் செல்வச் சிறப்போடு வாழ்ந்து வந்தார்கள். "மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளால்" எனத் துவங்கும் முதற் பாட்டிலேயே "சீர்மல்கும்" ஆயர்பாடி நமக்கு அறிமுகப் படுத்தப்படுகிறது.

அந்நாளில் உழவுத் தொழிலும் கால்நடை வளர்த்தலுமே மக்களுடைய முக்கிய வாழ்க்கைத் தொழிலாக இருந்தது. பருவ மழை காலத்தே பெய்து, நாட்டை வளப் படுத்தியது. மருத நிலத்து வயல்கள் செந்நெல் விளைவித்தன.

> "தீங்கு இன்றி நாடு எல்லாம்
> திங்கள் மும்மாரி பெய்து
> ஓங்கு பெருஞ் செந்நெல்
> ஊடு கயல் உகள"

என்னும் பாவைத் தொடர்வரிகள், நாட்டின் வளப்பத்தைக் கூறுவனவாகும். தீங்கு இல்லாத மழையாகவும், திங்கள் மும்மாரி பெய்யும் மழையாகவும், நாடு எங்கும் பரவலாகப் பெய்யும் மழையாகவும் இருந்தால், நாடு சிறப்புற்றிருக்கும் என்பதைக் கூறவா வேண்டும்? பருவத்தே செய்யும் பயிருக்குக் காலத்தே பெய்யும் மழை அவசியமல்லவா? திங்கள் மும்மாரி பெய்யா விட்டாலுங்கூட, பருவமழை இன்றியமையாததல்லவா? பருவ மழை பொய்யாது பெய்தது என்பதையே ஆண்டாள் குறிப்பிடுகின்றாள் போலும்.

கால்நடைச் செல்வத்தை மக்கள் போற்றிப் பாதுகாத்து வந்தார்கள். எருமைகளை, பனிப்புல் மேயக் கிழக்கு வெளுப்பதற்கு முன்பே ஓட்டிச் சென்று வரும் வழக்கம் அவர்களிடையே இருந்தது. பனிப்புல் மேய்ந்து வரும் எருமைகள் நிறையப் பால் கொடுக்கும் என்பது அவர்கள் பெற்ற அனுபவமாகும்.

> கீழ் வானம் வெள்ளென்று
> எருமை சிறுவீடு
> மேய்வான் பரந்தனகாண்"

என்ற பாவை வரிகள், பால் மிகுதியாகக் கறக்க, பனிப்புல் மேயவிடும் பழக்கத்தை குறிப்பனவாகும். அவர்களுடைய பசுக்கள் நல்ல முறையில் வளர்க்கப்பட்டதன் காரணமாக குடம் நிறையப் பால் கறந்தன.

> 'வாங்கக் குடம் நிறைக்கும்
> வள்ளல் பெரும் பசுக்கள்" எனவும்
> "ஏற்ற கலங்கள் எதிர்
> பொங்கி மீதளிப்ப
> மாற்றாதே பால் சொரியும்
> வள்ளற் பெரும் பசுக்கள்"

எனவும் அவை மதிக்கப்பட்டன. "கனைத்து இளங் கற்றெருமை கன்றுக்கு இரங்கி, நினைத்து முலைவழியே நின்று பால் சோர, நனைத்து இல்லம் சேறாக்கும்" ஆனிரைகளையே தங்களுடைய நீங்காத செல்வமாகக் கருதினார்கள். கறவைப் பசுக்களையும் பிற கால்நடைகளையும் புல்பரவிய திறந்த வெளிக்கு விடியற்காலை ஓட்டிச் சென்று மாலை திரும்புவார்கள். பகல் முழுவதும் காடுகளிலேயே உண்டு, மகிழ்ந்து, கால்நடைகளைப் போற்றி வளர்த்து வந்தார்கள். "கறவைகள் பின் சென்று கானம் சேர்ந்து உண்போம்" "பெற்றம் மேய்த்துண்ணும் குலம்" என்ற வரிகள் அவர்கள் கால்நடையோடு பொருந்திய வாழ்க்கை முறையை உணர்த்துவதாகும்.

ஆய்ச்சியர் விடியற்காலையே எழுந்து, வீட்டு வேலைகளைச் செய்வார்கள். வெள்ளி முளைப்பதற்கு முன்பே அவர்கள் செய்யும் முதல் வேலை தயிர் கடைதல்தான். தயிர் கடையும் மத்தினுடைய ஒசை கோவலர்களை எழுப்பி, கால்நடைகளுக்குச் செய்ய வேண்டிய பணிகளைச் செய்யத் தூண்டும். மகளிர் வெண்ணெயையும் தயிரையும் தம் தேவைக்குப் போக மிகுதியாவதை மற்றவர்களுக்கு விற்று, அதில் கிடைக்கும் சிறு வருமானத்தை வீட்டுச் செலவுக்கு உபயோகப் படுத்திக் கொள்வார்கள். அவர்கள் வியாபாரம் பெரும் பாலும்பண்டமாற்றுமுறையாகவேஇருந்தது.

ஆடவர்கள் குற்றம் இல்லாத வாழ்க்கையை மேற்கொண்டார்கள். "குற்றம் ஒன்று மில்லாத கோவலர்கள்" என்று சிறப்பித்துப் பேசப்பட்டார்கள். செறுபகை சேர்ந்த விடத்தில் சென்று செறுச் செய்யும் திறல் உடையவர்களாக இருந்தார்கள். தவம் நிறைந்த பெரியவர்களை வழிபட்டு அவர்களுக்கு வேண்டியன செய்பவர்களாகவும், இல்லாதவர்களுக்கு ஈந்து உவக்கும் இயல்புடையவர்களாகவும், வாழ்ந்தார்கள். "ஐயமும் பிச்சையும் ஆம் தனையும் கைகாட்டி உய்யுமாறு எண்ணி உகந்திருக்கக் கூடிய அறவாழ்க்கையையும் "அம்பரமே சோறே தண்ணீரே" என ஒல்லும் வகையான் அறவினை ஓம்புவர்களாகவும், வாழ்ந்தார்கள். அறத்தோடும் அன்போடும் வந்த பொருளையே போற்றினர்கள். இறைவனிடம் வேண்டும் பொழுதுகூட "திருத்தக்க செல்வமும் சேவகமும் அருள வேண்டுமென்பார்கள்". "நாடு புகழும பரிசினல்" வரும் செல்வமே நிலையான செல்வம் என்பதை உணர்ந்திருநதார்கள். பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பக்கூடிய பண்பு அவர்கள் வாழ்க்கையில் சிறந்திருந்தது. இறைவனுக்கு அமுதிட்டு மற்றவர்களோடு சேர்ந்து உண்ணுவதே அவர்கள் வாழ்வின் நெறியாகக் கொண்டிருந்தார்கள். "பாற்சோறு மூட நெய் பெய்து, முழங்கை வழிவாரக் கூடியிருந்து குளிர்ந்தேலோர் எம்பாவாய்" என்பது அவர்கள் இறைவனிடம் இறைஞ்சும் முறையைக் குறிப்பதாகும்.

அவர்கள் வீடுகளை நல்ல முறையில் அமைத்துக் கொண்டார்கள். வீட்டிற்கு முற்றம் உண்டு; பலவகை அறைகள் உண்டு; அறைகளிலே மணிகளால் அலங்கரிக்கப் பட்ட மாடங்கள் உண்டு; அம்மாடங்களில் இரவு முழுவதும் எரியக்கூடிய விளக்குகள் உண்டு; அவர்கள் வீடுகளுக்குப் பின்புறம் புறக்கடை உண்டு; அதிலே தோட்டமுண்டு. தோட்டத்தின் நடுவிலே வாவி உண்டு; அதில் மகளிர் நீராடுவர்; அவர்கள் படுத்துத் துயில் கொள்ளும் கட்டில்கள் யானைத் தந்தங்களால் ஆனவை; கதவுகளில் பலவகைச் சித்திரங்களோடு பொருந்திய மணிகள் பொருத்தப்பட்டு இருந்தன.

"தூ மணி மாடத்துச் சுற்றும்
விளக்கெரிய
தூபம் கமழத்துயில் அணைமேல்
கண் வளரும்
மாமான் மகளே
மணிக்கதவம் தாள் திறவாய்"

"நாயகனுய் நின்ற
நந்தகோபன் உடைய
கோயில் காப்பானே
கொடித் தோன்றும் தோரண
வாயில் காப்பானே:
மணிக்கதவம் தாள் திறவாய்"

என்ற வரிகள் வீடுகள் அலங்காரமாகக் கட்டப்பட்ட முறையையும்,

"சுற்றத்துத் தோழிமார்
எல்லாரும் வந்து, நின்
முற்றம் புகுந்து
முகில் வண்ணன் பேர்பாட"

"உங்கள் புழக்கடைத்
தோட்டத்து வாவியுள்
செங்கழுநீர் வாய் நெகிழ்ந்து
ஆம்பல்வாய் கூம்பின காண்"

என்பவை வீட்டு அமைப்பையும்,

"குத்துவிளக்கு எரியக்
கோட்டுக்கால் கட்டில் மேல்
மெத் தென்ற பஞ்ச
சயனத்தின் மீதேறி"

என்னும் வரிகள் வீடுகளில் உபயோகித்த யானைத் தந்தங்களாலான கட்டில், பஞ்சயனம் முதலிய விலையுயர்ந்த பொருள்களையும் குறிப்பனவாகும்.

# இறையருள்

— தனுஷ்கோடி

முதற்குறிப்பு :

**கதையும் கற்பனையும் என்னுடையதுதான் என்றாலும், கதையில் ஏதோ ஒரு பகுதி, எங்கேயோ எப்போதோ படித்திருப்பதாகப் படிப்பவர்களுக்குத் தோற்றுமானல், அந்தப் பெருமை அந்தக் கதாசிரியரையே சேரும் !**

சேலம் அஸ்தம்பட்டி பங்களாவில் ஏகப்பட்ட கூட்டம். ஆனாலும் வருவோர் போவோரை யாரும் வரவேற்கவில்லை. அனைவரது முகத்திலும் துக்கம் கப்பியிருந்தது. ஆம்; அது மங்கல விழா அல்ல. அங்குள்ள பெரிய அதிகாரி அரிபாஸ்கரின் அன்னையார் காலமான நிகழ்ச்சி அது! சில மணி நேரம் தான் ஆகிறது. இனிமேல் தான் எல்லா சடங்குகளும் நடக்க வேண்டும்.

அவருக்கு உறவினர் யாரும் இல்லை. தாய்க்கு ஒரே பிள்ளை. ஏழையாக இருந்து கஷ்டப்பட்டு முன்னுக்குக் கொண்டு வந்தவள். பிள்ளை பிறக்கு முன்பே கைம்மைக் கோலம் பூண்டவள். உழைத்து உழைத்து சரீரத்தை எலும்பாக்கிக் கொண்டு, ஆசையுடன் அருமையுடன் பிள்ளையை வளர்த்து ஆளாக்கியவள். வாழ்க்கையில் எத்தனை எத்தனை சோதனைகளைச் சந்தித்திருப்பாளோ?

பாஸ்கர் படித்து வேலைக்கு வந்து கைநிறையச் சம்பாதனையும், கௌரவமுமாக வாழவந்து இரண்டு வருடம் ஆகவில்லை. அவருக்குக் கண்குளிரக் கல்யாணம் செய்து வைத்து மருமகள் எடுக்கவில்லை. பேரப் பிள்ளையின் மதலை மொழி கேட்டு உலகை மறக்கவில்லை. கொஞ்சிக் குலாவி மகிழவில்லை. போய் விட்டாள். போயே போய் விட்டாள் !

ஏன் ? ஏன் ? ஏன் ?

அவள் கஷ்டப்படத்தான் பிறந்தாளா ? சுகப்படும் காலத்தில் வாழ வேண்டாமா ? அவ்வளவுக்குக் கொடுத்து வைக்காத பாவியா !

இருக்கும். இல்லாவிடில் இளமையிலேயே ஏன் கணவனை இழக்கிறாள் ? பூவும் பொட்டும் இழந்து, மங்கல அணிகள் இழந்து பிள்ளைக்காகவே நடைப்பிணமாய் வாழ்ந்தாளே!

கூடியிருந்தோர் கூறிய பலதிறப்பட்ட கருத்துக்கள் இவை! அவரவர்களுக்குத் தெரிந்ததைக் கூறினார்கள் அரை குறையாகத் தெரிந்ததைக் கூறினர்கள். யார் யாரோ பெரிய பெரிய மனிதர்கள் வருகிறார்கள். பாஸ்கரைத் துக்கம் விசாரித்து விட்டுச் செல்கிறார்கள்.

அவர்களில் தெரிந்தவர்களும் உண்டு, தெரியாதவர்களும் உண்டு. எல்லோரும் இந்த சந்தர்ப்பத்தைச் சாக்காக வைத்து அறிமுகப் படுத்திக் கொள்பவர்களாகவே தோன்றிற்று. இந்த சம்பிரதாயங்களினால் பாஸ்கருக்கு ஆறுதல் கிட்டவில்லை. மேலே ஆகவேண்டிய காரியங்களுக்கு இயந்திரம் போல தலையாட்டி ஒப்புதல் அளித்துக் கொண்டிருந்தார். அவருக்கென இருந்த ஒரே பாச பந்த பற்றுக்கோடும் மறைந்ததனால், உலகமே வெறிச்சோடித் தெரிந்தது. அறிவும், அந்தஸ்தும், செல்வாக்கும், எல்லாமே தம்மை விட்டுப் போய் விட்டன போல—இருந்தும் பயனில்லாதன போல ஒரு வெறுமைதான் அவர் மனதில் நின்றது.

சவ ஊர்வலம் புறப்படும் சமயம். யாரோ ஒரு பெரிய மனிதர் தடதடவென வந்தார்.

நேராகப் பிணம் கிடத்தி இருந்த இடத்திற்கு விரைந்தார். கையோடு கொண்டு வந்திருந்த மாலையைக் கழுத்திலேயே போட்டார். காகிதத்தைப் பிரித்துக் குங்குமத்தை எடுத்துப் பெரிதாக வட்டமாக நெற்றிப் பொட்டிட்டார். சிறிது புஷ்பத்தை எடுத்துத் தலையிலும் சொருகினார். "தேவகி! ஐயோ தேவகி! நீ அமங்கலி இல்லே-சுமங்கலிதான்!... என வாய் விட்டுக் கதறினார். பிறகு ஒரே நிமிடத்தில் அத்தனை கூட்டத்திலும் எப்படியோ நழுவி மறைந்து விட்டார்!

திடும்மென நடந்த இச்செயல், யாரும் சற்றும் தன்னிலை உணர்ந்து புரிந்து கொள்வதற்குள், வெகு விரைவாக நடந்தேறி விட்டது. அவர் யார், எந்த ஊர், ஏன் இப்படிச் செய்தார், என்ற விபரம் யாராலும் கூற முடியவில்லை. இவ்வளவு செய்தவர் பாஸ்கரைப் பார்த்துப் பேசி, தன் உறவைக் கூறி துக்கம் விசாரிக்கவில்லை. உள்ளூர்க்காரர் மாதிரியும் தெரியவில்லை. பின் எப்படி இந்த சமயம் பார்த்து வர முடிந்தது என்பதும் புரியவில்லை. சொல்லப் போனால் அங்கிருந்தவர்கள் யாருமே அவர் முகத்தை சரியாகக் கூட அடையாளம் கண்டு கொள்ளவில்லை. பிறகு எப்படி மற்ற சங்கதிகள் தெரிய முடியும்?

அவர் யாராக இருந்தாலும் சரி; என் தாயாரை சுமங்கலிகளுக்குரிய சடங்குகளுடனேயே இனி நடக்க வேண்டியதைச் செய்யுங்கள்!— என்று பாஸ்கர் தீர்மானமாகச் சொல்லி விட்டார்.

சுமார் முப்பதாண்டு காலம் விதவைக் கோலத்தில் வாழ்ந்த தேவகி. இப்போது இறந்த பிறகு சுமங்கலியாக, சகல மரியாதைகளுடன், அமோகமாகக் கானகம் செல்லும் பாக்கியம் பெற்றாள்!

பல பேருக்குச் சந்தேகம். இதன் மர்மம் பாஸ்கருக்குத் தெரிந்திருக்கக் கூடும் என்று. ஆனால் உண்மையில் அவருக்கும் தெரியவே தெரியாது. ஒன்று மட்டும் உறுதியாக நம்பினார். ஏதோ ஒரு காரணத்துக்காக, அம்மா உலகத்தின் முன்னே விதவையாக நடமாடி வந்திருக்கிறாள். அது அம்மாவுக்கும் தெரியும்; அந்தப் பெரிய மனிதருக்கும் தெரியும். அம்மா தான் போய் விட்டாளே! இனி அப் பெரியவரைத் தேடிக் கண்டு பிடித்தால்

தானுண்டு! அவரை எங்கே எப்படிக் கண்டு பிடிப்பது ?

பாஸ்கரின் படித்த மூளை ஆராய்ந்து கொண்டே போயிற்றே தவிர, முடிவைக் காண முடியவில்லை. ஆராய ஆராயக் குழப்பம் தான் மிஞ்சியது. அம் மனிதர் தன் முகத்தில் விழிக்கக் கூடாது என்பதற்காகவே லஜ்ஜைப்பட்டு மறைந்திருக்கலாம் என்று தோன்றிற்று. அப்படியிருந்தால் எப்பாடு பட்டாலும் அவர் எப்படி தனக்குக் காணக் கிடைப்பார்? தவிர அவர் பெயரும் தெரியாது; ஊரும் தெரியாது ; அடையாளமும் தெரியாது. என்னவென்று விசாரித்துத் தேடுவது? தானாக அவரே மறுபடி வெளிப்படுத்திக் கொண்டால்தானுண்டு !

II

சொல்லாலே மனதிலெழும்
உணர்ச்சி தன்னைப்
பொழிந்திடினும் சிலநாளில்
மறைந்து போகும்

நல்லோலைக் காகிதத்தில்
எழுதினாலும்
நாட்பட்டால் அவையாவும்
நசிந்து போகும்

பல்வண்ணச் சேர்க்கையினால்
நல் ஓவியங்கள்
பளிச்சென்று வரைந்தாலும்
ஒளி மழுங்கும்

கல்மீது பதிவான
கருத்தென்றாலோ
காலமெல்லாம் நின்று
கலையழகைக் காட்டும்!

—தாரமங்கலம் கைலாசநாதர் கோயில்! ரதி மன்மதன் சிலைக்கு நேராக இருந்த பலகைக் கல் மேடையில் அமர்ந்தபடி, மெல்லிய குரலில் முணுமுணுத்துக் கொண்டிருந்தார் பாஸ்கர். மனக் கவலையை மறக்க இப்படி ஆலயங்களை நாடி வந்து அமைதி கொள்வதுண்டு. மெய்ம்மறந்து பல மணி நேரம் இருந்து விட்டு வீடு திரும்புவார்.

''மன்னிக்கனும்! இது நீங்கள் பாடிய பாட்டா?'' தேனினும் இனியகுரல் ஒன்று அவரை நிமிரச் செய்தது. எழிலே வடிவான

குமரிப் பெண்ணொருத்தி, நாலைந்து சமவய துத் தோழிகளுடன் நின்றிருந்தாள்.

"எதைக் கேட்கிறீர்கள்? பாட்டையா? பாடியதையா?" குமரிப் பெண் ஒரு கணம் திகைத்தாள். பின் சுதாரித்துக் கொண்டு, "அதுதான் நீங்கள் பாடியதைக் கேட்டேனே! பாட்டை இயற்றியதும் தாங்களே தானா?"

"அதுதானே பார்த்தேன். நான் பாடும் குரல் அவ்வளவு நன்றாக இருக்கிறதென்று யாரும் கூறமாட்டார்களே!" "பாடுபவர் பாடினால் குரலும், ராகமும் என்ன வேண்டியிருக்கு! எழுத்துப்பிழை, கருத்துப் பிழை இல்லாமல், உச்சரிப்பு சுத்தமாய் தெளிவாய் யார் பாடினாலும் கேட்க நன்றாகத் தானிருக்கும்! இந்தக் காலத்தில் பெரிய பெரிய சங்கீத வித்வான்கள் கூட அப்படிப் பாடுவதில்லையே!"

"வெரிகுட்! அப்படியானால் பாட்டின் கருத்துக்காகத்தான் பாடலை ரசித்தீர்கள் போலிருக்கிறது. ஸாரி! அந்தப் பெருமை எனக்கில்லை!"

"உண்டு; நிச்சயம் உங்களுக்கும் உண்டு. முன்பே சொன்னேனே. பாடத் தெரியாவிட்டாலும் பாட்டைப் படி!' என்று ஒரு கவிஞரே சொல்லியிருக்கிறார். பாட்டைப் படிப்பதற்கும் ஒரு திறமை வேண்டும்; அதுவும் ஒரு கலைதான்! அது உங்களிடம் நிறைய இருக்கிறது!"

"உண்மைதான். கருத்து நயம், கவிதை நயத்துக்காகவே அதை மனப்பாடம் செய்தேன். எந்த வருடத்திலோ, எந்தப் பத்திரிகையிலோ வந்தது. ஞாபகமில்லை. ஆனால் அக் கவிதையை இயற்றியது ஈரோடு பாவலர் பாலசுந்தரம் என்பதை மட்டும் மறக்கவில்லை. கவிஞரின் பெயரை மறக்கலாமா? அதன் பெருமை அவரைத்தானே சேர வேண்டும்!"

"அவர் எங்கிருந்தாலும் வாழ்க! இப்படிப் பலரது கவிதைகளுக்கு ஏற்றம் கொடுக்கும் நீங்களும் வாழ்க!"

"யார் யாரோ வெளிச்சத்துக்கு வராத கவிஞர்கள் எழுதியவற்றைக்கூட பாடம் செய்திருக்கிறேன். ஒன்றிரண்டைப் பாடிக் காட்டவா?"

"வேண்டாம்! அவகாசம் இல்லை. தோழிகள் வேறு காத்திருக்கிறார்கள். பிக்னிக் வந்த இடத்தில் உங்களைச் சந்தித்துப்பேச நேர்ந்தது மகிழ்ச்சி தருகிறது. இந்த சம்பவத்தை மறக்கவே மாட்டேன்."

"நன்றி! மிக்க நன்றி!"

"ஆமாம் நீங்கள் சென்னை வருவதுண்டா? வந்தால் எங்கள் வீட்டுக்கு ஒரு நாள் விருந்தாளியாக வாருங்களேன். எங்கள் அப்பா உங்களைப் பார்த்துப் பேச ரொம்பவும் பெருமைப்படுவார்! அவரும் ஒரு இலக்கியப் பித்தர் தான்!"

"அப்படியா! சந்தோஷம்! அடிக்கடி வரும் வாய்ப்பு இல்லை. சந்தர்ப்பப்பட்டால் வர முயற்சிக்கிறேன்."

"இந்தாருங்கள் விலாசம். ஒரு முறையாவது அவசியம் வரவேண்டும்"

குமரிப்பெண் தன் டம்பப் பையிலிருந்து தந்தையின் விசிட்டிங் கார்டை எடுத்து,

அதன் பின்புறம் அழகாகத் தன் பெயரை ''புஷ்பா'' என்று எழுதி நீட்டினுள். அதை வாங்கிப் பார்த்த பாஸ்கரும் பதில் மரியாதைக்குத் தன் பெயர் கொண்ட விசிட்டிங் கார்டையும் எடுத்துக் கொடுத்தார்.

அதைப் பெற்றதும் தான் புஷ்பாவுக்கு நாணம் வந்தது. ஒருவரை யொருவர் இன்னுர் என்று பெயர் கூடத் தெரிந்து கொள்ளாமல் இவ்வளவு நேரம் உரையாடிக் கொண்டிருந்து விட்டிருக்கிருேமே என்ற நினைப்பில் தலை தரைநோக்கித் தாழ்ந்தது!

III

சில மாதங்களில் பாஸ்கர் சென்னைக்கு மாற்றப்பட்டபோது துணுக்குற்றுர். ஏனெனில் அவர் அறிந்த வரையில், மதுரைக்குத் தான் மாற்றல் உத்தரவு வரும் என எதிர் பார்த்திருந்தார். இப்போது திடீர் என்று சென்னை செல்ல வேண்டி நேரிடுவது ஒரு வேளை தெய்வச் செயலோ என்று எண்ணினுர். எங்கு செல்லவும் அவருக்கு ஆட்சேபணை இல்லை தான். ஆனுல் தாரமங்கலம் கோயிலில் புஷபாவைச் சந்தித்து உரையாடி வந்தது முதல், தனது வாழ்க்கைக்கு அப்படியொரு இலக்கிய நயம் தெரிந்த துணை இருப்பது மகிழ்ச்சி தரும் என எண்ணினுர். ஆனுல் அவர் அந்தஸ்த்துக்கு அப்படியெல்லாம் கண்டதும் காதல் கொள்ளும் முறை தகாது என்று தன்னைத்தானே அடக்கிக் கொண்டார். அவளது முகவரி இருந்தும் கடிதம் எழுதவோ, நேரில் போய்ப் பார்க்கவோ முயலவில்லை. அவளும் பெரிய இடத்துப் பெண் போலிருக்கிறது. அவரது முகவரி அவளிடமிருந்தும் ஏனே அவளும் கடிதம் கூட எழுதவில்லை. ரயில் சினேகம் போல, கோயில் அறிமுகத்தையும அத்துடன் மறந்து விடுவது தான் கெளரவம். அப்படித்தானிருந்து வந்தார். இப்போது வேலை சென்னை மாற்றல் உத்தரவு பெற்றதும், இதை சாக்காக வைத்து ஒரு தடவை— ஒரேயொரு தடவை போய்ப் பார்த்துத்தான் வருவோமே, என்று தோன்றியது. தவிர அவள் தன் தகப்பனுரைத் தானே சந்திக்கச் சொல்லி, அவர் விரும்புவார் என்றும் கூறியிருக்கிருளே! என்ன தப்பபிப்பிராயம் வந்து விடப் போகிறது ? அவர்களிருவரும் திருமணமானவர்களா, இல்லையா என்பது கூட ஒருவர்க்கொருவர் தெரியாதே! ஏதோ இலக்கியப் பற்றுள்ளவர்கள் என்ற முறையில், பெற்றேரைத் தானே சந்திக்கப் போகிருர்? அதில் தவறென்ன இருக்க முடியும் ?

நீண்ட ஆலோசனைக்குப்பின் சென்னை சென்றதும் ஒரு நாள் குறிப்பிட்ட விலாசத்தில் போய் சந்திக்கத்தான் செய்தார். புஷ்பாவின் தந்தை கருணுகரன் முகமலர்ச்சியுடன் பாஸ்கரை வரவேற்று உபசரித்தார். தாரமங்கலம் கோயிலில் அவ்வளவு தூரம் வார்த்தையாடிய புஷ்பா, இப்போது இங்கு தன் வீட்டில் சரிசமமாக உட்கார்ந்து பேசவில்லை. மரியாதையுடன் சற்று எட்ட நின்றவாறே கலகலப்புடன் பேசினுள். அந்தப் பண்பு பாஸ்கருக்கு மிகவும் பிடித்து இருந்தது. பெரும்பாலும் தந்தையையே பேச விட்டு, இடையிடையே சிரிப்பூட்டும் வகையில் குறைவாகப் பேசினுள். அவள் அம்மா பரமசாது போலிருக்கிறது. சிற்றுண்டி, காபி உபசாரத்துடன் சரி; உள்ளே போய் விட்டார்கள்.

கருணுகரனும் பெரிய வேலையிலிருந்தார். எனவே பாஸ்கருக்குப் பழக அந்தஸ்து குறுக்கிடவில்லை. அடிக்கடி வீட்டிலும் வெளியிலும் சந்தித்து அளவளாவினர். நாகரீக நங்கையாக இருந்தும் புஷ்பா இவற்றிலெல்லாம் கலந்து கொள்வதில்லை. அதைக் குறைவாகவும் பாஸ்கர் கருதவில்லை. கெளரவமான குடும்ப நண்பராகப் பழகினுர். பாசமுள்ள ஒரு பற்றுக்கோடு கிடைத்து விட்டதாகவே தோன்றியது. மன அமைதி கிடைத்தது

இந்த நிலை ரொம்ப நாள் நீடிக்கவில்லை. பாஸ்கரின் ஏகாந்த நிலையையும், பண்பையும் உணர்ந்து மதித்த கருணுகரன் வெகு சீக்கிரத்திலேயே தன் மாப்பிள்ளையாக்கிக் கொண்டார். அவருக்குத் தம் குடும்பத்தில் மனம் ஒத்துப்போனது பெரிதாகப்படவில்லை எதிலும் நூறு விதமாக ஆராய்ந்து பார்க்கும் அவரது மாமனுர், ஒப்புக் கொண்டதுதான் விசேஷம்! பாஸ்கரைப்பற்றிய விபரம் தெரிந்தவுடன் பம்பாயிலுள்ள மாமனுருக்கு எழுதி அபிப்பிராயம் கேட்டார். அவர் நேரில் கூட வந்து மாப்பிள்ளையைப் பார்க்காமல் உடனே திருமணத்துக்கு ஏற்பாடு செய்யும்படி

தந்தியே அடித்து விட்டார். இதுவும் தெய்வச் செயலே என்று எண்ணி விவாகத்தைத் தடபுடலாக நடத்தி முடித்து விட்டார்.

பாஸ்கர்-புஷ்பா தம்பதிகள் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்பட்டவர்களைப் போல ஆனந்தமாக வாழ்ந்தனர். அன்பும், அறிவும், பண்பும், பயனுடைத்தாய் இருந்தன. கல்யாணத்தின்போது பம்பாய்த் தாத்தா பரமசிவம் உடம்பு சரியில்லாததால் வரவில்லை என்ற குறையிருந்தது அவரது ஆசீர்வாதம் பெறவும், அதே சாக்கில் பம்பாயை ஒரு முறை சுற்றிப் பார்த்து வரவும் திட்டமிட்டார்கள். பொறுப்புள்ள பதவியில் இருந்ததால் பாஸ்கருக்குத்தான் நீண்ட லீவு கிடைப்பது சிரமமாக இருந்தது. இருந்தாலும் இளமைக் கனவுகளில் மூழ்கி ஆனந்தமாக அனுபவித்துக் கொண்டிருந்ததால் நாட்கள் ஓடியதே தெரியவில்லை. ஓராண்டு ஓடி விட்டது.

IV

ஒரு நாள் திடீரென்று பம்பாயிலிருந்து கருணாகரனுக்கு டிரங்கால் வந்தது. மாமனார் பரமசிவம் ஆபத்தான நிலையில் படுத்திருப்பதாகவும், டாக்டர்கள் கைவிட்டு விட்டார்கள் என்றும், உடனே எல்லோருமாகப் புறப்பட்டு வரும்படியும் தகவல் வந்தது. ஆகவே அதன்படி கருணாகரன், அவர்மனைவி, புஷ்பா, பாஸ்கர் நால்வரும் அன்றிரவே புறப்பட்டனர்.

பம்பாயில் எதிர்பார்த்தபடியே நடந்தது. இவர்கள் போய்ச் சேர்ந்த மறுநாளே பரமசிவம் நினைவற்ற நிலையிலேயே பரமபதம் அடைந்துவிட்டார். பத்து நாள் காரியங்கள் முறைப்படி நடந்தேறின. பின்னும் இரண்டு நாள் கழித்து சென்னை திரும்புவதாயிருந்தனர். அதற்குள் இறந்தவரின் குடும்ப வக்கீல், ஒரு உயில் இருக்கிறது என்றும், அதை எல்லோர் முன்னிலையிலும் படித்து விடவேண்டும் என்றும் கூறினர். அதன்படி ஒரு நேரம் நிச்சயிக்கப்பட்டு குடும்பத்தினர் அனைவரும் ஆண் பெண் அடங்கலாக ஹாலில் குழுமி இருந்தனர். பரமசிவத்தின் மரணசாசனத்தை வக்கீல் பிரித்துப் படிக்கத் தொடங்கினர்:—

……… என் உயிருள்ள வரையில் வெளியிடத்துணியாத ஒரு இரகசியத்தை, இறந்த பின் இதன் மூலம் வெளியிடவிரும்புகிறேன். இதை இனியும் மூடி மறைப்பது என் ஆன்மாவுக்கு சாந்தி கிடைக்காமற் செய்துவிடும். என் மகன் வயிற்றுப்பேத்தி புஷ்பா மணந்து கொண்டிருக்கும் பாஸ்கர் வேறு யாரும் அல்ல; அவன் என் மகன்! எனக்குப் பிறந்தவன்! என் உதிரம் தான் அவன் உடம்பில் ஓடுகிறது. ஆம்; இதை எனது மற்ற மூன்று மகன்களும் ஏற்றுக்கொண்டு, பாஸ்கரைத் தங்கள் மூத்த சகோதரனைகப் பாவிக்க வேண்டும். எனது சொத்து சுகங்களிலும், தார்மீகக் கடமைகளிலும் அவனுக்குச் சம பங்கு அளிக்கவேண்டும். இது தான் என் மனப்பூர்வமான விருப்பம். இதை குடும்பத்தினர் எல்லோரும் மனமார ஏற்றுக்கொண்டு நடப்பார்கள் என்று நம்புகிறேன்.

எனது மருமகன் கருணைகரன் பாஸ்கரனைப் பற்றி விபரம் எழுதி, புஷ்பாவை மணம் செய்து கொடுக்கலாமா? என்று கேட்டபோதே சந்தோஷத்துடன் ''சம்மதம் ஊடனே ஏற்பாடு செய்'' என்று தந்தியடித்தேன். அவன் முறை மாப்பிள்ளை. சகோதரி பெண்ணை மணக்கத் தடையென்ன? ஆனால் நான் தான் நேரில் சென்று ஆசீர்வதிக்கத் துணியவில்லை. உண்மையை ஒப்புக்கொள்ளத் திராணியில்லாமல் ஒரு அந்நியனைப்போல் சென்று பெற்றமகனைத் தந்தையே வாழ்த்த வேண்டுமா? அப்படிச் செய்யக்கூசியே அவர்கள் திருமணத்துக்குப் போவதை வேண்டுமென்றே தவிர்த்துக் கொண்டேன்.

பாஸ்கருக்கு இன்றளவும் நான் யார் என்று தெரியாது. ஆனால் அவனை அவன் திருமணத்துக்கு முன்னமேயே நான் அறிந்து கொண்டேன். நான் ஒரு பாவி! அவனையும், அவன் அம்மா தேவகியையும் நான் பல ஆண்டுகளுக்குப் பின் தேடிச் சென்றபோது சமயம் சரியில்லை. அறிமுகப்படுத்திக் கொள்ளக்கூடிய சூழ்நிலையில் இல்லாதிருந்தனர். ஆகவே நான் அறிந்ததை அவர்கள் அறியுமுன் திரும்பிவிட்டேன்!

என் வாலிபம் துடிப்புடன் விளங்கிய காலம். செல்வந்தர் வீட்டு செல்லப்பிள்ளையான நான், எங்கள் வீட்டு சமையல்கார அம்மாவின், வயதுவந்த மகளுடன் விளையாடிவிட்டேன். உலகமும் சமூகமும் என்ன என்று தெரியாத வயசு. எல்லாப் பிள்ளைகளையும் போலவே தேவகியிடம் ''யார் எதிர்த்தாலும் சரி; உன்னையே கல்யாணம் செய்துகொள்கிறேன்'' என்று கையடித்துச் சத்தியம் செய்து கொடுத்தேன். பேதையவள்! அப்படியே நம்பினள்; தன்னை ஒப்படைத்தாள். …. என்ருலும் முடிவு என்ன ஆயிற்று? பணக்காரப் பெற்றோர்களிடம் ஏழைப் பெண்ணுக்காக வாதாட முடிந்ததா?… முடியவில்லையே! அவள் கர்ப்பிணியானதற்கு நான் தான் காரணம் என்று தெரிந்ததும், எப்படியோ எனக்கே தெரியாமல் தாயையும் மகளையும் விரட்டி விட்டனர். கொஞ்சநாள் எங்கென்று தேடக்கூடத் துப்பில்லாமல் வீட்டிலேயே ஏங்கி முடங்கிக் கிடந்தேன்………பிறகு எப்படியோ பெரிய இடத்தில் பெற்றோர் விருப்பப்படி கல்யாணமாகி, பெரிய உத்தியோகத்தோடு பம்பாய் வாசியாகவும் வந்துவிட்டேன். அத்துடன் தமிழ்நாட்டையே மறந்துவிடும்படி ஆகி விட்டது.

இப்படியே என்காலம் முடிந்து விட்டிருந்தால் கடவுளுக்குக் கண்ணில்லை என்பது நிஜமாகி விடுமே! நான் ரிடையராகி பென்ஷன் பெற்று ஓய்வுகொள்ள ஆரம்பித்ததுமே, ஓயாத உபத்திரவமும் ஆரம்பமாகி விட்டது. நன்ருகப் பிறர் கண்ணுக்கு நடமாடியபடி இருந்தேனே தவிர, எனது உடலுக்குள், உள்ளத்துக்குள், திடீர் திடீரெனத் தோன்றிய அரிப்புக்களும், அவஸ்தைகளும், நிம்மதியாக இருக்கவிடாமல்-தூங்கவிடாமல் செய்தன. என்ன வைத்தியம் செய்தும் கட்டுப்படவில்லை. மனச்சுமையும், விதிச்சுமையும் போட்டு அழுத்தும் போது, டாக்டர்களால் என்ன செய்யமுடியும்? மனப்பாரம் தாளமுடியாமல் தற்கொலை செய்து கொள்ளலாம் என்றுகூட எண்ணிவிடுவேன். இவ்வளவு சௌகரியங்களையும், சுகபோகங்களையும் தாண்டி அப்படிச் செய்வது பைத்தியக்காரத்தனமல்லவா? மற்றவர்கள் நகைப்பிற்கிடமாகுமே என அஞ்சினேன். அப்படியானல் என் மனப்புண் ஆறுவதற்கு என்ன வழி?…

வாலிபத்தில் செய்த என் குற்றம், வயோதிகத்தில் வாளாக நின்று ஓயாமல் அறுத்தது. என்னை நம்பி தன்னை ஒப்படைத்த என் தேவகி என்ன ஆனாளோ? எப்படி இருக்கிறாளோ? பிறந்த குழந்தை என்ன ஆனதோ எங்கே கஷ்டப்படுகிறதோ? நான் இவ்வளவு சவுகரியத்துடன் வாழ, என் பிள்ளை எங்கேயோ பிச்சை யெடுக்கவேண்டுமா?... இப்படி எல்லாம் எண்ணினேன். எப்படியாவது தேடிக் கண்டு பிடித்து, அவர்கள் இனியாவது சௌகர்யமுடன் வாழ உதவி செய்தால் தான் மனப்புண் ஆறும் என்று தீர்மானித்தேன். எல்லோரும் வடக்கே யாத்திரை போவார்கள்; நான் தெற்கே யாத்திரை போய் வருவதாக வீட்டில் சொல்லி விட்டுப் புறப்பட்டேன். எப்படியாவது என் தாலி கட்டாத மனைவியைக் கண்டுபிடித்து அவள் வறுமையைப் போக்க உதவியாக வேண்டும்!

இருபது இருபத்தைந்து வருடங்களுக்கு முன் வாழ்ந்தவளைப் பற்றி விசாரித்துக் கண்டுபிடிப்பது அவ்வளவு சுலபமாக இருக்கவில்லை. முதலில் அவளுடைய சொந்த கிராமத்தில்தான் போய்விசாரித்தேன். அங்கு கிடைத்த தகவல் என்னைச் சாட்டையால் அடிப்பது போலிருந்தது. விதிர் விதிர்த்துக் கலங்கிப்போனேன். சென்னையிலிருந்து தேவகி திரும்பியபோது கைம்மைக் கோலம் பூண்டிருந்தாளாம். திடீரென்று விபத்தில் சிக்கி கணவன் இறந்து விடவே, தாயைக் கூட்டிக் கொண்டு கிராமத்துக்கே வந்து விட்டதாகச் சொன்னாளாம். ஏதேதோ கூலி வேலை செய்தும், பலகாரக் கடை போட்டும் ஜீவித்தார்களாம். ஒரு ஆண்குழந்தை பிறந்து நாலைந்து வருடங்கள் வரை அங்கு இருந்தார்களாம். அதற்குள் கிழவி காலமாகி விடவே, பையனின் படிப்பு வசதி கருதி நகரத்துப் பக்கம் போய் விட்டாளாம். "உத்தமி என்றால் உத்தமி! அப்படிப்பட்ட உத்தமியைத் தெய்வம் இப்படி சோதனைக்குள்ளாக்கி இருக்கக் கூடாது."—என்றார்கள்.

இவற்றை எல்லாம் கேட்டபின் இன்னும் அதிகமாக என் மனம் கலங்கியது, எப்படிப் பட்ட பாவியாகி விட்டேன் நான்! விதவைக் கோலம் பூண்டு வாழ்ந்து காட்டினால் தான், தன் கற்புக்கு மதிப்பு கிடைக்கும், பிறக்கும்



பிள்ளைக்குப் பெருமை கிடைக்கும், என்பதை எங்கள் வீட்டை விட்டு வெளியேறிய போதே தீர்மானித்துக் கொண்டிருப்பாள் என்று தோன்றியது. அதற்காக தன் அலங்காரங்களை எல்லாம் வெறுத்து ஒதுக்கி சருகாய் வாழ்ந்திருக்கிறாளே!

பூவும் பொட்டுமாக, ஆடை அணிகலன்களுடன், மஞ்சள் குங்குமத்துடன் அவள் வாழ்ந்திருக்கலாம். ஆனால் ஊர் வாய் சும்மா இருந்திராது. கணவன் எங்கே என்பார்கள். கணவனுடன் சண்டையிட்டு ஓடி வந்தவளோ என்பார்கள். கணவன் அடித்து விரட்டி விட்டானோ என்பார்கள். அல்லது கல்யாணமே ஆகியிருக்காது. திருட்டுக் கர்ப்பம் ஆனதும் ஓடி வந்திருப்பாள் என்பார்கள். அத்துடன் யாரைக் கணவனாகப் பெயர் விலாசம் கூற முடியும்? கட்டுக் காவல் இல்லாத அவளைச் சுற்றிக் காலிகளும், முரடர்களும் வட்டமிட்டு வம்பு செய்வார்கள். அழகு—அலங்காரம் செய்து கொண்டாலே காலமெல்லாம் இத்தகைய தொல்லை இருந்து கொண்டுதானிருக்கும். பிறக்கும்

பிள்ளைக்கும் தந்தை பெயர் சொல்ல முடியாத கேவலம் வரும்.

இப்படியெல்லாம் பற்பல கேள்விகளுக்குப் பதில் சொல்லி அவமானப்பட்டு வாழ்வதைவிட, கணவனை இழந்த கைம்பெண்ணாக வாழ்வது சௌகரியம். அதில் தன் அழகை அடக்கி, ஒழுக்கத்தைக் காத்து, அனுதாபத்தைப் பெற்று, பலர் மெச்ச உத்தமியாக வாழ்வது சுலபம். தனது ஆசைகளை அடக்க வேண்டும்; சுக போகங்களைத் துறக்க வேண்டும்; அவ்வளவுதானே? பூவுக்கும், பொட்டுக்கும் ஆசைப்பட்டு, கணவன் எங்கேயோ இருப்பதாகக் காலம் எல்லாம் சொல்லிச் சொல்லி அவல வாழ்வு வாழ்வதை விட, கணவனை இழந்து விட்டதாக ஒரு பொய் சொல்லி, மேலான கற்புள்ள வாழ்வு வாழ்வது சிறந்தது அல்லவா? .........இப்படித்தான் என் தேவகி எண்ணி இருக்க வேண்டும். உண்மையில் அவளைப் பொருத்த வரையில் என்னை உயிருடன் இழந்தவள்தானே? .........

இத்தனை அரிய பெரிய தியாகம் செய்ய அந்த ஏழை இளம் பெண்ணால் எப்படிச் சாத்தியமாயிற்று? அவள் உறுதியின் முன் நான் கேவலமான புழுப்போல் ஆகி விடுகிறேனே?

கொஞ்ச நஞ்சமிருந்த தயக்கமும் மாறி, முழுஉறுதியுடன் அவளைக் கண்டு பிடித்து உதவி செய்யும் முயற்சியில் ஈடுபட்டேன். பல பல ஊர்கள்; ஓட்டல்கள் பெரிய மனிதர் வீடுகள்; துப்பறியும் நிபுணர் போல ஆகி விட்டேன். பல மாத முயற்சிகளுக்குப் பின் அவர்கள் இருப்பிடத்தை அறிந்து சென்ற போது—

அவள் உயர்ந்த நிலைக்குப் போய் விட்டாள்! எவருக்கும் எட்டாத உன்னத நிலைக்குப் போய் விட்டாள்!

ஆம்; எவளைத் தேடி அலைந்தேனோ, எந்தத் தேவகியைப் பார்த்து விம்மி அழுது மன்னிப்புக் கோர எண்ணினேனோ, அந்தத் தேவகியின் உயிர் பிரிந்து சிலமணி நேரம் ஆன பின்னரே வீட்டைக் கடவுள் காட்டினார்! என்ன செய்யட்டும்? யாரிடம் சொல்லி அழட்டும்?

அங்கிருந்து ஓடினேன் கடைத்தெருவுக்கு. மாலையும் குங்குமமும் வாங்கிக் கொண்டு ஓடிவந்தேன். நான் உயிருடன் இருக்கும் பொழுது, எனக்காக வாழ்ந்தவளைப் பூவும் பொட்டுமாக சுமங்கலிக் கோலத்துடன் அனுப்பிவைக்க வேண்டாமா? இது என் கடமையல்லவா? ஆனால் வெளிப்படையாக கதை பேசி விவரித்துக் கொண்டிருக்க இதுவா சமயம்? அத்துடன் "ஏழையாக இருப்பார்கள்; உதவி செய்து பரிகாரம் செய்து கொள்ளலாம் என்று தேடி வந்தேன்" என்று சொல்வதா? எவ்வளவு ஈன புத்தி எவ்வளவு இழுக்கு? என் உதவியில்லாமலே உயர்ந்த அதிகாரியாக அங்கே வீற்றிருக்கும் பாஸ்கரனைப் பார்த்து எந்த முகத்தோடு பேசுவது? என் பேச்சை நம்ப, என்னைத் தெரிந்தவர்கள் அங்கே யாரிருக்கிறார்கள்? தெரிந்த ஒருவளும் தான் கண்ணை மூடிக் கொண்டு, வாய் மூடி மௌனி ஆகி விட்டாளே!

ஆகவே யாரிடமும் எதுவும் பேசாமல், எனது உணர்ச்சிகளையும் அடக்கிக்கொண்டு, கணவனை நான், மனைவியான தேவகியை சுமங்கலிக் கோலமாக்கி விட்டு ஒதுங்கி விட்டேன். ஒருவருமறியாமல் சுடுகாடு வரை சென்றேன்; அவள் சுமங்கலிக் கோலத்துடன் சென்று சாம்பலானதைக் கண்ணாரக் கண்டேன்; கடமை நிறைவேறச் செய்த கடவுளின் கருணைக்கு நன்றி செலுத்தி ஊர் திரும்பினேன். அது முதல் எனக்கு மனம் நிம்மதி அடைந்தது என்றாலும், வயோதிகமும், பலவீனமும் அவளை நாடிப் "போ போ" என்கிறது.

தேவகியிடம் மன்னிப்புக் கோர முடியாத நிலையில், அவள் மகனுடன் மன்னிப்பு கேட்

---

தேவதரிசனம் :

## மரணம்

சரீர மரணத்தை வெல்லல் வேண்டும் என்ற நோக்கம் இங்கில்லை. ஏனென்றால் மரணத்தை வென்று முடித்தாலும் ஒன்றும் லாபமில்லை. அனுபவித்த சுகத்தையே தேய்த்துத் தேய்த்து அனுபவித்தாலும் லாபமில்லை. எனவே விட்டு விலகி அனுபவி என்று பேசுகிறது ஈசாவாச்யம்.

பதில் அர்த்தம் இல்லை. எனவே நான் உயிருள்ள வரையில் தகப்பன் என்ற உரிமையுடன் அவன் எதிரில் நிற்க விருப்பம் இல்லை. என்றாலும் பாஸ்கரன் என் அருமை மூத்த மகனே!...

எப்படியோ இறைவனருள் பாஸ்கரனை என் குடும்பத்துடன் இணைத்து வைத்துவிட்டது. இனி அவனால் இதிலிருந்து விலகிச் செல்ல முடியாது–விலகிச்செல்ல நினைக்கவும் மாட்டான். இந்த நம்பிக்கையே என்னுள் ஆறுதல் அளிக்கிறது. அதுவே எனக்குப் போதும். ஒரு வேளை திருமணத்துக்கு முன்னதாகவே, அவனை உண்மையறியச் செய்திருந்தால், என்னையும் புஷ்பாவையும் வெறுத்திருப்பானோ என்னவோ! அப்படிப் பயந்துதான் ஆண்டவன் சித்தப்படி நடக்கட்டும் என்று மவுனமாக இருந்துவிட்டேன். நான் என் உறவைக்கூறி, அவன் விவாகத்துக்குக் சம்மதிக்காமல் மறுத்திருந்தால், அந்தக் கவலையாலேயே மனமுடைந்து நொந்து போய் செத்து இருப்பேன்:

இறைவனருளால் அப்படிப்பட்ட விபரீதம் நேராமல் இப்போது பூரண மனநிம்மதியோடு மரண சாசனம் எழுதி வைக்கிறேன். தற்செயலாகக் கோவிலில் பாஸ்கரனும் புஷ்பாவும் சந்தித்துக்கொண்டதும், அது பெரியவர்கள் சம்மதத்துடன் திருமணமாக இனிது முடிவுற்றதும், குடும்பத்தை ஒன்று கூட்டியதும் தெய்வச் செயலே என்றுணர்ந்து, என்மகனும் பேத்தியும் இனிது பல்லாண்டு ஒற்றுமையாக வாழ்வார்கள் என்று நம்புகிறேன். .........

எனது மற்ற மூன்று பிள்ளைகளும், இரண்டு பெண்களும், மாப்பிள்ளை, மருமகள்மார்களும், மனைவியும் மற்றுமுள்ள அனைவரும் பாஸ்கரனை மதித்து ஏற்றுக்கொண்டு கௌரவிப்பது கடமையாகும். ........

''ஐயோ அப்பா! உங்கள் திருமுகத்தைப் பார்த்து ஒரு வார்த்தைகூடப் பேச முடியாத பாவியாகி விட்டேனே!.........'' என்று கதறியழுதார் பாஸ்கர்.

''கவலைப்படாதீர்கள் அண்ணா! நாங்கள் இருக்கிறோம்!......'' என்று மூவரும் ஒருமித்த குரலில் ஆறுதல் கூறினார்கள்!

# இருளும் சுடரும்

இருள் :

நெய்யில் திரியிட்டு நின்றெரியும் செஞ்சுடரே
மெய்யில் சிவப்பல்லால் வேறுநிறம் மேவாயோ?
வெய்ய சுடரால் எனையே விலக்கலன்றிச்
செய்யுந் தொழில்வேறும் உண்டோ செகத்தினிலே.

சுடர் :

கண்டதுமே ஓடும் கருக்கிருட்டுக் காரிகையே !
அண்டிநின்று கேட்பதற்கே அஞ்சி மறைந்துநின்று
கொண்டு துணிவுடனே கொள்கை வினவுகிறாய்
விண்டுரைப்பேன் சற்றே வெளிவந்து கேளடிநீ!

இருள் :

நின்றெரியத் துணைசெய்யும் நெடுந்திரியை, நெய்யினையே
நன்றி யுணர்ச்சியின்றி நாவுக் குணவாக்கிக்
கொன்றழிக்கும் கொற்றவரே ! கோபப் படவேண்டாம்
என்றும் உமது செயல் எதையும் அழிப்பதன்றோ ?

சுடர் :

ஆற்றல்மிகும் என்பால் அணையும் எவற்றையுமே
காற்றின் துணையால் கடுகி யழித்திடுவேன்
தோற்றியதைக் காத்துத் துடைக்கும் சிவனார்தாம்
ஏற்றநிறம் என்னிறமே ! யானே யவர்கண்டாய் !

இருள் :

பாண்டவரில் பார்த்தன் துணையால் பசிக்குணவாய்க்
காண்டவமாம் சோலையினைக் கபளீ கரம் செய்தீர்!
பூண்ட இழிசெயலின் புன்மை யகற்றுதற்கே
ஆண்டவனின் முன்பாக ஐந்துமுகம் கொண்டீரோ ?

சுடர் :

குத்து விளக்கில் குவிந்தெரியும் ஐந்துமுகம்
சித்தத்தில் ஐம்புலனின் செய்கையினைக் காட்டுதற்கே!
அத்தன்பால் ஐம்புலனும் ஒன்றாய் அணைவதனை
இத்தரையில் காட்டிடுவேன் இருளுனக்குப் புரியாது!

இருள் :

உள்ளமே என்றன் உவப்பன ஆலயமாம் !
எள்ளளவும் நீவிர் எளிதில் புகவொண்ணு
விள்ளரிய மாளிகையில் விந்தைக் கொலுவிருப்பேன்
கள்ளமிகும் ஐம்புலனென் காலடியில் தவமிருக்கும் !

சுடர் :

நெஞ்சத் திருளே ! நினைவிரட்ட நித்தியமாய்
மிஞ்சிவரும் ஞானமெனும் மிக்கசுடர் உண்டறிவாய் !
அஞ்சுபுலன் ஒன்றாய் அணையுங்கால் ஆரிருளே
பஞ்சுபடும் பாடு படுவாய் ! அறிகுவையே

வித்வான். வி. துரைசாமி எம். ஏ.,

# GORKY'S "MOTHER"

## — Justice. S. Maharajan

(Speech delivered at the House of Soviet Culture, Madras on 11—10—72)

I have read books that have amused me, books that have instructed me, books that have edified me. I have read the plays of Shakespeare that enable me to understand the true dimensions of human life. I have read Kamban's Ramayana, which puts me in a deep state of absorption and releases me from the prison of Time and Space. But Gorky's mother is a book which falls under none of these categories. It makes me feel a sense of contemporary tragedy, a sense or poignancy of the human predicament, a sense of guilt in letting an unjust order of things to continue. Not only that. It forces me to do something to liquidate the built-in injustices and tyrannies in the system, to which I have hitherto been insensitive and indifferent. The Novel puts to flight all your self-complacency. It is as if Gorky lifts an one-ton weight slowly, inch by inch, up to the ceiling and suddenly releases it on your head. The impact on you is startling; it is not physical, but mental and spiritual. It is rather as if Gorky throws an atom bomb into your mind and as it explodes, it destroys all the cant and hypocrisy and humbug that have, without your knowledge, encrusted your mind, and after the explosion, you acquire a fierce awareness of social iniquities, and if you are not mentally old, you would plunge into action to remove those iniquities. In other words, 'Mother' is a piece of literary work, which unlike others, stirs you out of your lethargy, gives you a joyous motivation for reshaping the world and eggs you on to action.

It is small wonder then that Lenin himself recognized that Gorky's 'Mother' was one of the factors that paved the way for the great Russian revolution.

Pelagea Nilovna is the name of the Mother. She is married to a brutal workingman, who comes home drunk everyday and beats her violently as if she were another man's wife. She is illiterate and lives in perpetual dread. Her soul is all grown over with fear. Not only her husband but all the workingmen around her were dominated by a lurking sense of animosity. As the factory whistle shrieked, the workingmen used to come out of their little grey houses " like frightened cockroaches". After the day's hard toil, they would rush to the tavern, the only place where they could squeeze out a drop of happiness. Bloody fights and occasional killings relieved the monotony of their wretched lives The husband, who always called Pelagea Nilovna a bitch, dies of a rupture and is buried by her and her son, Pavel.

Gorky takes the bereaved Mother through a series of skilfully contrived situations, and confronts her with a variety of characters. The woman, who has never been aware of her sense of human worth, reacts to every situation and gradually emerges from the self-centred and self-suppressed stupor of non-entity to the enlightenment and the self-less heroism of an all-enveloping, universal soul.

This transformation of the Mother is almost miraculous, but Gorki, with his maturity as a master craftsman, with his extraordinary powers of articulation, with his grim sense of realism and with his profound insight into psychology, is able to convince the reader that the best in the human personality can be drawn out by suitably manipulating the environment.

During the life time of her savage husband, Pelagea had no time even to love her son Pavel, but after the death, she gets a dim sense of freedom. Pavel renounces the ways of his father and turns to reading forbidden books to know the truth. The Mother watches the son growing thin. She wonders if he is in love. Out of concern, she comes closer to him. The son asks her, "What joy have you ever known in your life?" Never before had any one spoken to her about her life. Her son's pity for her touches her and fills her with pride, for Mothers are hardly ever pitied.

The Mother is frightened when other revolutionaries meet her son in her house secretly and have animated arguments about things she does not understand. She suspects the revolutionaries, but when she finds them human, she expands further and becomes Mother or Nenko to all of them. She grows to like Khokhol, a Ukranian revolutionary, who exclaims: "We know no tribes or nations, only comrades, only enemies. All workingmen are our comrades; all rich men, all Governments are our enemies ..................... We are children of one mother, all fired with invincible faith in the brotherhood of the workingmen of the whole world. This thought warms our hearts. It is the sun shining in a just heaven and that heaven is the heart of the worker. Whoever he is, whatever he calls himself, a Socialist is our brother in spirit for all time—yesterday, today and for ever! '

A feeling of spiritual affinity with the workers of the whole world was born in the Mother's mind, as she heard Khokhol. Though she could not grasp the entire meaning of what he said, she was aware of its force—so youthful, intoxicatingly joyful, so full of hope.

The Mother had an ardent faith in God. She would silently plead with her son not to wound her heart with sharp words of unbelief. But behind his unbelief she sensed a faith and this comforted her.

" I wasn't talking about the kind merciful God you believe in", said Pavel, " but about the one the priests threaten us with, as if he were a club; the one in whose name they try to make all people bow down to the evil will of the few."

"That's what !" exclaimed another revolutionary, striking the table, "They have pawned a false God off on us ! Fight us with everything they can lay hands on! Think this over, mother; God created man in his own image, which means He resembles man if man resembles Him. But we are more like beasts than Gods. The Churches shake a scarecrow at us. Got to change our God, Mother. Got to clean Him up, too! They've dressed him up in lies and slander ; mutilated the face of Him to kill our souls."

Hearing these words, "I shall go away", the Mother said, shaking her head, " It's beyond my strength to listen to such talk." Quickly she went into the kitchen, cursing the heretic and the rebel. But all the same behind the words denying God, the mother could detect a firm faith in Him. Then she would smile a quiet, all-forgiving smile. Here we see her crude, fanatical faith softening and broadening.

A large swamp overgrown with firs lay beyond the factory. In the summer this swamp exuded thick yellow vapours and sent off clouds of mosquitoes that spread fever in the settlement. The swamp belonged to the factory and the new director decided to drain it in order to make profit from the land. On the pretext of doing for the sake of improving living condition this for the workers, he gave an order to deduct one Kopek from each ruble paid in wages for draining the swamp. The workers grew indignant because no such deduction was made from the wages of white-collar employees. Some of them ran up to Pavel for advice. Pavel explained the injustice of the deduction. He went to address the workers. The mother followed him proudly because she thought the

Director's act was sheer robbery. She heard her son addressing a crowd of workers. "Comrades", he exclaimed, "We are the people who build churches and factories, who forge chains and mint money. We are that living force by which all are fed and kept alive, from the cradle to the grave! " " Always and everywhere we are the first to work and last to get any consideration. Who has done the slightest things for us ? Does any one look on us as human beings ? No ! "

" No! " came an echoing voice. As Pavel began to speak more simply and calmly, the crowd slowly drew closer, merging into a single, thousandheaded body which looked up into his face with its myriad of attentive eyes, drinking in his every word. Pavel boldly shouted at the Director and called upon the workers to strike, but the Director threatened to fine them all and ordered them back on the job in 15 minutes. The workers obeyed the Director and Pavel went home, crest-fallen. The Mother understood Pavel and told him he was right. Pavel was later sent to prison for inciting the workers. The Mother was sad, but she met a number of other revolutionaries who had made greater sacrificies. She realized her love for her son was not pure love

She says, "It's not a pure love, our woman's love. We love what we need for our own sakes. But when I look at all those other people suffering for the sake of others,......... going to Jail and to Siberia.........young girls walking so far alone at night, thro' the mud, the rain and the snow. What makes them ?—Why do they do it ? Because they have a great pure love. And they have faith--a deep faith. But as for me--I can't love like that ! I only love what's my own, what's close to me."

"No, you don't" said the Khokhol, "Every one loves what's close to him, but far-away-things are close if one's heart is big enough. You can do great things because you have a great mother love in you."

The next step in the Mother's evolution is that far-away things come close to her heart. For love of the workers, she smuggles forbidden literature into the factory and distributes it courageously, and at great risk to herself. All this she does because she is convinced that the revolutionaries have discovered the true source of human sorrow and she accepts most of their tenets. Formerly she felt that no one needed her, but now she clearly sees that many people need her, and this is a new and pleasant realization, one that makes her hold her head high.

Suddenly unexpectedly, Pavel is released and the Mother heart becomes dizzy with joy. This was her first great happiness in her life and she wanted to preserve it in her heart. Fearing it might diminish, she hurried to cage it up, like a birdman, who has unexpectedly caught a rare specimen. But her joy is short-lived. May Day is coming and Pavel plans to lead a procession of workingmen, carrying the

banner in his hand. As the mother hears of this plan, her eyes begin to smart and her mouth goes dry. Pavel takes her hand and strokes it and says reproachfully, "It should make you glad instead of miserable. When will we ever have mothers who send their sons to death with a smile?"

" I won't stand in your way," she says, "but I can't help being a mother." From now on the Mother not only understands the sacrifice of her son for a noble cause but also justifies it and gives it all her moral support.

Now the May Day procession starts and Gorky rises to great heights of drama while describing this procession. Pavel heads the procession. He lifts his arm and the banner wavers. A long white staff flashes in the air, then dips into the crowd, bisecting it, hidden by it. A moment later, the banner of the working class rises above the lifted faces like a huge red bird. "Long live the working class," cries Pavel. Hundreds of voices roar back in response Mounted policemen ride straight into the crowd, lashing out with their whips and shouting : "Break it up!" The crowd surges back and forth. But Pavel sings courageously!

Arise to the struggle, oh workers, arise :

Arise, all who labour and hunger.

The mother is uplifted by the son's courage and tells the people in the crowd, " I am Pavel's mother". She tells the frightened women, " Don't be afraid. Theirs is a sacred cause. Just think there wouldn't have been a Christ if people hadn't died for Him". The procession has now assumed the form of a wedge with Pavel at the head. "Or perhaps " says Gorky, "the procession move nearly resembled a dark bird with widespread wings ready to take to flight. with Pavel as the beak of this bird."

Meanwhile, the Army men press towards the crowd. " Disperse! " commanded a little officer as he flourished his sword. In a wavy line the bayonets were lowered until they greeted the advancing banner with a cunning steel grin. The little Officer ran over to Pavel and seized the flag. " Take your hands off!" said Pavel in a loud voice. The banner shook in the air, dipping to right and to left, then again stood upright. "Arrest them! " shouted the old man with a stamp of his foot. Several soldiers ran forward. One of them swung the butt of his gun. The banner shuddered, fell forward and disappeared in the grey mass of soldiers. The clear voice of Pavel was heard from among the soldiers :

" Good-bye, Mother! Good-bye, dearest."

This was a great moment in the life of the Mother. Deep within her, great new words were being born—words of all-embracing love which seared her tongue and forced it to speak fluently and forcefully. She spoke to the crowd, " Our children have gone forth into the world to seek for joy. Dear people, the young ones have risen up for the sake of the whole world. Have faith in them."

From this moment the Mother of Pavel becoms transformed into the universal Mother. She concentrates the essence of this selfless love in hard bright crystals of words, and says, "It is as if a new God had been born to man! Everything for all—and all for every one! In very truth, we are all comrades, all kindred spirits, all children of one mother, who is truth."

These are great words, not bookish words, but words born out of a loving and experiential understanding of the Truth and are strangely reminiscent of what Tirumoolar said two thousands years ago ;

"Love and God are two", say the fools;<br>
They know not Love is God;<br>
The moment they know<br>
that Love is God,<br>
They will remain anchored<br>
in Love that is God.

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்<br>
அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்<br>
அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்<br>
அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே. *

# "தேவை அடிப்படையிலே ஊதியம்!"

—( கொடுமுடி ராஜகோபாலன் )—

சுதந்திரம் பெற்ற நாம், இவ்வாண்டு முழுவதையும் வெள்ளிவிழா ஆண்டாகக் கொண்டாட வேண்டுமென்பது ஆளும் காங்கிரஸின் ஆக்கினை! அப்படியே, கொண்டாடுவோமே! அதிலே, நமக்கு ஆனந்தமே இல்லையென்று கூறிவிட முடியாதுதான்! ஆயினும், அந்த ஆனந்தத்தில், நாம் சிந்தித்துப் பார்க்கும் தன்மையை, நிச்சயம் இழந்துவிடக் கூடாது என்பதே, என் எச்சரிக்கை! இந்தச் சுதந்திரம் பெற, ஆற்ற முடிந்ததையெல்லாம் ஆற்றி, கொடுக்க முடிந்ததையெல்லாம் கொடுத்து, இழக்க முடிந்ததையும்-இழக்கவே கூடாததையுங்கூட இழந்து பணிபுரிய வைத்த தேசபக்தியில் எச்சரிக்கையென்றே! என் எச்சரிக்கையைக் கொள்ள வேண்டும்!

அப்படிச் சிந்தித்துப் பார்க்கும்போதுதான், நாம், இந்த இருபத்தைந்து ஆண்டு சுதந்திர வாழ்விலே, சுதந்திர வாழ்விற்கே சவால் விடுகின்ற போக்குகளைப் புரிந்து கொள்ளமுடியும்; சிந்திக்கச் சிந்திக்க, இப்போக்குகளால் "சுயநலம்" எவ்வளவிற்கு விசுவரூபமாக வளர்ந்திருக்கிறது வாழ்விலே அமைதியின்மையைத் தோற்றுவித்திருக்கிறது என்பதைப் புரிந்துகொள்ள முடியும்! சிந்தித்துப் பார்த்து; ஆத்ம பரிசோதனை செய்துகொண்டு, அதற்கேற்ப செயல்வழிகளை வகுத்துக் கொள்ளாத சமுதாயம் திறமைகொண்ட சமுதாயமாக இருக்க முடியாது. சிந்திக்கச் சிந்திக்கவே, எந்தப் பிரச்னையையும் -எழுகின்ற கோரிக்கைகளையும், பின்பற்றப்படும் செயல்வழிகளையும் ஆழ்ந்து ஆராயவல்ல விழிப்புணர்ச்சி, பெரும்பான்மையான மக்களின் நலன்களைக் காக்கவல்ல உணர்வாக ஓங்கிநிற்கின்ற வல்லமையைப் பெறும்போதுதான், சமுதாயம் விழித்துக் கொண்டுவிட்டது என்று கூற முடியும்.

அவ்விதச் சமுதாய விழிப்பு, சுதந்திரம் பெறுவதற்கு முன்பிருந்த நிலையில், சுதந்திரம் பெற்றபின்பு, அதுவும் இன்றைய நாளில், உறங்கியே போய்விட்டதோ என்று நினைக்கும் அளவிற்கே இருக்கிறது! சுதந்திரம் என்பதற்குப் பொருள் கூறும் வாசாவகர்களின் உத்திகளால், அவ்வுத்திகளுக்கு ஆதாரமாய்-உந்தும் சக்தியாய் உள்ள "சுயநலம்" என்கிற சமுதாய விரோதப் போக்கால்,-அவர்களுடைய "தேர்தல் உணர்வு" நோக்கால், சமுதாய விழிப்பு என்பது அமுங்கியே போய்விட்டதோ என்று நினைக்கவே தோன்றுகிறது! இவர்களின் விதவிதமான சோஷலிஸக் கோஷங்களால், இவர்களாலேயே தோற்றுவிக்கப்பட்டு, வளர்க்கப்பட்டு கொழுக்கவிடப்பட்டு எழுந்துவிட்டக் கோரிக்கைகள், முடிவிலே, இவர்களை மட்டுமின்றி பெரும்பான்மையான மக்களையே-மக்களின் சமுதாய விழிப்பினையே அடக்கி ஒடுக்கிவிடவல்ல ஆட்சியையே தோற்றுவித்துவிடும் என்று, நாம் நினைக்கவே தோன்றுகிறது! தங்களையும் அறியாமல், தங்களின் ஆட்சி அதிகாரத்தை, தங்களையே, முடிவிலே, அழித்து விடும் பயங்கரச் சுயநலத்திற்கு உதவியாகவும், "சமூகநீதி" என்பதன் பெயரால், பெரும்பான்மையான சமுதாய நலன்களுக்கு எதிராகவும், ஆளும் கட்சியினர் பயன்படுத்தி வருகிறார்கள் என்பதே. நாம் காணும் இன்றையச் "சுதந்திரக் காட்சியாகும்! இந்தக் கோரிக்கைகளிலே, ஒன்றைப் பற்றியதே இக்கட்டுரையாகும்!

"தேவை அடிப்படையில் ஊதியம், என்பது இவ்விதக் கோரிக்கைகளிலே முதலாவதாகும்; மிகமிக முக்கியமானதுமாகும்! "தேவை அடிப்படையிலே ஊதியம்" என்ற கோரிக்கையை வற்புறுத்துகிறவர்கள், வாழ்க்கைக் குறியீட்டெண்ணில் புள்ளிகளை

ஆதாரங்காட்டி வலியுறுத்துகிறார்கள்! ஆனால், அவர்கள் தங்கள் தேவைகளுக்கு வரம்புகட்டிக் கொள்ளத் தயாராயில்லை! உத்தியோகம் செய்கிறவர்கள்-தொழிலாளர்கள் மட்டுமே, இந்தப் பிரத்தியேகக் கோரிக்கையை வலியுறுத்துவதன் மூலம்.-ஆர்ப்பாட்டங்கள்—பயமுறுத்தல்கள், வன்முறைகள்-வேலை நிறுத்தங்கள் வாயிலாக வலியுறுத்துவதன் மூலம், இவர்களை மட்டும் திருப்தி செய்வதில்தான் தங்களின் 'அரசியல் லாபம்'' இருக்கிறது என்று நினைக்கின்ற ''சோஷலிச ஆட்சி'' யாளர்களைப் பணிய வைத்துப் பலன் காணத் துடிக்கிறார்கள்! இவர்களின் தேவைகளோ வளர்ந்து கொண்டே வருகின்றன! அவற்றிற்கு அளவே இல்லை! அவர்களில் அளவற்ற தேவைகள் வெறும் ஆசையாக இருக்காமல், பேராசையாக வெறியுற்று விவகாரம் பெற்று விட்டன! இந்த வெறியில், அவர்கள், உத்தியோகத்திலோ அல்லது தொழில்களிலோ இல்லாத-நகரங்களில் வசிக்காத கோடானு கோடி மக்களின் வாழ்வை மறந்துவிடுகிறார்கள்! தாங்கள் மட்டுமே எல்லாவிதத் தேவைகளும் பூர்த்தி செய்யப்படும் ரீதியில் சுக வாழ்வு நடத்தப் பிறந்தவர்கள் என்று அவர்கள் நினைத்து விட்டார்கள்! வாழ்க்கைக் குறியீட்டின் 238 புள்ளிகளை எட்டிவிட்டால் போதும், அவர்களின் அலவன்ஸ்-போனஸ் விகிதங்கள் கூடிவிடவேண்டும்! அப்படிக் கூட்டப்பட்டு விட்டவுடன், உற்பத்திப் பொருள்களின் விலைகள் எல்லாம் விஷம் போல ஏறிவிடுகின்றன! உற்பத்தி செய்பவர்களுக்கு, இந்த விலையேற்றம் எவ்வித உதவி செய்வதாயில்லை! ஏனெனில், ஆளுகை அதிகாரத்தில் ஏகபோக வியாபாரம், இவற்றை ''லெவி'' போன்ற கட்டாயக் கொள்முதல் வழிகளிலே திரட்டிப் பெரும் லாபம் தீட்டுகிறது! இதனால், பலன் பெறுகிறவர்கள் :

1. தனியார் துறையில் உள்ள லாப வெறி நோக்குள்ளவர்கள் ;

2. பொதுத்துறையில் உள்ள ஆதிக்க வெறியர்கள் :

சோஷலிசப் போதையை ஏற்றி-அரசியல் சூதாட்டம் ஆடுபவர்கள்:

3. இவர்களை மிரட்டிப் பணியவைத்துப் பலன்பெறத் துடிக்கும் உத்தியோகஸ்தர்கள்-தொழிலாளர்கள்:

பொதுத்துறையில் உள்ள ஆதிக்க வெறியர்களின் லாப நோக்கத்திற்கும், தனித்துறையில் உள்ளவர்களின் லாபவெறி நோக்கிற்கும் அதிக வேற்றுமையிருப்பதாகத் தெரியவில்லை! இவ்விரண்டு சாராருமே, ''தேவை அடிப்படையிலே ஊதியம்'' என்ற கோரிக்கைக்குப் பலமளிப்பவர்களாக இருக்கிறார்கள்! இருவருமே, முடிவேயில்லாமல் வளைய வரும் நச்சுவட்டமொன்றைத் தோற்றுவித்து விட்டார்கள்! அடிக்கடி விட்டுக்கொடுப்பது மூலம், இவ்விருசாரரும், உத்தியோகஸ்தர் தொழிலாளர் வர்க்கத்தினரைத் ''தாஜா'' செய்து கொள்வதுமூலம், தங்கள் ஆதிக்க வெறி-லாபவெறியைப் பூர்த்தி-செய்து கொள்ளுகிறார்கள்! தங்கள் நிலைகளிலே ஊன்றிக்கொள்ள வழி செய்து கொள்ளுகிறார்கள்! உழைத்தும், உழைப்பின் பலனை அனுபவிக்காதவர்கள்-வேலையின்றி வாடுகிறவர்கள்-இவர்களின் பெரும்பான்மை அணி, மேலே சொல்லப்பட்ட வெறியர்களுக்கு எதிராகப் புரட்சிசெய்யும் நிலைமை ஏற்படவே ஏற்படாது, என்று இவ்வெறியர்களும்சரி, இவ்வெறியர்களைப் பயன்படுத்திக் கொண்டு மிரட்டல் மூலம் தங்கள் அளவற்ற தேவைகளைப் பூர்த்தி செய்யவல்ல ஊதிய உயர்வு அலவன்ஸ் உயர்வுகளைப் பெற்று விடத் துடிப்பவர்களும் சரி நினைத்து விட்டால், அதன் விளைவாக இவர்களுக்கு ஏற்படக்கூடிய பயங்கர அதிர்ச்சிகளுக்கு இவர் இவர்களே பொறுப்பேற்கவேண்டிய காலம் வரவே செய்யும்!

''தேவை அடிப்படையிலே ஊதியம்'' என்ற தம் கோரிக்கையை, மிரட்டிப் பணிய வைக்கும் சாகஸத்தின் மூலமோ அல்லது சில சமயங்களின் வன்முறைச் செயல்வழி மூலமோ பெற நினைப்பவர்கள்—முடிவிலே உற்பத்தி ஸ்தாபனங்களையே அல்லது அரசியல் அதிகாரத்தையோ கைப்பற்றி விடவே பார்க்கிறார்கள்! இவர்களை எதிர்க்க முடியாத அளவிற்கு, இவர்களைத் தங்களின் ஆட்சி அதிகார நிலை நாட்டலுக்கு வளர்ந்து விட்ட ஆட்சியாளர்களும் சரி, இவர்களுடன் மோதும் போது மோதியும்,-விட்டுக்

கொடுத்து தாஜாப்பண்ணவேண்டிய நேரத்தில் தாஜா பண்ணியும்,-பணிவது போல நடத்தும் தங்கள் லாபவெறியை விடாப்பிடியாக வளர்த்துக் கொள்வதிலே கண்ணும் கருத்துமாய், உள்ளவர்களும் சரி, முடிவிலே "தேவை அடிப்படையிலே ஊதியம்" என்று கூறி அதிகாரத்தையே கைப்பற்ற நினைப்பாரின் "சக்தி"க்குள்ளே அடங்கி ஒடுங்கி விடுகிறார்கள்! இதன் விளைவாக, உத்தியோகத்தையே தொழிலாகக் கொண்டவர்கள், தொழிலையே வாழ்க்கையாகக் கொண்டவர்கள்,-சம்பளம் சலுகைகள் -மான்யங்கள் என்ற ரீதியில் பொதுப்பணத்தில் கணிசமான பகுதியைப் பெறுகிறவர்களாகிய ராணுவத்தினர்-இவர்களின் "சிறுபான்"மைப் பயங்கர ஆட்சியே ஏற்படும் என்று சொல்லத் தேவையில்லை; இதைத்தான், ராஜாங்க-ராணுவ-வியாபார-முதலாளித்துவ ஆட்சி என்று சொல்ல வேண்டியிருக்கிறது! இத்தகைய ஆட்சியையே, தொத்து நோய்கள் ஏற்படுத்துவதற்கான காரணமாயிருக்கும் துர்நாற்றக் குட்டையின் நடுவேயுள்ள" இந்த ஆட்சியையே, நாம் எதிர்க்க வேண்டியிருக்கிறது. இதையே அழகாகச் சித்தரித்துக் காட்டுவார்-"சோஷலிஸ ஆட்சி" என்கிறார்கள்!

பேராசையை வளர்த்துக் கொண்டே போய், முடிவிலே பயங்கர "சிறுபான்மை"ச் சர்வாதிகாரமாக பேயாட்டமாடவல்ல ஆட்சியையே, காந்தியடிகள் எதிர்த்தார்கள். திறமை கொண்ட-தீமையற்ற,-தொழில் புரிந்து யாவரும், தேர்ந்த கல்வி ஞான மெய்தி வாழ்வதற்கும், சுயநலமோ-சுரண்டலோ எந்தவிதத்திலும் இல்லாத வாழ்விலே வாழ்வதற்கும் - நமது மரபுகளுக்கேற்ற பொருளாதார-சமூகநீதிக் கட்டு கோப்பிற்குள்ளே தாமும் வாழ்ந்து-பிறரைப் பயமின்றி வாழ்வதற்கு வழிவிட்டும் வாழவல்ல வாழ்வதற்கும் காந்தியடிகள் வழிகாட்டினார்கள். அதை மறந்துவிட்டு,-பிறநாட்டவர் உதறித் தள்ளிவரும் ஒவ்வொன்றையும் புகழ்ந்து பற்றி நிற்க "வழி" காட்டுகிறவர்களின் மாயாஜாலத்திலே மதியிழந்து மயங்கி நிற்கிறோம்! இந்த நிலை, மாறினாலன்றி, நாம் சுதந்திரம் பெற்றுவிட்டோம் என்ற நினைப்பிலே களித்தாட முடியாது.

ஒரு நாட்டின் அரசு, அது பெறும் வருவாயில் பெரும்பகுதியை, நிரந்தர ராணுவத்தில் பணிபுரிந்துவருபவர்களுக்கும், உத்தியோகம் பார்க்கும் ஊழியர்களுக்குமே செலவழித்து விடுவதென்ருல், அதுவும் இவர்களின் ஆதரவைப் பெற்று ஏன் திரட்டி ஆட்சியை நிலைநாட்டிக் கொண்டுவிடச் செலவழித்துவிடுவதென்ருல், – இதன்மூலம் இந்தச் ''சிறுபான்மை'' யினரே அரசியல் வாழ்விலே-சுகபோகச் செழுமையிலே வாழ்வதென்ருல், இம்மாதிரி நிலைமையை நீடிக்கவிடலாமா?

வானத்தை முட்டுகின்ற பெரும் காரியாலயக் கட்டிடங்கள் எழும்பிய வண்ணமிருக்கின்றன! பாராளுமன்றக் கூட்டங்களிலும்-சட்டசபைக் கூட்டங்களிலும் கலந்துகொள்ளும் ''உரிமை'' யை, பெரும்பணச் செலவில் நடைபெற்ற '' தேர்தல் '' மூலமும்–''போஸ்டர்'' – ''மேடை'' வழிச் ''சோஷலிஸ'' கோஷங்கள் மூலமும் பெற்றுவிட்ட பிரதிநிதிகளுக்காக அரசும், அப் ''பிரதிநிதி'' களின் ''அந்தப்புற'' ''எஜமானர்'' களும் ஏராளமாகச் செலவு செய்துகொண்டேயிருக்கின்றனர்! இந்தப் ''பிரதிநிதி'' கள், தேர்தலுக்குப் பிறகு, மக்களின் ''பிரதிநிதி'' களாக இதற்குப் பதிலாக, லாபவெறிகொண்ட தனித்துறை முதலாளிகளுக்கும், - இவர்களோடு மோதிக் கொள்வதினுல் தம்முடைய ''தேவை அடிப்படையிலே ஊதியம்'' என்ற கோரிக்கை நிறைவேறுமென்ருல் மோதிப் பார்ப்பதும் – சமரஸ வழி மூலம் நிறைவேறுமென்ருல் பணிவது போல நடிப்பதும் போன்ற வழிகளிலே தேர்ந்த சுயநல உணர்வுள்ளவர்களாகிவிட்ட உத்தியோகஸ்தர்கள் -தொழிலாளர்களுக்கும், தங்களைப் '' பிரதிநிதி'' களாகக் கொண்ட, அரசை நிலைநிறுத்துவதற்காகச் '' சந்தர்ப்ப வாத''ப் பிரதிநிதிகளாக நடந்துக் கொண்டேயிருக்கிருர்கள். இந்த நிலைமையை நீடிக்கவிடலாமா?

''இந்த நிலைமை நீடிக்கவே கூடாது'' என்று சொல்ல எவருமே அஞ்சவேண்டாம்! காந்தியடிகளையே ''பிற்போக்காளர்'' என்று கூறியவர்கள், ''இவ்வித நிலைமை நீடிக்கவே கூடாது'' என்கின்றவர்களையும் ''பிற்போக்காளர்கள் '' என்றே, நிச்சயமாக அழைக்கத்தான் செய்வார்கள்.

''உழைப்புக் கேற்ற ஊதியம்'' என்பதே எல்லோராலும் ஏற்றுக் கொள்ளக் கூடிய விதியாக இருக்க முடியும். அத்துடன், எல்லோரும், சமுதாயச் சீர்மைக்காக உழைத்து ஆக வேண்டும். சோம்பலையூட்டிப் பிறர் உழைப்பில் உண்டு களிக்கச் செய்கின்ற முறைமையும், உழைப்பதில் அக்கரைக் காட்டாமல், தேவைகளை வளர்த்துக் கொண்டே அதற்கேற்ப ஊதியம் உயர்ந்து கொண்டேயிருக்க வேண்டும். அவ்விதம், ஊதியம் உயர்த்தப்பட பயமுறுத்தல்-வன்முறைகளில் இறங்கவேண்டும். முடிவிலே, அரசையும் பணிந்துவிடுமாறு செய்யவேண்டும் என்ற ரீதியிலே வளர்ந்துவரும் அதிகாரவர்க்க–தொழிலாளர் வர்க்க முறைமையும்,-அரசியல் லாபங்கருதி இவ்வித இரண்டு முறைமைகளுக்குமே, '' பாலுக்குங் காவல், பூனைக்கும் தோழன்'' என்ற ரீதியில் ஆதரவு தரும் சமயத்தில் ஆதரவு தந்து, அடக்கிவிடுவது போல நடித்துக் காட்டும் ஆளுகை முறைமையும் நீடிக்கவே கூடாது என்று உரத்தக் குரலில் முழுக்கம் செய்வோம்.

சகிக்கவே முடியாத நிலைமை, எந்த நாளும் நீடிப்பதை அனுமதிக்கவே முடியாது. எனவே, நம்மைப் பொறுத்தமட்டில், நமது சுதந்திரப் போராட்டம் ஓய்ந்துவிடவில்லை. அர்த்தமுள்ள - களங்கமேயில்லாதச் சுதந்திரத்தை நாம் காணும்வரை, நமது சுதந்திரப் போராட்டம் எப்படி ஓய்ந்துவிட முடியும்?

---

தேவதரிசனம் :

## உலகம்-காலம்

பிரிந்து காணப்படுகின்ற இந்த உலகு ஒன்றே என்பதும், காலமென்பது ஒரு மயக்கம், அல்லது கற்பனை என்பதும் நாம் புரிந்துகொள்ளவேண்டும். எல்லாம் ஒன்று; எதுவும் அழிவதில்லை. இன்புற்று, அன்புற்றிரு. இதுவே வேதஸாரம். ஆறறிவைக்கடந்த அதிமானுட ஏழாமறிவு உண்டு என்று உணர்.

# சாதனை

— வல்லிக்கண்ணன்

மகத்தான சாதனை ஏதாவது புரிய வேண்டும் என்று அவன் ஆசைப் பட்டான்.

தன்னால் அப்படி ஏதேனும் ஒன்று புரிய முடியும் என்று எண்ணினான். அவ்விதம் ஏதோ ஒரு சாதனை புரிவதற்காகவே தான் பிறந்திருப்பதாக அவன் நம்பினான்.

ஆனால் என்னத்தைச் சாதித்து முடிப்பது என்று தான் அவனுக்கு விளங்கவில்லை.

என்றாலும், தான் மாபெரும் செயல் ஒன்றை என்றாவது, எப்படியாவது, செய்தே தீரவேண்டும் என்ற எண்ணம் அவனுள் சதா குடைந்து கொண்டிருந்தது. மற்றவர்கள் வியக்கும்படி, பிரமித்துப் போகும்படி, போற்றிப் புகழும்படி, என்றும் நினைவில் வைத்துக் கொள்ளும்படி—

இரண்டு மூன்று பேர் எங்கே எப்போது சந்தித்துக் கொண்டாலும், 'உனக்கு விஷயம் தெரியுமா? நம்ம அவன் அப்படி ஒரு வேலை செய்து போட்டான் பாரும்...' என்று நினைத்து நினைத்துப் பேசும்படி—

'அட அவனா, அவன் இப்படி ஒரு செயலைச் சாதிக்க முடியும் என்று நான் எண்ணியதேயில்லையே!' என்று அவனை அறிந்தவர்கள் கூட அதிசயிக்கும்படி—

ஒரு அற்புதம் நிகழ்த்தவேண்டும். அது எவரும் எண்ணியிராத - செய்யாத - செய்யத் துணியாத ஒரு சோதனையாக விளங்கவேண்டும்...

இது அவன் எண்ணம். ஏக்கம். ஆசை. கனவு. லட்சியம். எல்லாமேதான்.

ரொம்ப காலமாக அவனுள் வளர்ந்து வரும் நினைப்பு அது. என்று அது வித்தென அவன் மனசில் விழுந்ததோ; எப்படி முளையிட்டு, துளிர் நீட்டி; மேலெழுந்து, கிளைத்து, வளர்ந்ததோ—அவனால் திட்டமாகச் சொல்ல இயலாது. கொஞ்சம் கொஞ்சமாகப் படர்ந்து, தழைத்துச் செழித்த இந்நினைப்பு நாளடைவில் களையென மண்டி, அவன் உள்ளம் பூராவும் அடைத்துக்கொண்டு இருண்டு கனத்தது. அவனது அந்த ஆசையே பாதிக்கும் ஒரு நோயாக மாறியது.

—மாபெரும் சாதனை ஒன்று செய்தாக வேண்டும்... என்னால் செய்ய முடியும்... அதைச் செய்வதற்காகவே பிறந்தேன்.. செய்துமுடிக்காமல் நான் சாகப்போவதில்லை.

'நிச்சயமாக நம்பு. நம் வாழ்வில் நாம் மகத்தான சாதனைகளைச் செய்து முடிப்பதற்காகவே நாம் பிறந்திருக்கிறோம்!' என்று ஒரு 'சாமியார்' திருவாய்மலர்ந்தருளியிருக்கும் பொன்மொழி-எப்பவோ ஏதோ ஒரு நாளில் உதிரியாகத் தென்பட்ட அச்செழுத்துக்கள்—அவனுள் மிகுந்த வேலை செய்தது. அவனது நம்பிக்கைக்கு நெய்யூற்றிக் கொழுக்க வைத்தது.

—ஆமாம். நிச்சயமாக நான் சாதனை புரிந்தே தீருவேன்...

ஆனால் என்ன சாதிப்பது? எப்படிச் செய்வது?

சாதனை என்றால்—

அசகாய சூரச் செயல். அதிவீர பராக்கிரமம். அசாதாரண அற்புதம். சராசரிக்கு அப்பாற்பட்டது. சகஜமானவைகளிலிருந்து மாறுபட்டு மேலோங்கி நிற்பது...

அவன் மனம் எண்ணக் காற்றாடி மேலே மேலே எவ்வும்படி நினைப்பின் புரியை அவிழ்த்துச் சுழலவிடும். தெருவில் நடக்கும் போதும், ஓட்டலில் தின்னும்போதும், நண்பர்களோடு உரையாடும் போதும், தனியே செயலின்றிச் சோம்பியிருக்கும்போதும், தூங்கும் போதும், எப்போதுமேதான்.

—சும்மா நடக்கிறவர்கள் மத்தியிலே, வெகு தூரம் அதிவேகமாக ரொமப நேரம் நடந்தால், அது ஒரு சாதனைதான். மிக மெதுவாக நடந்தால், நீண்ட தூரத்தை மிகக் குறுகிய காலத்தில் ஓடிக் கடந்தால், களைக் காமல் வெகுநேரம் ஓடிக்கொண்டேயிருந் தால்...

ஒருவன் அசாதாரணச் செயல் புரிவதற் காக ஒரு மைதானத்தில் சைக்கிள் சவாரி செய்தான். சைக்கிளில் சுற்றுகிறபோதே பழங்கள் தின்றான்- சாப்பிட்டான். குடம் தண்ணீரை வாங்கித் தலையில் கொட்டிக் கொண்டான். இரவு பகலாகச் சுற்றினான். ஒரு நாளுக்கும் மேலாகவே சுற்றிக்கொண் டிருந்தான். இதை வேடிக்கை பார்க்கப் பெரும் கும்பல் கூடியது.

'அது சாதனை!' என்று அவன் மனம் பேசியது.

பிறகு அதையே தொழிலாக ஆக்கிக் கொண்டான் அவன். அவனைப் பினபற்றி வெவ்வேறு நபர்கள், வெவ்வேறு நகரங் களில், இவ்வித்தையை நாள் கணக்கில் செய்துகாட்டி, பணம் பண்ணுவதில் ஈடு பட்டுவிட்டார்கள். அதனால் அது அசா தாரணம் என்ற போதிலும் சாதாரணமான ஒரு தன்மையைப் பெற்றுவிட்டது என்று அவன் அறிவு கூறிக்கொண்டது.

சாதாரணமானவற்றைக் கூட, மற்றவர் களை மிஞ்சும் வகையில் செய்துகாட்டினால், அது சாதனையாக ஏற்றுக்கொள்ளப்படும் என்று அவன் எண்ணினான். ஓட்டலில் சாப்பிடும் போது.

—சாதாரணமாக நாம் அஞ்சாறு இட்டிலி சாப்பிடுகிறோம் என்றால், சிலர் பத்து தின்றார்கள் என்றால், அத்துடன் நிறுத்தாமல் இருபது...முப்பது...முப்பத்திரண்டு என்று தின்றுகொண்டே போய் ஒரு உச்சபட்சத் தைத் தொட்டு நிறுத்தினால் அது ஒரு சாதனை தானே!

'பந்தயம்' பேசி, அப்படித் தின்று தம் திறமையை நிரூபித்து வெற்றி பெறுகிறவர் களும் இருக்கிறார்கள். இட்டிலி என்று இல் லாமல், வடை, முறுக்கு, தோசை; பூரி என்று சாதனைப் பொருள்களை மாற்றி ரிக்கார்ட் நிறுவுகிறவர்களும் உண்டு என்பது அவ்வப் போது அவன் காதுகளை எட்டுகிற சேதிகள் மூலம் தெளிவாகிக்கொண்டிருந்தது.

'நாமும் அப்படி ஏதாவது ஒரு சாதனை செய்து காட்ட முடியுமானால், மிகவும் சுவை யாக இருக்குமே!' என அவன் மனம் ஏங்கும்.

'சுவாரஸ்யமான சாதனைகள் செய் வதற்கு துணிச்சல் வேண்டும்' என்று ஒரு நண்பன் சொன்னான். சவால்களையும் சாதனைகளையும் குறித்துப் பேசும் போது தான் அப்படிச் சொன்னான். 'சந்திரனுக்குப் போவது, அங்கே இறங்கி ஆராய்வது போன்ற அரிய பெரிய சாதனைகளை மட்டும் சொல்லவில்லை. அல்ப விஷயங்கள் என்று தோன்றுகிறவற்றைச் செய்து முடிப்பதற்குக் கூடத் துணிவு வேண்டும்' என்றான். ஒரு உதாரணமும் கூறினான்.

சில பேரிடையே—வயது வந்தவர்கள் தான்—பந்தயப்பேச்சு சூடு பிடித்தது. இடுப்பு வேட்டியை அவிழ்த்துப் போட்டு விட்டு, பட்டப்பகலில், பெரிய தெரு வழியே, இந்த முனையிலிருந்து அந்த முனை வரை நடந்து போக வேண்டும். அப்படிப் போனால் நூறுரூபாய் நான் தரத்தயார் என்று ஒருவன் பணச்செருக்குடன் சவாலிட்டான். அவ்வாறு போக அங்கிருந்தவர்களில் எவரும் துணியமாட்டார்கள் என்று எண்ணி னான் அவன். ஆனால், பணத்துக்காக எதையும் துணிந்து செய்வதற்கு எங்கும் யாராவது இருக்கத்தான் செய்வார்கள் என் பதை அவன் கருத்தில் கொண்டானில்லை. சூரியன் பிள்ளை என்கிற ஒரு ஆள் அப்பேர்ப் பட்டவர். அவர் நான் ரெடி என்று கிளம்பி னார். இடுப்பு வேட்டியை அவிழ்த்து தலை யில் கட்டிக்கொண்டு தெருவில் நடந்தார். அவர் வெட்கப்படவில்லை. அந்த நேரத்தில் அந்தத் தெருவில் ஆள் நடமாட்டம் அதிகம் இல்லை. வெளியே அடி எடுத்து வைத்திருக் கக்கூடிய-தலை நீட்டியிருக்கக்கூடிய-சன்னல் வழியாக எட்டிப்பார்த்தபடி நின்றிருக்கக் கூடிய-பெண்பிள்ளைகள் தான் ஓடி ஒளிய நேர்ந்தது. இந்த மூலையிலிருந்து அந்த மூலை வரை விடுவிடு என்று போய்விட்டு, மறுபடி வேட்டியைக் கட்டிக்கொண்டு வந்து, 'எடு ரூபாயை! பேசினபடி நூறு ரூபாயைக் கொடு!' என்று கை நீட்டினார். அவனும்

மறுபேச்சுப் பேசாமல் பணத்தைக்கொடுத்து விட்டான். அவர் எல்லோரையும் கூட்டிக் கொண்டு ஓட்டலுக்குப் போய் ஜாலியாகச் செலவு செய்தார். சப்ளை ஏகதடபுடல்!

இதைக் கேட்டபிறகு, 'இப்படித் தான் எங்க ஊரிலே...' என்று ஆரம்பித்து, ஒவ் வொருவர் எதையாவது ஒன்றை விவரித்தார் கள்.

'உம் இதுவும் ஒரு சாதனைதான். ஆனால் இந்த மாதிரி எல்லாம் என்னாலே செய்யவே முடியாது' என்று அவன் மனம் முணுமுணுத் தது.

கீழே கிடந்து உருண்டு புரண்டபடியே ஒரு பெரிய கோயிலின் பிரகாரங்களைச் சுற்றி வந்தது பற்றி- 'அங்கப் பிரதட்சணம்' என்று - ஒருவர் பெருமையாகச் சொன்னார்.

கைகளை ஊன்றி, கால்களை மேலே உயர்த் தியவாறு, தலைகீழாக நடந்து நடந்தே பல மைல்களைக் கடந்தது குறித்து ஒருவன் விரி வாகப் பேசினான்.

மிக உயரமான ஒரு இடத்திலிருந்து, 'நீலகண்டன் கசம்' எனப் பெயர்பெற்றிருந்த பயங்கரமான ஒரு ஆழத்தினுள், ஆற்றில், குதித்து, மூழ்கி அடிமட்டம் வரைபோய் மண் எடுத்துக் கொண்டு வந்து காட்டிய சூரத் தனம் பற்றி இன்னொருவன் சொன்னான்.

இவ்விதம் ஒவ்வொரு இடத்தில், சிலரோ பலரோ சாதனைகள் பற்றிப் பேசுவது சகஜ மாக இருந்தது. ஒரு புட்டி மண்எண்ணை யைக் குடித்துவிட்டு பாட்டிலைக் கடித்துத் தின்றவனைப் பற்றியும், தண்ணீர்ப் பாம்பைப் பிடித்துத் தலையைக் கடித்துத் துப்பிவிட்டு, பஜ்ஜி தின்பதுபோல், சுவைத்துத் தின்றவன் பற்றியும், இதுபோன்ற அசாதாரணச் செயல் கள் புரிந்தவர்கள் குறித்து அவ்வப்போது யாராவது பேசிக் கொண்டு தான் இருந்தார் கள்.

அதை எல்லாம் கேட்க நேர்கையில், அவன் எண்ணிக் கொள்வான்: எப்படியா வது ஏதாவது சாதனை புரிந்து;காட்டவேண் டும் என்பது மனித ரத்தத்தோடு ஊறிய பண்பு போல் தோன்றுகிறது, நாமும ஏதா வது செய்துகாட்டத்தான் வேண்டும். என்ன தாவது அபூர்வமானதாக, மற்றவர்களை திகைக்கவைக்கும் படியாக, அசாதாரணமாக ஏதேனும் ஒரு காரியம் செய்யவேண்டும். அது சாதனையாக மதிக்கப்படும்.

அப்படி என்ன செய்வது என்று தான் அவனுக்கு விளங்கவில்லை. அதனால் அவ னுக்கு அவனைப் பற்றியே சந்தேகம் எழுவ தும் இயல்பாயிற்று.

என்னால் பிரமாதமாக, அற்புதமாக, ஒரு சாதனை புரியமுடியும் என்ற நம்பிக்கையை வளர்த்துவந்த அவன் மனசின் ஒரு பகுதியே, நம்மால் எதுவும் பெரிசாய், புதுமையாய், செய்ய இயலாதோ; அப்படிச் செய்து முடிக் கும் ஆற்றல் நம்மிடம் இல்லையோ என்ற ஐயத்தையும் வளர்ப்பதாயிற்று. வர வர இதுவே வலிதாவது போலும் தோன்றியது.

அவனுடை பலவீனத்தை அவனே உணர்கையில் அவன் அமைதி இழந்தான். எல்லோர் பேரிலும் எரிச்சல் அடைந்தான். எதைக்கண்டாலும் வெறுப்பும் விரக்தியும் கொள்ளலானான். ஆயினும் இம் மனநிலையை மீறிவிடும் தன்மை தலைதூக்குகிறபோது, ஹே, நம்மால் ஏன் பெரிசாக சாதனை புரிய

முடியாது? நிச்சயமாக நான் ஒரு அரிய காரியம் செய்யத்தான போகிறேன் என்று கம்பீரமாகத் தனக்குத் தானே சொல்லிக் கொள்வான்.

மாறி மாறி வரும் இருளும் பகலும்போல, இம் மனநிலைகள் அவனை அலைக்கழித்தன. என்ன செய்வது என்றே புரியாத குழப்பம் மிஞ்சி, எதையும் செய்யாமல், வழக்கமான காரியங்களைக்கூட ஒழுங்காகச் செய்து முடிக்காமல் - ஒழுங்காக எதையுமே செய்ய முடியாதவனாய்-அவன் வளைய வரலானான்.

அவனை அறிந்தவர்கள் அவனுக்காக அனுதாபப்பட்டார்கள். அவனுக்கு 'மைண்டே சரியில்லை' என்று கருதினார்கள். அதற்கு ஒவ்வொருவர் ஒவ்வொரு காரணத்தைச் சொன்னார்கள். காதல் தோல்வி என்றும், கல்யாண ஏக்கம் என்றும், வேலையில்லாக் கவலை என்றும், பணம் இல்லாத கஷ்டம் என்றும் அவரவர் நோக்கும் போக்கும் எனும் தராசில் வைத்து அவனை எடை போட்டுக் கணித்தார்கள்.

அதெல்லாம் அவன் காதுகளை எட்டாமல் இல்லை.



'இவர்கள் மூஞ்சியில் கரிபூசும்படியாக நான் ஒன்றைச் செய்வேன்' என்று அவன் குமுறிக் குமையலானான்.

இந்த மனநிலை ஏற்பட்ட போது தான் அவனுக்குத் தற்கொலை நினைப்பு தோன்றியது.

—இவர்களை எல்லாம் பழிவாங்குவதற்கு, அதிரடிப்பதற்கு, அலறவைப்பதற்கு, அது தான் சரியான காரியம்...

எனவே, அவன் தற்கொலை விஷயம் பற்றி அதிகம் சிந்திக்கத் தொடங்கினான். அதை விளம்பர மிடுக்கோடு செய்த சிலர் விஷயம் அவனைக் கவர்ச்சித்தது.

—உடம்பில் எண்ணெயை ஊற்றிக் கொண்டு, தீ வைத்தவாறு பொதுஇடத்தில் காட்சிப்பொருளாய் நிற்பது; கோபுரத்தின் மீது ஏறி நின்று குதிக்கப்போறேன், குதிக்கப் போறேன் எனக்கூவி கும்பல் கூட்டி, மீட்பு முயற்சிகள் நடக்கிறபோது, பிறர் எதிர் பாராத இடத்தில் விழுந்து சாவது; எவராவது தலைவர் ஒருவர் பயணம் செய்கிற ரயில் வண்டியின் என்ஜின் முன்னே பாய்வது; புகழ்ஒளி பெற்ற சினிமா நட்சத்திரத்தின் காரில் விழுந்து உயிரை விடுவது ... ...

இத்தகைய நினைப்புகள் அவனுக்குக் கிளுகிளுப்பு ஊட்டின.

ஆயினும், அவனது மனசின் பலவீனமான பகுதி, நீ அப்படி எதுவும் செய்து விடப் போவதில்லை என்று அவனை குத்திக் குடைந்தது.

இறுதியில், ஒரு குழப்ப நிலையில், நெருக்கடியான கட்டத்தில், தன்னுடைய மனசுக்கே சவாலிடுகிறவன் போல—அல்லது, தன் மனசின் சவாலைத் தானே சமாளிக்க முயன்றவனாய் அவன் அச்செயலை மேற்கொண்டான்.

தூக்க மாத்திரைகளை அளவுக்கு அதிகமாய் விழுங்கினான். மேலும் ஒன்றிரண்டு விழுங்கி விட்டு, நீட்டி நிமிர்ந்தான்.

அவனுடைய நல்ல காலமோ; இல்லை, போதாத வேலை தானோ!, அவனை அந்த நிலையில் சிலர் கவனித்துவிட்டார்கள். நேரம் அதிகமாகி இருக்கவில்லை. அவசரம் அவசரமாக எடுத்துச் சென்று ஆஸ்பத்திரியில் சேர்த்தார்கள்.

உரிய முறையில் சிகிச்சைகள் நடந்தன. இரண்டு நாட்களுக்குப் பிறகு அவன் ஆபத்து நிலையைத் தாண்டினான். பிழைத்து விட்டான்.

அவனுக்கு அதுவே குழப்பம் ஏற்படுத்தியது.

—சே, ஒரு முக்கிய காரியம் செய்யலாம் என்று துணிந்து செயலில் ஈடுபட்டால், அதைக்கூட வெற்றிகரமாகச் செய்யவிடாமல் இவர்கள் தடுத்துவிட்டார்களே!

'உன்னால் எதையுமே சரியாகச் சாதிக்க முடியாது. உன்னை நீயே ஏமாற்றி வந்திருக்கிறாய்!' என்று அவன் மனசின் ஒரு பகுதி கெக்கலித்துக்கொண்டிருந்தது.

—அது அப்படி இல்லை. நான் என்றாவது ஒரு பெரிய சாதனை புரியாமலா இருந்து விடுவேன்? இப்போது நான் உயிர்பிழைத்து இருப்பது கூட அதற்காகத்தான்,

அவனது நம்பிக்கை மனோபாவம் இப்படிக் கூறி, ஊக்க இன்ஜெக்ஷன் கொடுத்துக் கொண்டது.

எதையாவது பிரமாதமாகச் செய்ய வேண்டும் என்ற எண்ணத்தோடு, செய்ய முடியும் எனும் நம்பிக்கையோடு, ஆனாலும் எதையும் செய்யத் திராணி இல்லாது, செய்வதைக்கூடச் சரியாகச் செய்ய இயலாமல், அல்லலுற்றுக் குழம்பி, வாழ்க்கையையே பெரும் சிக்கலாக்கிக் கொண்டு திணறும் எண்ணற்ற அப்பாவி மனிதர்களின் சரியான வார்ப்படமாக அவ்வேளையில் அவன் தோன்றினான். என்றும் அப்படித்தான் இருப்பான்.

# கூவுது பார்!

—ருக்மணி கிருஷ்ணசாமி.

*பல்லவி*

கூவுது பார்--குயில் கூவுது பார்
கஸ்தூரி ரங்கா என்று கதம்பப்பூ அழகா என்று
பக்தர் வினை அறுக்கும் பரவாசு தேவ என்று
(கூவுது)

*அனுபல்லவி*

கோதை மணவாளா என்று
கோவைக் கனிவாயா என்று
ஆதிமுதற் சோதி என்று
அரங்கநகர்ப் பெம்மான் என்று (கூவுது)

*சரணம்*

ரங்கா ரங்கா என்று பேதை குயிற் கூவு மிசை
அந்தரங்கத்திற் கெட்டலையோ அழகிய மணவாளா!
சுந்தர சுகுமாரா பாம்பணையிற் துயில் கலைந்து
பந்தம் தவிர்த்தெம்மைப் பாலித்திட வேணுமென்று
(கூவுது)

# "மனப் பேழை"

— எம். எஸ். கமலா

பேராசிரியர் டாக்டர் உமாநாத் பிளச்டி பல்கலைக்கழகத்திலிருந்து வரும்போதே "மாதவி! ரெடியா?" என்று கேட்டவாறே உள்ளே வந்தார்.

டீ கோப்பையும் பிஸ்கட் பிளேட்டுமாய் வந்துகொண்டிருந்த மாதவி கையிலிருந்த வைகளை டீபாயின் மேல் வைத்து பேராசிரியரின் கோட்டை பின்புரமிருந்து கழட்டிய வாறே "நீங்கள் டீ குடியுங்கள். நான் டிரஸ் செய்துகொண்டு வந்துவிடுகிறேன்" என்று கூறி விரைந்தாள்.

உமாநாத் வலதுகையில் டீகோப்பையை எடுத்துக்கொண்டு இடது கையால் பிஸ்கட்டை கொரித்தவாறு அங்கு மேஜையின் மேல் கிடந்த 'மக்கள் மனம்' என்ற மாத இதழின் மேல் பார்வையை பாயவிட்டார். மாத இதழின் அட்டைப்படம் வெகு அழகாயிருந்தது. ஒரு வயது குழந்தை தன் அரும்புபற்களின் ஊடே அமிழ்த நகை ஊற்றெடுத்து வழிய கையில் ஓர் உடைந்த பொம்மையை வைத்துக்கொண்டு பார்ப்பவர் களைப் பரவசத்திலாழ்த்தியது. அப்படத்தின் கீழே "சின்னஞ்சிறு மலரே! சந்திரகிரி அரும்பே!" என்ற சொற்றொடர் மின்னின. டாக்டர் கையிலிருந்த டீயை மறந்தார். உதட்கிடையில் அந்தரத்தில் தொங்கும் நூலாம்படையைப் போல பிஸ்கட் தொங்கியது. கண்கள் மாத இதழின் மேல் பதிந்திருக்க உயிர் சிலையாய் நின்றிருந்தார்.

அச்சமயம் வானொலியில் 'குழந்தை செல்வம்' என்ற நாடகம் இசைத்தட்டு ஒலி பரப்பாகிக் கொண்டிருந்தது.

"மகனை ஈன்ற மகிழ்ச்சி
மகன் பிறந்ததும் தோன்றுது காண் (அம்)
மகனை மாந்தர் போற்றுங்கால் (அன்று)
மகன் பிறந்த மகிழ்ச்சி
தோன்றுமே மானிலத்தில்"

அந்த பாட்டை திருமதி உமாநாதும்பாடிக் கொண்டே ஒப்பனையை முடித்துக்கொண்டு வந்தாள். தன்னை மறந்து நிற்கும் கணவன் கையிலிருக்கும் டீ கோப்பையைப் பற்றினுள். அவர் அவளை வெறிக்கப் பார்த்தார். மாதவியின் மனம் பதறியது. சட்டென்று அவர் வாயிலிருந்த பிஸ்கட்டையும் பிடுங்கி தூர எறிந்து அவரைப் பிடித்து குலுக்கினுள்.

"மாதவி! ஏன் இந்தப் பதட்டம்? இந்தப் படத்தைப் பார்த்ததும் என் மனம் எங்கோ சென்றுவிட்டது".

"எங்கு சென்றது? ஸ்டேட்ஸுக்குச் சென்றதுபோலும்" என்று வரும் நெடு மூச்சை டாக்டர் பாராமலிருக்க சன்னலருகில் எதையோ பார்க்க விரைந்தாள்.

"என்னைச் சொல்கிருயே? உண்மையாய் உனக்குமாத்திரம்..." என்று அவளை பரிதாபமாய்ப் பார்த்தார்.

"இருக்கிறது. ஒருவர் குழந்தையை நாம் எத்தனை நாள் வைத்துக்கொள்ள முடியும்"?

"என் தம்பியின் குழந்தை ஒருவர் குழந்தையா"? என்று வீறிட்டார்.

"நம் குலக்கொழுந்துதான். எனினும் அவர் தன் குழந்தையை தன்னுடன் வைத்துக்கொள்ள விரும்பி அழைத்துச் சென்றதே உங்களுக்கு ஆற்ருமையாயிருக்கிறதே"! என்னும்போதே 'உமாநாத் சார்' என்று யாரோ அழைப்பது கேட்கவே 'கமின்' என்ருர். மாதவி இருவருக்கும் டீ எடுத்துவர உள்ளே சென்ருள். அதே சமயம் உமாநாத் கீழே பணிபுரியும் அச்சுதனும் அவர் தங்கை தங்கமும் உள்ளே வந்தனர். தங்கத்தின் கையில் 'மக்கள் மனம்' அட்டைப்படக் குழந்தை அழகாய் சிரித்துக் கொண்டிருந்தது.

"மிஸ்டர் உமாநாத் என் தங்கை தங்கம்" என்று, "தங்கம்! என் எஜமான் உமாநாத்"! என்று அறிமுகப்படுத்தினர். உமாநாத் அவள் கையிலிருந்த குழந்தையையும் மக்கள் மனதையும் மாறி மாறி வியப்புடடன் பார்த்தார். அவர் வாய்

பேச மறுத்தது. "சந்திரன்தான் அந்தப் படத்திலிருப்பவன்", என்று அச்சுதன் குழந்தைக்கு மாத இதழை காட்டி "இதோ பார்!" என்றார். மாதவி டீட்ரேயில் டீயை எடுத்துக்கொண்டு வந்தாள்; அவனை கண்டதும் தங்கம் துணுக்குற்றாள். அவள் மனம் படக்படக்கென்று அடித்துக்கொண்டது. அவனை நேரே பார்க்க சக்தியற்று தன் பார்வையைத் தாழ்த்திக்கொண்டாள்.

மாதவி கம்பீரமாய் ட்ரேயை டீபாயின் மேல் வைத்துவிட்டு தன் கணவனை அர்த்த புஷ்டியாப் பார்த்தாள். 'மாதவி! என் ஜூனியரைத் தெரியுமே. அவர் தங்கையாம், தங்கம். இந்தத் தங்கமான குழந்தையின் தாய்' என்று அறிமுகப்படுத்தினர். எல்லோரும் பேசிக்கொண்டே டீ குடித்து முடிந்ததும்,

"தங்கம் நீ இங்கு இரு. நானும் இவரும் துணைவேந்தரில்லத்திற்குச் சென்று வந்து விடுகிறோம்" என்று "என்ன சார்"? என்றார்.

அவர்கள் சென்றதும் தங்கம் மாதவியின் காலில் விழுந்து மௌனமாய் கண்ணீர் வடித்தாள். "அசடு! எதற்காக அழுகிறாய்? அழகிய குழந்தைக்கு அம்மாவாயிருக்கும் பெருமை ஒன்றே போதுமடி உன் தவறுகளை மறைக்க" என்று குழந்தை சந்திரனை எடுத்து அணைத்துக்கொண்டாள்.

"நான் இங்கு உங்களை பார்ப்பேனென்று நினைக்கவில்லையம்மா!" என்றாள் குரல் தழதழக்க.

"நினைத்திருந்தால் வந்திருக்க மாட்டாயல்லவா?"

"நான் எப்படியம்மா வருவேன்? வருவதற்கு முகமிருக்கிறதா? நீங்களே சொல்லுங்கள்" என்று விம்மினாள். தாயின் விம்மலைப் பார்த்து குழந்தையும் சிணுங்கத் தொடங்கினான். குழந்தையை அவளிடம் கொடுத்துவிட்டு,

"நடந்ததை நினைத்து கண்ணீர் வடிப்பது கோழைத்தனம். நடக்க வேண்டியதை தைரியமாய் எதிர்கொள்வதுதான் மனிதத்தன்மை. ஆம். நீ அச்சுதன் தங்கையென்று இதுவரை எனக்கு தெரியாதே! நீ நம் வீட்டிலிருந்தபோது உனக்கு அச்சுதனென்ற அறிவாளி அண்ணன் இருப்பதாக சொன்னதில்லையே!"

"அச்சுதன்......அச்சுதன் என் உடன் பிறவா அண்ணனம்மா!"

"..........."

"என் மூத்த கணவர்......தவறு காதலர் மனைவியின் அண்ணன்".

"என்னடீ உளர்றே? கேசவன் இல்லையா?

"இருக்கார். கேசவன் பேசுவதெல்லாம் உண்மையென்று நம்பி அவருடன் போனபோது நான் எத்தனை சந்தோஷமாயிருந்தேனே அவர் வீட்டுக்குச் சென்றதும் இடிந்து போனேன். கேசவன் மனைவி மாதங்கி என்னைப் பார்த்ததும் கண்ணீர் வடித்தாள். இவரின் அழகைக் கண்டு அபலைகள் தங்கள் வாழ்வை நாசமாக்கிக் கொள்கிறார்களே! தெய்வமே என்ன செய்வேன்?" என்று புலம்பினாள். நான் பெண்களுக்கே உள்ள உரிமை குணம் என்று

நினைத்தேன். ஆனால் நான் அங்கு சென்ற சில நாட்களில் கேசவனைப்பற்றி நன்கு அறிந்து கொண்டேன். அவர் தன் அழகுடன் அழகை நுகர விரும்புகிறாரே ஒழிய அந்த அழகைப் போற்றிப் பாதுகாக்கும் சக்தி அவரிடமில்லை. அனாதையாய் உங்கள் வீட்டிலிருந்த நான் அவரை நம்பி வீட்டை உதறிச் சென்றேன். ஆனால் அங்கிருந்து எங்கு செல்வது? அது விளங்கவில்லை. வேதனை மனதை அறிக்கத் தொடங்கியது. என்னாலான வேலைகளை மாதங்கிக்குச் செய்வேன்; அந்த வேலைக்குக் கூலிபோல அவளும் அன்னமிட்டாள்.

ஒரு நாள் களைப்புடன் கிணற்றருகில் படுத்திருந்தேன், அன்று அச்சுதன் தன் தங்கையைப் பார்க்க வந்தார். மாதங்கி கடைக்கு சென்றிருந்தாள். குழந்தைகள். ஆம் மாதங்கிக்கு மூன்று குழந்தைகள். அவர்கள் கிணற்றடிக்கு ஓடி வந்து 'சித்தி! மாமா வந்திருக்கா!'' என்றழைத்தார்கள். என்னிடம் ஏதோ ஓய்ச்சல். என் உடல் உறுப்புகளில் லேசாய் ஓர் மாற்றம். என்னுள் செப்பத்தரமற்ற பயம். என் சங்கடத்தை எவரிடம் கூறுவேன்? வயிற்றில் சுமந்த அன்னையில்லை. வாழ்வளிப்பவர் என்று நினைத்தவரோ உடல் பசிகொண்ட ஓர் ஆண் வண்டு. ஆண்டவர் நல்லயிடத்தில் மணமாயிருந்த என்னை இப்படி மனம் குலைய செய்ய நான் என்ன பாபம் செய்தேனய்யா! என்று தேம்பியவாறு படுத்திருந்தவள் விதிர்த்து எழுந்து இரண்டடி வைத்தேன். காக்கை எச்சமிட்டிருந்ததை கவனிக்காது காலை வைத்தேன். சறுக்கி விழுந்து விட்டேன். விழுந்த ஓசை கேட்டு அச்சுதன் ஓடி வந்தார். படாத இடத்தில் பட்டது போலும். கிணற்றங்கரையில் உதிரம் பரவியது. குழந்தைகள் கூக்குரலிட்டனர். மாதங்கி வருவதற்குள் என்னை மருத்துவமனையில் சேர்த்து விட்டார்.

மறுநாள் மாலை அச்சுதனும் மாதங்கியும் நானிருக்குமிடம் வந்தார்கள். நான் சுமக்கயிருந்த பாபம் உருப்பெறுவதற்கு முன்பே கரைந்து விட்டதென்பதையறிந்து நாங்கள் மூவரும் மகிழ்ச்சியடைந்தோம். நான்திரும்ப வீட்டிற்கு செல்ல இசையவில்லை. எங்காவது ஆசிரமத்தில்பணிப்பெண்ணாய் அமருகிறேன் என்றேன். அதுவும் கிடைக்காவிட்டால் நான் படுத்திருந்த மருத்துவமனையில் ஆயா வேலையாவது செய்து வாழ்வேன் என்றேன். அச்சமயம் கேசவன் ஊரிலில்லை. மாதங்கி தன் அண்ணனிடம் ''அண்ணா இவளை உன்னுடன் அழைத்துச்செல். என் வாழ்க்கைக்குப் பங்காளியாய் என்று அவர் இவளை வீட்டிற்கே அழைத்து வந்தாரோ அன்றே இவள் என் தங்கையாகிவிட்டாள். என் அண்ணன் ......... இவளுக்கும் அண்ணன்தான். இவளை உன்னுடன் அழைத்துச் சென்று இவளுக்கு வாழ வழி வகுத்துக்கொடு. குழந்தைகள் பெரியவர்களாகிவிட்டால் தந்தையின் ஈன குணத்திற்கு தலை கவிழ வேண்டி வரும். அவர் வெளியில் என்ன கூத்தடித்தாலும் நான் பொருட்படுத்தாமலிருந்தேன் இவளை வீட்டிற்கே அழைத்து வந்து......... என்று தன் வேதனையை வெளியிட்டாள்.

சிறிது நேரம் மௌனமாய் நின்றவர் டாக்டரையணுகி என்நிலையைக்கூறி அவள் அந்தமருத்துவமனையிலிருந்து வெளிப்போந்தாலும் வாழ்க்கைக்கு பயன்படாதவளென்று எழுதி கொடுக்கச் சொல்லி, அவள் அம்மாதிரியானதற்கு அவள் கணவன்தான் பொறுப்பாளி என்றும் (அவளை அழைத்துப் போவதாயிருந்தால்) அன்று மாலைக்குள் அழைத்துப் போகவேண்டுமென்றும் இல்லையேல் அவளை அவர்கள் அனுப்பிவிடுவார்களென்றும்'' ஒரு கடிதத்தை கேசவனுக்கு அனுப்பச் செய்தார். கேசவன் தன் அழகால் பருவமங்கைகளைக் கவர்ந்து தன் உணர்ச்சிகளை தணித்துக் கொண்டாரே ஒழிய உணவளித்து காப்பாற்றும் சக்தியில்லை. அவரைக் கவர்ந்தவர்களில் நான் ஒருத்திதான் ஆதரவற்ற அனாதை.

அச்சுதன் முன்ஜாக்கிரதையாக மாலை வீடு செல்லும் ஆயாவுக்கு ஐந்து ரூபாய் கொடுத்து என்னை ஸ்டேஷனுக்கு அழைத்து வரச் சொல்லிவிட்டு தான் ஒன்றுமறியாதவர் போல வீட்டிற்கு சென்று புறப்பட சித்தமானார். அச்சமயம் மாதங்கி வைத்தியசாலையிலிருந்து வந்த கடிதத்தைக் காட்டி என்னை அழைத்து வரச் சொன்னார்களாம்.

கடிதத்தைப் படித்ததிலிருந்து வெறி பிடித்த வேங்கை போல குறுக்கும் நெடுக்குமாய் உலாவிக்கொண்டிருந்த கேசவன் மனை

வியின் மேல் பாய்ந்து "உதவாக்கரை ஊர் சனியன்களையெல்லாம் வீட்டில் சேர்த்துக் கொண்டு தண்டசோறு போட நான் என்ன ராக்ஃபெல்லரா? பிர்லாவா? கொழுப் பெடுத்த சிறுக்கி எக்கேடு வேண்டுமானாலும் கெட்டுத் தொலையட்டும். பிச்சைக்கார நாய்களை வீட்டிற்குள் சேர்ப்பதா? நீ வந்த வழியை பார்த்துக் கொண்டு ஊர் போய் சேர். நல்ல சமயத்துக்கு வந்து அந்த சனியனை வெளியேற்றினாய் என்றாராம்." என்று நிறுத்தினாள்.

கண்களை மூடிக்கொண்டு அவள் சொல்வதை கேட்டுக்கொண்டிருந்த மாதவி உள்ளம் துடிக்க நெடுமூச்சு விட்டாள். இவர்கள் இருவரின் பேச்சிக்கிடையே சந்திரனை மறந்து விட்டார்கள். அவன் தோட்டத்திற்கு சென்று விட்டான். 'பிறகு......?' என்று கண்களைத் திறந்தாள் மாதவி.

*

அச்சுதனுடன் அவரில்லம் சென்றேன். அவர் தாய் என்னை தன் மகளாய் ஏற்று அன்புடன் நடந்து கொண்டார். அச்சுதன் எனக்கு படிப்பு சொல்லிக் கொடுத்தார். ஐந்தாண்டுகள் அவர்கள் பெண்ணாக வளர்ந்து S. S. L. C. எழுதினேன். அச்சமயம் அண்ணனிடம் வேலைதேடி வந்தார் சந்திரனின் அப்பா! அச்சுதன் தாமறிந்த ஓர் தொழிலதிபருக்கு சிபாரிசு செய்தார். என்னைப் பார்த்த அன்றே அவருக்கு வேலை கிடைத்தது. என்னை முதலில் பார்த்தபின் தான் அண்ணனிடம் கடிதம் வாங்கிச் சென்றார். ஆதலால் என்னை மணக்க வேண்டுமென்று அண்ணனைக் கேட்டார். அண்ணன் கேசவனால் நான் ஏமாற்றப்பட்டதைக் கூறுமல் மற்ற அனைத்தும் கூறி நான் அவர் உடன் பிறவா சகோதரி என்றார்.

அந்த நல்லமனிதர் என்னைப்பற்றியஎந்த விவரங்களும் தேவையில்லை என்றும் என் குளிர்ந்த பார்வைதான் அவருக்கு வேலை கொடுத்ததென்றும் என்னை மனமுவந்து அவருக்கு மணம் முடிக்க வேண்டுமென்று வேண்டினார். அண்ணனும் அம்மாவும் என்னை திருப்பதிக்கு அழைத்துச் சென்று மணம் முடித்துக் கொடுத்தார்கள். நான் இன்று அனாதையில்லையம்மா. அண்ணனும் அம்மாவும் இருக்கிறார்கள். அவருக்கு மாத்திரம் நான் பணிப்பெண்தான். சந்திரனுக்கு நாளை ஆண்டு நிறைவு. அதற்கு நம் பேராசிரியரை அழைக்க வேண்டும். அவர் மனைவியையும் அழைக்கலாம் வா! என்று அண்ணன் அழைத்து வந்தார். நான் அதிர்ஷ்டசாலியம்மா! மூன்று வயதிலிருந்து உங்கள் வீட்டில் வளர்ந்தவள் உலகத்தைச் சரிவர புரியாது ஓடினேன். இன்று என்னை நல்ல முறையில் வளர்த்தவர்களின் உறவோடு என் குழந்தைக்கு ஆண்டு நிறைவைக் கொண்டாடும் அதிர்ஷ்டத்தை அண்ணன் ஏற்படுத்தினார் என்று சொல்லும்போதே

"தங்கம்! சந்திரனை எங்கே விட்டாய்? என்ற அச்சுதனின் குரல் கேட்டு இருவரும் எழுந்து வெளியே வந்தனர். சந்திரன் நடைபாதைக்கிருமருங்கிலுமிருந்த மலர் செடிகளை பிய்த்து கீழே போட்டிருந்தான். அவன் கால்களும் கைகளும் புழுதி நிறம்பியிருந்தது. அவன் கண்களிலோ மகிழ்ச்சி வெள்ளம் பொங்கி வழிந்து கொண்டிருந்தது. அத்தனை

புழுதியையும் தன் டெர்லின் சட்டைமேல் ஏற்று அச்சுதன் சந்திரனை எடுத்துக் கொண்டுவந்தான்.

'மிஸ்டர் அச்சுத்' என் மிஸஸ் பேச ஆரம்பித்தால் தன்னைச் சுற்றிலும் என்ன நடக்கிறதென்பதையே மறந்து விடுவாள்'' என்றார் நகைத்துக் கொண்டே.

''அண்ணா! என்னுடைய தவறுதான். இவர் குழந்தைகளுக்காக எத்தனை புத்தகங்கள் எழுதியிருக்கிறார்கள். அதைப் பார்த்துக் கொண்டிருந்தேன்'' என்றாள். தங்கம் மாதவியின் வீட்டிலிருந்தபோது மாதவி குழந்தைகளுக்காக எழுதிக்கொண்டிருந்தது அவளுக்கு நினைவு வரவே தன் ''மனப் பேழை'' யை மாதவியிடம் ஒப்படைத்ததை மறைத்துப் பேசினாள்.

மாதவி தங்கத்தின் சமயோசித புத்தியை மனத்திற்குள் பாராட்டியவாறே தன் கணவரைப் பார்த்தாள். அவரோ 'நீ குழந்தைகளுக்காக எழுதி என்ன பயன். ஒரு குழந்தைக்கு அன்னையாகும் அதிர்ஷ்டமில்லையே! என்ற பொருள்படிய அவளைப் பார்த்தார்.

''சார்! மிஸஸ்ஸுடன் மார்னிங்கேவந்து விடுங்கள். நான் முதல் முதல் செய்யும் ஃபங்க்ஷன் சார்! என் ஸிஸ்டரின் டேவண்டையும் பார்க்கலாம். ஷ்யூர். ஷீஈஸ் வெரி க்ளெவர் அண்ட் இண்டலிஜெண்ட்'' என்றார்.

''சந்திரனுக்காகவாவது அவசியம் வருகிறேன்'' என்று குழந்தையை கன்னத்தில் தட்டினார் பேராசிரியர்.

மாதவியின் வாய் 'மகனை ஈன்ற மகிழ்ச்சி' என்ற பாடலை முணு முணுத்தது. *

# பராபரங்கள்

—வல்லிக்கண்ணன்

எதுக்காக
நாம் வாழ்கிறோமோ—
வாழத் தவிக்கிறோமோ--
அது
என்றோ செத்து மண்ணாய்ப்போச்சு
என்று எவனோ சொன்னான்.
அது சரியே போலும்!

எதுக்காக
மனிதர் வாழ்கிறார்
வாழப் பொருதுகிறார்
என்பதை
எவரும் அறிந்திலர்.
ஏனோ எப்படியோ
நாளோட்டுகிறார் பற்பலர்.
நாளோடுது, நாமிருக்கோம்
என இருக்கும்
பராபரங்களும் பலபலரே!

# அதிகப் படிப்பு

— கி. சந்திரசேகரன்

நம்மிடையே ஒரு கருத்து சாதாரணமாக எழுவதைக் கவனிக்கலாம். அதாவது, படிப்பில் கழியும் காலம் மிக உபயோகமானதென்பதாம். சிலரிடம், புத்தகங்களை சதா நேசிப்பதே உயர்தர வாழ்க்கைக்கொள்கை என்ற எண்ணமும் உண்டு. உண்மையில் பண்டிதனுயுள்ளவனும், எழுத்தாளனும் புத்தகங்களை அதிகம் வாசிப்பதை அவர்களுடைய தினசரி வாழ்க்கைத் தருமமாகக் கொள்வதை நாம் மறுக்க இயலாது தான். அதேவிதம் பள்ளி உபாத்தியாயரும் கல்லூரி ஆசிரியனும், வக்கீல் தொழிலில் ஈடுபட்டவனும் அவகாசம் கிடைத்தபொழுதெல்லாம் நூல் நிலையங்களிலிருப்பதை நாம் எதிர்பார்க்க வேண்டியதும் உண்டு. ஏனெனில் அவர்களுடைய ஞானமெல்லாம் புத்தகங்களை, கிடைத்த நேரங்களிலெல்லாம் புரட்டுவதால்தான்.

ஆயினும், சாமான்ய மனிதன் ஒருவன் வாழ்க்கையில் இருப்பவைகளைவிட ஏதோ புத்தகங்களில் அதிகம் கிடைக்குமென்று எண்ணினுல் அது ஏமாற்றமே என்பதில் சந்தேகம் கிடையாது. ஒரு ஆங்கில மேதை சொன்னுன்: 'இலக்கியத்தைக் காட்டிலும் வாழ்க்கையே சிறந்தது' என்று. சும்மா ஒன்றை இகழ்ச்சிப்படுத்தவோ அல்லது வேறொருவருக்கும் படாததை தான் சொல்லியதாகவோ அவன் நினைத்திருக்க வேண்டும் என்று கருதுவதற்கு இடமில்லை. இக்கருத்து நல்ல பண்பட்ட உள்ளத்தின் விளைவு என்றேதான் தீர்மானிக்க வேண்டும்.

கவனித்தால், வாழ்க்கை அனுபவங்களில் நன்கு புகுந்து புறப்பட இயலாதவர்களே புத்தகங்களின் ஏடுகளில் தங்களை மறைத்துக் கொண்டு, அதனுல் மனத்திற்கு ஏதோ ஒரு விதமான தப்பித்துக்கொண்ட இன்பத்தைப் பெறமுயலுவது விளங்கும். சிலரிடம் கையில் புத்தகமில்லாத வேளையே இல்லாதிருப்பதைப் பார்க்கையில், வியாதி ஏதோ ஒன்று அவர்களைப் பீடிப்பதாகத்தான் காணும். மற்றும் சிலர் புத்தகப்படிப்பினுல் இதர கவனிக்க வேண்டிய முக்கிய வாழ்க்கை அலுவல்களையும் புறக்கணிப்பதை நாம் பார்க்கிருேம். சிலரிடம் வீட்டுக்காரியங்களையும் உடல்உழைப்பினுல் சாதிக்கவேண்டியவைகளையும், புத்திவேலைகளுக்கு மிகக் குறைவானவையாக நினைக்கும் மனப்பாங்கு வளருவதையும் உணருகிருேம். அவ்விதம் உள்ளவர்களிடம் அன்ருட வாழ்க்கைக்கான விழிப்புஉணர்வே செத்துவிடும். கலாசாலைப் படிப்பு நன்கு ஏறியவர்களிடம் உள்ள குறைபாடு என்னவெனில், புத்தகப்படிப்பு ஒன்றேதான் கதிமோட்சத்தை விளைவிக்கவல்லது என்ற எண்ணம் வலுப்பதுதான். குழந்தைகளுக்குச் சுபாவமாக இருக்கவேண்டிய துறுதுறு என்ற பார்வையும், பார்த்தவைகளில் ஏற்படும் இயற்கையான ஆவலும்கூட இவ்வித புத்தகமே கதி என்ற பழக்கம் கெடுதலை விளைவிக்கும். அவர்களின் உள்ளம் மிகவும் மிருதுவானதால், சுமையான படிப்பு இயற்கையான பண்புகளை நசுக்கிக் கொல்லக்கூட சாத்தியமாக்கலாம்.

புத்தகம்வாசிப்பது கெடுதலா என்ற கேள்விக்குப் பதில் உடனே சொல்லவேண்டியதும் அவசியம். புத்தகப்படிப்பு புத்தியை நன்கு கிளறிவிடுமென்பதில் ஐயமில்லை. உண்மையில் புத்தகங்கள் வேண்டாத பகற்கனவுகளில் மனம் அமிழ்ந்துவிடாது பாதுகாக்க உதவுவதைக் கவனிக்கலாம். மேலை நாட்டு அறிஞர் பேகன் என்பவர் கூறினுர்: "படிப்பு ஒன்றே மனிதனை முழுமை எய்த உதவுகிறது" என்று. ஆனுல் அவர் விரும்பிய படிப்பு, கூடவே மனத்தைச் சிந்தனைக்கிடம் கொடுக்கத் தூண்டும் ஓர் கருவியாக்குவதில்தான். சிந்தனையின்றி வளரும் படிப்பு மணப்பெண்ணில்லாத கல்யாணச் சடங்கு போலாகுமல்லவா?

தம் அபிருசிகள் தேர்ந்தெடுத்த அரிய இலக்கிய நூல்களினுல் தழைப்பதை நாம் ஒப்ப வேண்டும். கவிதை தம் கற்பனையை தூண்டி நம் இதயங்களைப் பரிசுத்தமான உவகையில் திளைக்கவைக்கின்றது. மேலும் கடந்தகாலத்தின் அருமை பெருமைகள் நூல்களின்மூலமே நம் மனத்தை எட்டுகின்றன. நம்மைவிடச் சிறந்த அறிவாளிகளின் எண்ணங்களும், மன எழுச்சிகளும் அச்சில் ஏறி, நன்கு பாதுகாக்கப்படுவதால் வேண்டிய பொழுது நமக்கு ஆதரவு அளித்து நம் மனம் உழலும் தவிப்புகளிலிருந்தும் நம்மை விடுவித்து அமைதி பெற வழி செய்கின்றன. நம் மனத்திலுள்ள ஆருப்புண்களை ஆற்றி, தம் இதயங்கள் படும் ஆயாசங்களையும் தீர்த்துவிடுகின்றன. இருப்பினும் நல்லவை, கெட்டவை என்ற பாகுபாட்டை நூல்களின் இடையே கோடிட்டு வகுக்கத்தான் வேண்டும். அவசியமானவை எவை துளியும் கவைக்குதவாதவை எவை என்று பிரித்து, அவைகளைத் தனித்தனியேயும் சேர்த்தோ ஒதுக்கியோ செய்தாகவேண்டியதுமுண்டு. பள்ளியில் உபாத்தியாயரும், வீட்டில் பெற்றோர்களும் இப்பணியை ஆரம்பம் முதல் சீருடன் செய்தாக வேண்டும். கவனித்தால், வாழ்க்கையின் ஏடுகளையே முதலிலிருந்து புரட்டுவதுதான் நன்மையை அளிக்கவைப்பது. சுபாவமாய் சுற்றியுள்ளவைகளில் கவனமும், இயற்கைக்கு முரணுகாத செயல்களில் ஈடுபடுவதும் சிறுவர்களிடம் அன்புடன் பராமரிக்கப்பட வேண்டியவை. வாசிக்கும் காலத்தைக் கணக்கில் வைப்பதும்கூட சரியான மன அடக்கத்தை விளைவிக்கும்.

படிப்பு, படிப்பு என்று சதா அதையே நம்புவதால், வாழ்க்கையின் வளமும், இயற்கையின் அழகும், நட்பின் இனிமையும் எல்லாமே சில வேளைகளில் மங்கிவிடுகின்றன. பத்திரிகைகளில் அன்ருடம் வெளிவரும் புதுப்புது பிரசுரங்களையும், கணத்துக்குக் கணம் தோன்றும் எழுத்தாளர்களையும் விளம்பரப்படுத்தி வருகின்றன. மாத சஞ்சிகளை கையில் எடுத்தால் எத்தனை எத்தனையோ எழுத்துக்குவியல்கள் நம் இதயத்தைத் துளியும் தொடாத நிலையில் இருப்பதைக் காண்கிறோம். விளம்பரம் அதிகப்பட அதிகப்பட உள்ளே கருத்தின் செழிப்பின்மையையே அவை வெளியிடுவதையும் காண்கிறோம். இருப்பினும், இன்னும் புத்தகம் வேண்டும் என்று படிப்பாளிகள் விரும்புகிருர்கள். எத்தனை நூதன எழுத்தாளர்கள் இன்ன இன்ன கருத்துக்களைக் கூறியுள்ளார்கள் என்பதைப் பேசி ஆய்ந்து விவாதிப்பதில் மனம் திருப்திஅடைவதைப் பார்க்கிறோம். நேற்று வெளியான பிரசுரம், தன்வசமிருப்பதைப் பெருமையுடன் சொல்லிக்கொள்வதில் உள்ள தனி சந்தோஷம் வேறு. இவ்வித பிரகடனங்களினுல் நிஜமான ஞானம் வேறு என்பதையும் மறக்கின்றோம்; படிப்பு எங்கு நம்மைக் கொண்டுசெல்ல வேண்டும் என்றகுறியையும் இழக்கின்றோம்.

வால்மீகி மகரிஷி கவிதை சிகரத்திலிருந்து தமது அரிய தவப்பயன்களையெல்லாம் நம்மிடம் அள்ளிவிடக் காத்திருக்கிருர். நம் நாட்டு கவிஞர்களின் பாட்டுக்களும், பண்களும் நம்மைச்சுற்றி சதா ரீங்காரம் செய்த வண்ணமுள்ளன. ஆனுல், இவைகளைத் தள்ளிவிட்டு வாசனையற்ற வண்ண மலர்களிடம் நம் மனம் லயிக்கின்றது. நேற்று புதிதாக வெளிவந்த நாவலிலுள்ள வெறியூட்டும் கற்பனையைப்பேணவே நம் மனம் தேடுகிறது. பிற நாட்டு எழுத்துக்களில் காணும் ஒவ்வொன்றையும் ருசிக்க நம் இதயம் தவிக்கின்றது. புத்தகங்களை வாசிக்க, வாசிக்க, இன்னும் அதிகம் வாசிக்கவே உள்ளே நம்மை ஏதோ ஒன்று தூண்டுவதை அறிகிறோம். நம்மைத்தேடும் முகங்களையும் நம்முடன் உரையாடவரும் நண்பர்களையும் கூட விலக்கிவிட்டு, நூல் நிலையங்களைத் தேடுகிறோம். வெளியில் நந்தவனத்திலிருந்து மணம் வீசும் தென்றலையும் சுவாசிக்க இயலாதுதான் நம் ஜன்னல்களை மூடிவிடுகிறோம். இன்னும் சொல்லப்போனுல், அறையினுள் விளக்கை ஏற்றிவிட்டு, வெளி வானத்தில் பொழியும் நிலவை நுகர இயலாமல் கண்களைக்கட்டிவிடுகிறோம். எண்ணிறந்த விண்மீன்களையும், பொழுதுசாயும் அந்திநேரத்தின் நேர்த்தியையும், கடலினை சதா தாலாட்டும் அலையோசையையும், சிரித்து விளையாடித் தாவிச் செல்லும் மலையருவியையும், கண்ணுல் காணுமல் புத்தகத்தில் முகத்தைப் புதைத்துக் கொள்கிறோம். குழந்தைகளுக்கு எந்நேரமும்

வகுப்புப் பாடமும் ஏற்பாடாகி, இயற் கையில் தூலிக்கும் மலர்களைக் கண்டுகளிக்க அவகாசமில்லாமல் செய்து விடுகிறோம். விடி வேளையின் தூய எழிலைப்பருகவும், பக்தி யுடன் காலைக்கதிரவனை வரவேற்கவும் பொழு தில்லாமல் அடித்து விடுகிறோம். விடிந்த தும், காலை செய்தித்தாளை கையில் பிடித்துக் கொண்டு தவச்சடங்கில் ஊன்றியவனைப் போல் தோற்றமளிக்கின்றோம். கடைசியாக இரவில் படுக்கப் போகையிலும் ஒரு நாவலை முடித்துவிட்டே ஒப்பற்ற செயலைச் செய்த திருப்தியுடன் துயில் கொள்ளுகிறோம்.

படிப்பு, அறிவற்றவர்களுக்கு மிக்க அவ சியமென்பதை ஒப்புக்கொள்ளவேண்டும். கல்வி அறிவு எங்கும் சாதாரண மனிதனுக்கு எழுதவும் வாசிக்கவும் உதவுகிறதென்பது உண்மை. இன்று ஜனநாயகத்தில் மனித னுக்கு உரிமைச் சீட்டை அளிப்பதும் கல்வி யறிவு ஒன்றே. தெருச் சுவரில் ஒட்டியுள்ள சினிமா விளம்பரங்களை வாசிக்கவும் உதவு வது இந்த எழுத்தறிவுதான். அவனுடைய வோட்டு உரிமை அரசாட்சிக்கும் அவனுக்கு முள்ள தொடர்பை பலப்படுத்துவதையும் உணர்கிறோம்.

கவனித்தால், பல்கலைக்கழக பரீட்சை களில் தேறிப் பட்டம் பெற்றவன் தனது வலி வற்ற உடலையும் மங்கிய கண் பார்வையை யுமே நமக்களிக்கின்றான். இன்றுள்ள நவ நவமான புத்தகங்களை வாசிக்கும் வெறியில் தொன்மை நூல்கள் அவனுக்கு வேறாகிவிடு கின்றன. கலாசாலைப் படிப்பு அவனறிய வேண்டிய வாழ்க்கை நுணுக்கங்களை அவன றியாதபடி செய்து விடுகிறது. அச்சுப்புழு அவனது உள்ளத்தை அரித்தே விடுகிறது. அச்சில் ஏறாத எந்த ஞானமும் அவனை அண்டுவதில்லை. தன் தனிமையில் சிந்தனை யில் சிறிது நேரம் கூட கழிக்க அவன் விரும் புவதில்லை. சுயமான மன எழுச்சி வாடை எதுவும் அவன் மேல் வீசுவதில்லை. சிறு குழந்தையும் பனிமலரும் இரண்டுமே அவனி டம் அணுகத் தயங்கும். பிரகிருதத்துக் கொட்டிய எந்த நினைப்பும் அவனிடம் தங் காது, தாமரை இலைத் தண்ணீரென, அவ னிடம் ஒட்டவே ஒட்டாது.

இனி நம்மிடம் மாறுதல் தோன்றத்தான் வேண்டும். அதிகப் படிப்பை, வாழ்க்கையை இன்னும் சற்று அதிகம் உணரச் செய்வதற் காகக் குறைக்கத்தான் வேண்டும். சுபாவ மாக இருப்பதையும் வாழ்க்கையை நன்கு செப்பனிடவுமே கற்கவேண்டும். படிப்பு ஓர் கட்டுக்குள்ளும், வாழ்க்கை அநுபவம் என் பது கட்டுக்கடங்காமலும் இருப்பதே குறிக் கோளாக வேண்டும்.

---

# "பேசும் தெய்வம்"

"ஞானவேலன்"

நவமணிக் குவியலில்
நல்ல மணியாக
கவனித்து நானெடுத்த
கண்மணியே! என்னுயிரே! 1

வீணைக்கும் குரலுக்கும்
வித்யாச மில்லாமல்
கானம் பொழிகின்ற
காதற் சிறுவண்டே! 2

பழகிட முயலும்உன்
பாகான மழலைக்கு
அழகுமுக பாவம்
அர்த்த(ம்) உரைக்குதடி! 3

சங்கத்தமிழ் போன்ற
சங்கீத மழலைக்கு
அங்கஅபி நயங்கள்
அகராதி யாகுதடி! 4

ஏட்டைக் கொடுத்தாலும்,
எண்ணுமல், பத்துருபாய்
நோட்டைக் கொடுத்தாலும்
நூறுகக் கூறுக்கும் 5

கள்ள(ம்) அறியாத
கைவண்ணச் சித்திரமே,
பிள்ளையென வந்து—
பிறந்த மரகதமே! 6

கசந்திடும் எண்ணங்கள்
களைப்புறுத்தும் போதினிலே
வசந்தநிலை தந்து
வாழ்ந்திருக்கத் தூண்டுகின்றாய்! 7

நித்திரைப் பொய்கையில்
நீராடி நீயு(ம்)ஒரு
சித்திரை நில(வு)எனச்
சிரித்தெழக் கண்ணுறங்கு. 8

# எனது தில்லி யாத்திரை



கோவை அ. அய்யாமுத்து

*தில்லியிலிருந்து வந்த கடிதம்*

எனதருமை நண்பரும் தில்லி லோக்சபை அங்கத்தினருமான ஆர். வி. சாமிநாதன் தில்லியிலிருந்து 1972 ஆகஸ்டு ஐந்தாம் தேதி எழுதின கடிதம் ஏழாந்தேதி மாலை என்னிடம் வந்து சேர்ந்தது.

''.........கோவை ஜில்லாவில் தங்கள் பெயர் சேர்க்கப்பட்டது. தகவல் தமிழ்நாடு அரசாங்கத்திற்கு அனுப்பப்பட்டு விட்டது. தமிழ்நாடு அரசாங்கமே தங்களுக்கு தகவல் கொடுத்து, பஸ்ட் கிளாசில் ரிசர்வ் செய்து அனுப்புவார்கள். இங்கு டெல்லியில் பதிமூன்ருந்தேதி இருக்கவேண்டும். பதிரெுன்ரும் தேதி சென்னையிலிருந்து புறப்பட வேண்டும். டெல்லியில் சந்திப்போம்.

என்பதாக அக்கடிதம் கூறியது. தில்லியில் நடைபெறும் சுதந்திரதின வெள்ளிவிழாவில் கலந்து கொள்ளவும் தாமிரப் பட்டயங்கள் பெறவும், மகாத்மா காந்தியின் தலைமையின் கீழ் பிரிட்டிஷ் ஆட்சியை விரட்டி விடுதலை பெறப் போராடிய வீரர்களில் அகில இந்தியாவிலிருந்தும் ஆயிரம் பேர்களைப் பொறுக்கியெடுத்து அனுப்புமாறு மாநில அரசுகட்கும் யூனியன் டெரிடரி அரசுகட்கும் தில்லியிலிருந்து கிடைத்த தாக்கீதின்படி தமிழகத்திலிருந்து ஐம்பது பேர்களை நியமித்து விட்டதாகப் பத்திரிகை செய்திகள் வந்தபின்னர் இந்தக் கொசுறும் பிசுக்கும் எதற்காகவென்று யோசித்தேன்.

தமிழ்நாடு அரசாங்கத்தினின்று ஏதேனும் செய்திவருமென எதிர்பார்த்தவண்ணம் மூன்று நாட்கள் கழிந்தன.

*சென்னையிலிருந்து வந்த செய்தி*

பத்தாம் தேதி மாலை மூன்று மணிக்கு ஒரு தந்தி வந்தது.

அரசாங்கத் தந்தியென்று எண்ணிக் கொண்டே பிரித்துப் பார்த்தேன்.

தம்பி K. T. கோசல்ராம் சென்னையிலிருந்து அனுப்பிய தந்தி அது!

Yourself selected for India Government tamarapatta award contact Districet Collector -Kosalram.

என்றந்தச் செய்தி கூறியது.

கலெக்டரிடம் நான் தொடர்பு கொள்வதாமே! என்ன சங்கடம்!

*தொலைபேசியில் வந்த செய்தி*

அடுத்த நாள் பதினேரும் தேதி காலை என் டெலிபோன் மணி கிணுகிணுத்தது.

கோவையிலிருந்கு K. V. திருவேங்கடம் பேசினுர்.

''தில்லிக்கு வருமாறு தங்களைத் தேர்ந்தெடுத்திருக்கிருர்கள். என்னையும், ஆர். எம். குமாரசாமி, கொடுமுடி மகுடபதி ஆகிய நால்வர் பெயர்கள் நமது ஜில்லாவிலிருந்து தில்லி சர்க்காரால் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளன. நீங்கள் புறப்பட்டு வந்தால் கலெக்டர் ஆபீசுக்குச் சென்று தகவல் தெரிந்து, தில்லிக்குப் புறப்படலாம்''.......
என்ருர்.

நான் வரவில்லை-நீங்கள் புறப்பட்டுப் போய் வாருங்கள் என்றேன்.

நீங்கள் வராமல் நான் போகமாட்டேன் என்ருர் தம்பி திருவேங்கடம்.

''உங்கள் உடம்பு உள்ள நிலையில் நீங்கள் தில்லிக்குப் போவது சரியாகத் தோன்றவில்லை. தாமிர பத்திரத்தைத் தபாலில் அனுப்பும்படி கடிதம் எழுதிவிடுங்கள் .........''என்ருள் எனது சகதர்மினி.

அவளும் சுதந்திரப்போரில் பங்கு பெற்று, இரு முறை சிறை சென்று ஓராண்டு தண்டனை அநுபவித்தவள்! அதுவும் இரண்டு முறையும் என்னை முந்திக் கொண்டு சென்றவள்! 1933ல் திருச்செங்கோட்டில் ராஜாஜியுடன் கைதாகி ஆறுமாதம் கடின காவல் தண்டனை பெற்று வேலூர்ப் பெண்கள் சிறையில் 'சி' வகுப்புக் கைதியாக வேதனைப்பட்டவள். அவள் சொல்லை நான் எப்படி அலட்சியம் செய்வது!

நீங்கள் வந்தேதான் ஆகவேண்டும் என்று ஒரே பிடியாய்ப் பிடித்தார் திருவேங்கடம்.

சரி! நான் வக்கீல் குப்புசாமிக்குப் போன் செய்து, கலெக்டர் ஆபீசிலிருந்து எல்லாவிபரமும் தெரிந்தபின்னர் புறப்பட்டு வருகிறேன் என்று திருவேங்கடத்திடம் தெரிவித்துவிட்டு, கோவை அட்வோகேட் P. குப்புசாமியுடன் டெலிபோனில் தொடர்பு கொண்டேன்.

அன்று கோவைக் கலெக்டர் ஊரில் இல்லை வால்பாறையில் முகாம் போட்டிருந்தார்.

கலெக்டர் ஆபீசில் யாதொரு தகவலும் இல்லை!

எனினும்தான் வற்புறுத்தியதின் பேரில் கலெக்டரின் P. A. சென்னைக் காரியாலயத்துடன் தொலை பேசி மூலம் தொடர்பு கொண்டு, விபரம் தெரிந்து, நாங்கள் நால்வரும் புறப்படுவதற்கு வழி வகைகள் செய்துள்ளதாகவும், நான் உடனே புறப்பட்டு வரலாமென்றும் வக்கீல் குப்புசாமி தகவல் கொடுத்தார்.

கோவைக் கலெக்டர் ஆபீசில் என்னிடம் தில்லி போகவரப் பிரயாணச் செலவுக்கு530 ரூபாய் ரொக்கமாகக் கொடுத்தார்கள்.

அன்றிரவு புளூமௌண்டன் எக்ஸ்பிரசில் சென்னை முதல் வகுப்பு டிக்கட் ''தெய்வாதீனமாக''க் கிடைத்தது. விலை ரூபாய் 56-70. ரிசர்வேஷனுக்கு ஒரு ரூபாய்.

### *செல்லும் வழியில் சென்னையில்*

12ந்தேதி காலை எட்டுமணிக்கு எங்கள் ரயில் சென்ட்ரல் ஸ்டேஷனை அடைந்தது.

திருவேங்கடம், குமாரசாமி, மகுடபதி ஆகிய மூவரும் வந்து கூடினர்.

தில்லிக்கு அன்றிரவு Grand Trunk Express புறப்படுகிறது. ரயில்வே ஸ்டேஷன் ரிடையரிங் ரூமில் தங்கலாமென்று சொன்னேன்.

மூவரும் என் பேச்சைக் கேட்கவில்லை.

ரிட்டயரிங் ரூமில் இடம் கிடைக்காது என்று முடிவு கட்டினார் ஆர். எம். குமாரசாமி.

ஐகோர்ட்டுக்கு எதிர்புறமுள்ள மார்டர்ன் ஹிந்து ஓட்டலுக்குப் போகலாமென்றார் மகுடபதி.

M. L. A. ஹாஸ்டலுக்குப் போவோமென்றார் திருவேங்கடம்.

எத்தனை கருத்து வேற்றுமை! புறப்படுவதற்கு முன்பே இப்படியென்றால், ஈஸ்வரா! தில்லி போய்ச் சேர்வதற்குள்...... என்று திகைத்தேன்.

சரி, தில்லிக்கு டிக்கட் வாங்கிக் கொண்டு எங்காவது போவோம் என்றேன்.

''சென்னை செகட்டரியேட்டில் நமக்காக டிக்கட் வாங்கி ரிசர்வ் செய்து வைத்திருக்கிறார்கள். நாம் முதலில் அங்கு போவோம்'' என்றார் திருவேங்கடம்!

கிழவன் பேச்சு கின்னரக்காரனுக்குஏற்கவில்லை!

சரி! இதுதான் ஜன நாயக நாடாயிற்றே! மெஜாரிட்டி தீர்ப்புத்தானே சட்டம்.

ஒரு டாக்ஸியிலேறி! மகுடபதி சொற்படி ஓட்டலுக்குப் போனோம். அங்கே அன்று மாலைவரைத் தங்குவதற்கு பதிமூன்று ரூபாய் வாடகை கேட்டான் ஓட்டல்காரன்!

பதிமூன்று ரூபாயைத் தொலைப்பானேன் M. L. A. ஹாஸ்டலுக்குப் போவோம் என்றார் திருவேங்கடம்.

அங்கு சென்று, பெட்டி படுக்கைகள் யாவற்றையும் ஒரு அறையில் வைத்துவிட்டு, அரசாங்க காரியாலயத்துக்குச் சென்று பொதுத்துறை இலாகாவில் டிபுடி செக்ரிடரியாகவிருக்கும் T. D. சுந்தர்ராஜ் I. A. S. என்ற அதிகாரியைச் சந்தித்தோம். அவர் எங்கள் நால்வருக்கும் அடையாளச் சீட்டுகளும பாட்ஜுகளும் வழங்கினர்.

அன்று தில்லிக்குப் புறப்படும் பத்துப் பேர்களுக்கு மூன்றும் வகுப்பில் ரிஸர்வேஷன் செய்யும்படி சொல்லியுள்ளதாகத் தெரிவித்தார்.

நான் முதல் வகுப்பில் பிரயாணம் செய்ய விரும்புவதாகச் சொல்ல, ஸ்டேஷன் பிளாட்பாரம் சூப்பரிண்டெண்டைப் பார்க்குமாறு சொல்லிவிட்டார்!

அவர் (சுந்தரராஜ்) எங்களை தில்லியில் சந்திப்பதாகவும் தெரிவித்தார்.

நாங்கள் நால்வரும் சென்ட்ரல் ஸ்டேஷனுக்கு விரைந்தோம்.

முதல் வகுப்பு டிக்கட் இல்லையென்று கைவிரித்து விட்டார்கள். "ஏர் கண்டிஷன் நாற்காலி-மூன்றும் வகுப்பு-வாங்கிக் கொள்ளுங்கள். கடைசி நிமிஷத்தில் முதல் வகுப்பு டிக்கட் வாங்கியவர்கள் யாரேனும் வராவிட்டால், நீங்கள் மாற்றிக் கொள்ளலாமென்று சொன்னார்கள்.

அந்தப்படியே ரூ 117 கொடுத்து ஒரு டிக்கட் வாங்கினேன்.

மற்ற மூவரும் ஆளுக்கு ரூபாய் 25 கொடுத்து மூன்றும் வகுப்பு டிக்கட் வாங்கிக் கொண்டார்கள்.

*பிளாட்பாரத்தில் மோசடி*

சென்ட்ரல் ஸ்டேஷனில் ரிஸர்வேசன் ஆபீசுக்கு வெளிப்புறம் ஒரு மேஜை போடப் பட்டிருந்தது.

காக்கி கால் சட்டையும் மேல் சட்டையும் போட்டுக் கொண்டு ஒருவன் அங்கே உட்கார்ந்து கொண்டிருந்தான்.

அவனிடம், தடித்த குள்ளமான ஆள் ஒருவன், தலையில் கருப்புக் குல்லா அணிந்து கொண்டு வந்தான். அவன் வடநாட்டுக்காரன். சரளமாக ஹிந்தி பேசுகிறவன்.

"என் டிக்கட் என்னவாயிற்று என்று அந்த வடநாட்டான் காக்கிச் சட்டைக் காரனிடம் கேட்டான்.

'வாங்கியாயிற்று. இதோ ரிஸர்வேஷன் செய்து தருகிறேன்' என்று சொல்லிய வண்ணம் காக்கிச் சட்டை ரிஸர்வேஷன் ஆபீசுக்குள் நுழைந்தது.

வட நாட்டுக் குள்ளன் எனது சகாக்களிடம் வந்தான். "எங்கே போகிறீர்கள். உங்கள் டிக்கட் மேல் வகுப்புக்கு மாற்ற வேண்டுமானால், அதோ அந்த ஆத்மியிடம் கொடுங்கள். அவனுக்கு ஐந்தோ பத்தோ கொடுத்தால் காரியம் சுலபத்தில் முடிந்துவிடும். ........" என்று சொன்னான்.

அவன் பேச்சை நம்பி, எனது சகாக்கள் மூவரும் காக்கிச் சட்டைக்காரனிடம் பேரம் பேசி, தங்கள் மூன்று டிக்கட்டுகளையும் அவன் கேட்ட பணத்தையும் அவனிடம் கொடுத்துவிட்டார்கள்.

வட நாட்டுக்குள்ளன் மேலும் ஒரு டிக்கட் வாங்கும்படி காக்கிச் சட்டைக்காரனிடம் பணம் கொடுத்தான்.

எனது சகபாடிகளுக்கு நம்பிக்கை அதிகமாயிற்று.

காக்கிச் சட்டைக்காரன் உள்ளே போவதும், வெளியே வருவதும், அவனுடன் பேசுவதும், இவனிடம் பேசுவதும், அவன் பேச்சும், தோரணையும், பாவனையும், எல்லாமாகச் சேர்ந்து அவன் ஒரு பெரிய கில்லாடியாகத் தோற்றமளித்தது.

கொஞ்ச நேரம் ஏமாந்திருந்தால் அவன் வட நாட்டுக்குள்ளனிடம் எனது சகாக்களிடமிருந்து பெற்ற மூன்று டிக்கட்டுக்களையும் கொடுத்துவிட்டு, மாயமாய் மறைந்திருப்பான்

கிராண்ட்டிரங் எக்ஸ்பிரஸ் புறப்பட்டுச் சென்றதும் வட நாட்டான் புக்கிங் கவுண்டரில் டிக்கட்டுகளைக் கொடுத்து Refund வாங்கியிருப்பான்.

நல்ல காலம் ஆர். எம். குமாரசாமிக்கு என்ன தோன்றியதோ தெரியவில்லை.

காக்கிச் சட்டைக்காரனிடம் டிக்கட்டுகளையும் பணத்தையும் கேட்டிருக்கிறார்.

இருவருக்குமிடையே வாக்குவாதம் ஏற்பட்டுக் கைகலப்பில் முடிந்தது. ஆர்.எம்.கே. திருவேங்கடம், மகுடபதி ஆகிய மூவரும் அவனை நெட்டித் தள்ளிப் போலீஸ் ஸ்டேசனுக்குக் கொண்டு போனார்கள்.

காக்கிச் சட்டைக்காரனிடம் இரண்டு டிக்கட்டுகள் தானிருந்தன. மூன்றாவது டிக்கட் காணவில்லை.

அவர்கள் "கட்டுமார்கட்டிக்" கொண்டிருந்த இடத்தை நான் போய்ப் பார்த்தேன்,

அங்கே நின்று கொண்டிருந்த ஒருவர் என்ன தேடுகிறீர்கள் என்று கேட்டார்.

தில்லிக்கு வாங்கின ஒரு தேர்டு கிளாஸ் டிக்கட்டைத் தேடுகின்றேன். என்றேன்.

உங்கள் பெயர் திருவேங்கடமா என்றவர் கேட்டார்.

என் பெயர் அய்யாமுத்து திருவேங்கடத்தின் டிக்கட்டுத் தான் காணவில்லை என்றேன்.

இதோ! இங்கே கிடந்தது. என்று ஒரு டிக்கட்டை என் கையில் கொடுத்தார்.

நான் அதைக் கொண்டு போய் போலீஸ் ஸ்டேஷனில் இருந்த குமாரசாமியிடம் கொடுத்தேன்.

காக்கிச் சட்டைக்காரனைப் போலீசார் லாக்கப்பில் தள்ளினார்கள்— குமாரசாமி ஏதோ கம்ளெண்ட் எழுதிக் கொடுத்துவிட்டு வந்தார்.

சற்று நேரத்தில் வேறு இரண்டு பேர் போலீஸ் ஸ்டேசனுக்குச் சென்று, டிக்கட் வாங்கித் தருவதாக முப்பது ரூபாய் தங்களிடமிருந்து காக்கிச் சட்டைக்காரன் பெற்றிருப்பதாகச் சொன்னார்கள்.

அந்தக் கேசையும் போலீசார் பதிவுசெய்து கொண்டு, முப்பது ரூபாயையும் கைப்பற்றி உரியவர்களிடம் சேர்ப்பித்தார்கள்.

இப்படியாக, குமாரசாமியும் மகுடபதியும், திருவேங்கடமும் வெற்றி முரசு கொட்டிக் கொண்டு தில்லிக்குச் செல்லும் G. T. எக்ஸ்பிரசில் ஏறினார்கள்.

நானும் எனது A. C. CHAIR வண்டியில் ஏறி 71 இலக்கமிட்ட நாற்காலியில் அமர்ந்தேன்.

மாலை ஏழரை மணிக்கு வண்டியும் சென்ட்ரல் ஸ்டேசனை விட்டு நகர்ந்தது.

*தில்லிக்குச் செல்லும் வழியில்*

சென்னையிலிருந்து தில்லிக்குச் செல்லும் கிராண்டு டிரங் எக்ஸ்பிரஸ் ரயிலில் ஒரு கோடியிலிருந்து மறுகோடி வரையிலும் நடந்து செல்லலாம்.

முதல் வகுப்பு வண்டியில் நடைபாதை ஒரு ஓரத்தில் விடப்பட்டுள்ளது.

இதர வகுப்பு வண்டிகளின் நடுவினிலே தான் நடந்து செல்லவேண்டும்.

வண்டி ஓடிக் கொண்டிருக்கையில் நடந்து செல்வது இலேசான காரியம் அல்ல.

சர்க்கஸ்களில் ஒற்றைக் கம்பியின்மீது நடப்பதுபோல் "பாலன்சு" செய்ய வேண்டும். இல்லாவிடில் இருபுறமும் இடிபட நேரும்.

வெள்ளைக்காரன் காலத்தில் சகல வகுப்பு வண்டிகளிலும் இடம் தாராளமாக இருந்தது.

தற்போது இடத்தை எவ்வளவு சுருக்கி விட்டிருக்கிறார்கள். ஏமாந்தால் ஒருவர் மீதொருவர் மோதிக் கொள்ளும் அளவுக்கு இட நெருக்கடி உண்டாக்கி இருக்கிறார்கள்.

முன் காலத்தில் ஒவ்வொரு பகுதிக்கும் இருபுறங்களிலும் ஏறி இறங்கும் கதவுகள் இருந்தன.

இப்போது ஒவ்வொரு வண்டிக்கும் இரு கோடிகளிலும் இரண்டு கதவுகளிருக்கின்றன. கதவுகளின் ஓரத்தில் ஒரு Attender வீற்றிருக்கிறார்.

முதல் இரண்டாம் வகுப்புகளில் ஒவ்வொரு பகுதிக்கும் முன்பு டாய்லட் பாத்ரூம்களிருந்தன.

இப்போது அப்படியில்லை. ஒவ்வொரு கோச்சுக்கும் பொதுவாக, வண்டியின் ஒரு கோடியில் ஈரிரண்டு ரூம்கள் அமைக்கப்பட்டுள்ளனவாதலால் நாம் நினைத்தவுடன் உபயோகிக்க முடியாததுடன், தனித்தன்மையும் Privacy இல்லாது போய்விட்டது.

ரயில் தொடரின் மையத்தில் Dinning Car உணவு வண்டி இருக்கிறது. தூரப் பிரயாணிகளுக்கு இது அநுகூலம். டைனிங்கார் சிப்பந்திகள் உணவு டிக்கட்டுகளைக் கொண்டு வந்து கொடுத்து விட்டுப் போகிறார்கள். குறிப்பிட்ட நேரங்களில் அங்கு சென்று உட்கார்ந்து சௌகரியமாகச் சாப்பிடலாம். முதல் வகுப்பு பிரயாணிகட்கு அவர்கள் இருக்கும் பெட்டிகளுக்கே உணவுத் தட்டுகளைக் கொணர்ந்தும் கொடுக்கிறார்கள்.

ஆர்டர் கொடுத்திருந்தால் அதிகாலை ஆறரை மணிக்கெல்லாம் பெட் காபி அல்லது டீ கொணர்ந்து தருகிருர்கள். எட்டுமணிக்கு காலை உணவு இட்லி வடை, உப்புமா வடை ரொட்டிமுட்டை, முதலியன கிடைக்கின்றன.

பகலுணவு சைவம், அசைவம், இரண்டும் கிடைக்கின்றன.

விலை கூடுதல் என்று சொல்ல முடியாது. சமையல் அவ்வளவு ஒசத்தியும் அல்ல மட்டமும் அல்ல.

இட்லி மெதுவாக இராது. தேங்காய்ச் சட்னி கெட்டியாய் இராது. சவாரிக் குழம்பு போலிருக்கும்.

தேங்காய் என்ரு சொன்னேன். அதன் மாண்பினை இப்போதே சொல்லிவிடுகிறேன். அப்புறம் மறந்து போகும்.

ஆந்திராவைக் கடந்ததிலிருந்து தில்லி போய்ச் சேரும் வரையில் நான் ஒரு தென்னை மரத்தைக் கூடக் கண்ணுல் காணமுடியவில்லை.

தில்லியிலே ஒரு தள்ளுவண்டிக்காரன் தேங்காய் விற்றுக் கொண்டிருந்தான். விலையென்னவென்று கேட்டேன். தேங்காய் ஒன்று ஒன்றேகால் ரூபாய் என்ருன். தேங்காய்க்கீற்றுகளும் வைத்திருந்தான். அதன் விலை கேட்டேன் கிலோ ஆறு ரூபாய் என்ருன்!

நமது செந்தமிழ் நாட்டை தென்ருடென்றும் சொல்வார்கள். அதற்குத் தென்திசையுள்ள நாடென்று பொருள் கொள்வார்கள்.

பூகோளத்தைப் புரட்டிப் பாருங்கள்! தமிழ் நாட்டிற்குத் தெற்கே எத்தனையோ நாடுகள்-தென்கிழக்கு ஆசிய நாடுகள்-ஆஸ்திரேலியா, நியூசிலண்ட் வரை, ஜாவா, சுமத்ரா, மலேசியா, ஜாகரத்தா வெறும் ஆயிரம் நாடுகள் பசிபிக் சமுத்திரமெங்கும் பரவிக்கிடக்கின்றனவே.

இந்திய நாட்டைப் பொறுத்தவரை தமிழ் நாடு தென்திசை நாடாகலாம். உலகப் பரப்பினில் அப்பெயர் எவ்வாறு ஒவ்வும்?

மற்றும் பாருங்கள் தமிழிலே தெங்கினைத் தாழை.

தென்.

நாளிகேரம்.

இலாங்கலி

எனும் நான்கு பெயர்கள் சொல்வார்கள்.

இவற்றில் தென் உடையநாடு தென்+ ஞடு ஆயிற்று.

நாளிகேரம் மிகுந்துள்ள மலையாளக் கடற்கரை நாடு கேரளம் ஆயிற்று.

மற்ரென்று இலாங்கலி மிகுந்துள்ள தீவு இலங்கை யெனும் பெயர் பெறலாயிற்று. நான் சொல்வது சரிதானே!

இனி நமது தில்லி யாத்திரையைத் தொடர்வோம்.

### *முதல் வகுப்பிற்கு மாற்றம்*

மாலை ஏழரை மணிக்கு ரயில் சென்ட்ரல் ஸ்டேசனை விட்டு நகர்ந்ததும் குமாரசாமி தட்டுத்தடுமாறி நடந்து எனது பெட்டிக்கு ஒரு செய்தி கொண்டு வந்தார்.

''உங்களுக்கு முதல் வகுப்பில் இடம் கிடைத்து விட்டது. புறப்படுங்கள்'' என்று சொல்லிக் கொண்டே எனது படுக்கையைத் தமது கையில் எடுத்துக் கொண்டார்.

எனது சிறிய தோல்பையை நான் எடுத்துக் கொண்டு அவரைப் பின் தொடர்ந்தேன்.

முதல் வகுப்புப் பெட்டியை அடைய நாங்கள் நாலைந்து கோச்சுகளைக் கடக்க வேண்டியிருந்தது.

கொந்தளிக்கும் கடலில் மிதந்து செல்லும் கப்பலின் மேல் தளத்தில் நடந்து செல்வது போலிருந்தது.

ரயிலும் ஆடிக்கொண்டே சென்றது. நாங்களும் தள்ளாடிக் கொண்டே சென்ருேம்.

இரண்டு பெட்டிகளைக் கடக்குமுன் எனக்கு நெஞ்சுவலி எடுத்தது. வண்டியின் கோடியில் கதவோரத்தில் ஒல்டாலை வைக்கச் சொல்லி அதன்மீது அமர்ந்து, எனது ஜேபிலிருந்து இருதயவலி நிவாரணி மாத்திரை SORBITRATE யொன்றை எடுத்து என் நாவின் அடியில் வைத்துக் கொண்டேன்.

முதல் வகுப்பு வண்டியைப் பார்த்து வருவதாகக் குமாரசாமி சொல்லிக் கொண்டே நடந்தார்.

அவர் சென்றதும், நான் உட்கார்ந்திருந்த பெட்டியின் அட்டண்டர் ஒருவன் வந்து, தாட் பூட் தஞ்சாவூர், தும் கோன் ஐ, இதர் பைட்னேக்கு ஹரக்கம் நை என்று இறைந்தான்

ஹரே! சுப்ரோ! மைதோ பஸ்ட்கிளாஸ் பாஸஞ்சர் ஹூம். மேரே பாஸ் டிக்கட் ஐ. தில்மே தரத் ஹோகயா. இஸ்லியே பைட் ரஹா ஹூம். அபி சல் ஜாயுங்கா-என்றேன்.

அவன் போய் விட்டான்.

நான் முன்பு உட்கார்ந்திருந்த பெட்டியில், எனது நாற்காலிக்கடியில் எனது எவர் சில்வர் செம்பை வைத்திருந்தேன் அப்பெட்டியிலிருந்து நான் எழுந்து வந்தபின் பக்கத்து நாற்காலியில் அமர்ந்திருந்த அம்மாள் அதைக் கண்டெடுத்து, அட்டண்டரிடம் கொடுத்து, இங்கிருந்து முதல் வகுப்புப் பெட்டிக்கு ஒரு பெரியவர் இப்போதுதான் போனார், அவரிடம் இதைக் கொடுத்துவிடு என்று சொல்லியிருக்கிறார். அந்தச் செம்பை என்னிடம் கொடாமல் அட்டண்டர்கொண்டு போவதைப் பார்த்து:

ஹரே! பாய்! ஹோ லோடா தோமேரா ஐ, ஹிதர் தேவ், என்று கூறினேன்.

அவன் கொடுக்காமல் தன் அறைக்குள் நுழைந்தான்.

சிறிதுநேரத்தில் குமாரசாமியும் வந்தார். படுக்கையும் பையும் அந்த இடத்திலேயே விட்டுவிட்டு குமாரசாமியும் நானும் முதல் வகுப்பு பெட்டிக்குச் சென்றோம்.

போகுமுன் அட்டண்டரைப் பார்த்து நீ என் லோட்டாவைத் திருடிக்கொண்டு வந்திருக்கிறாய், தா இங்கே என்று அதட்டினேன், அவன் அதைக் கொடுத்துவிட்டான்.

எங்கள் ரயில் சென்டரல் ஸ்டேஷனை விட்டுப் புறப்படும் தருவாயில் பிளாட்பாரம் சூப்ரண்டண்ட் சண்முகசுந்தரம், முதல் வகுப்பில் ஒரு பர்த் காலியிருப்பதாகச் சொல்லி அதன் நம்பரையும் குறித்துக் குமாரசாமியிடம் கொடுத்திருந்தாராம். எனவே அந்தப் பெட்டியில் என்னை உட்காரவைத்து விட்டு, குமாரசாமி அப்புறம் சென்று,டிக்கட் பரிசோதகரைத் தேடித் பிடித்து, என்னிடம் அழைந்து வந்தார்.

ஏதோ ஒரு வரும்படிக்கு வழிகிடைத்தது என்றஎண்ணத்தோடு அவன் வந்திருந்தான் என்று ஊகிக்க முடிந்தது.

நான் உட்கார்ந்திருந்த அறையில் நான்கு பர்த்துகள் இருந்தன. என்னையும் சேர்த்து நால்வர்தான் அதனுள் இருந்தோம்.

ஓ! இந்த பர்த் காலி இல்லை. வேறொருவருக்குக் கொடுத்தாய் விட்டது, என்று டிக்கட் பரிசோதகன் புளுகினான்.

குமாரசாமியும் அவனும் சிறிது நேரம் தர்க்கம் செய்தார்கள்.

அவன் போய்விட்டான்.ஒருகைபார்த்து விடுவதென்று குமாரசாமி என்னருகில் குந்திக்கொண்டார்.

டிக்கட் எக்ஸாமினர் பணத்துக்கு அடிப் போடுகிறான் என்று சொன்னார்கள்.

அடுத்த ஸ்டேஷனில் வண்டி நின்றது.

டிக்கட் பரிசோதகர் மற்றொரு ஆளுடன் வந்தார்.

நாங்கள் யார், எந்தச் சூழ்நிலையில் அங்கு இருக்கிறோம். என்பதைக் குமாரசாமி அவர்களிடம் தெளிவாகச் சொன்னார்.

எனது டிக்கட்டை எடுத்துச் புதிதாக வந்த பரிசோதகனிடம் கொடுத்து முதல் வகுப்புக்கு மாற்றித்தரும்படி கேட்டேன்.

ஓ! நீங்கள் அநுமதியின்றி ஏறியிருக்கிறீர்கள். தரமுடியாது என்றான் அவன்.

சிறிது நேரம் வாக்குவாதம் நடந்தது.

குமாரசாமியைப் பார்த்து நீங்கள்யார்? உங்கள் டிக்கட் எங்கே? என்று கேட்டான் அவன்.

நான் இந்தப் பெரியவருக்கு உதவி செய்ய வந்தேன். என் பெட்டிக்கு நான் போகிறேன் என்று சொல்லிவிட்டுக் குமாரசாமி போய்விட்டார்.

டிக்கட் பரிசோதகரிடம் நூறு ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்துக்கொடுத்தேன்.

நாகபுரி வரையிலும் தான் மாற்றிக்கொடுப்பேன். அதற்குமேல் இடம் கிடைக்குமா

வென்று உறுதி சொல்ல முடியாது என்ருன் அவன்.

சரி! அப்படியே செய் என்றேன்.

நாகபுரிவரையிலும் அனுமதிச் சீட்டெடு திக்கொடுத்தான். 45 ரூபாய் போக மீதி 55 ரூபாயும் கொடுத்தான்.

அவர்கள் போனபின்பு குமாரசாமி என் பெட்டியும் படுக்கையும் கொண்டுவந்து சேர்த்தார்.

என் செம்பை எடுத்து வந்த அதே அட்டண்டர்தான் என் படுக்கையைச் சுமந்து வந்தார்.

இவர் உங்கள் செம்பைத் திருடிவிட்டதாகச் சத்தம் போட்டீர்களாமே. பாவம் அவர் வருத்தப்பட்டுக்கொண்டிருந்தார். சமாதானம் சொல்லி அழைத்து வந்தேன் என்ருர் குமாரசாமி.

பெரியவரே! நீங்கள் தில்லி போய்ச் சேரும்வரையில் உங்களுக்கு நான் வேண்டிய ஒத்தாசை செய்கிறேன் என்று சுத்தமான தமிழில் அந்த அட்டண்டர் கூறி, ஒரு கும்பிடும் போட்டார்.

இருவரும் போய்விட்டார்கள்.

சக பிரயாணிகள் சங்கடப்படாமல் எனக்கு லோயர் பர்த்தைக் கொடுத்து உதவினுர்கள்.

*சகபிரயாணிகள் மூவர்.*

சகபிரயாணிகளில் ஒருவர் பெயர் பாரதி. அவர் இராணுவத்தில் ஒரு காப்டன் பதவியில் இருப்பவர்.

யு. என். எனற உலக சபையில் ஒன்பது வருடம் இந்தியக் குழுவுடன் இருந்துவிட்டு, ரஜாவில் வந்து மதுரையிலிருக்கும் அவரது தங்கையைப் பார்த்து மகிழ்ந்து, மீண்டும் டூட்டியில் ஜாயினுக நாகபுரி போய்க்கொண்டிருந்தார். கோவையில் பல்லாண்டுக்ளுக்கு முன் வசித்திருந்த சுப்ரமண்ய பாண்டேயின் ஒரே புதல்வர் அவர்.

அவருடன் பிரயாணம் செய்த மற்ரெரு பிரயாணி மிஸ் ராதா எனும் கேரளத்துக்காரி. அவளும் இராணுவத்தில் பணிபுரிபவள். நாகபுரியை அடுத்த பந்தாரா எனுமிடத்தில் வசித்திருக்கும் தன் தங்கையைப் பார்ப்பதற்குப் போய்க்கொண்டிருத்தாள். ஒரு "ஹோல்டால்" நிறையத் தேங்காய்களும், ஒரு பெரிய மூங்கில் கூடை நிறைய நேந்திரன் வாழைப் பழம், அன்ருசிப்பழம், மாம்பழம், பலாப் பழம் வைத்திருந்தாள்.

மற்ரெரு சிறிய கூடையில் பலாப்பழ அல்வா, நேந்திரன் வறுவல் முதலிய தின்பண்டங்கள் வைத்திருந்தாள்.

மற்ரெரு பெரிய பெட்டியில் தன்னுடைய துணிமணிகள் வைத்திருந்தாள். இதுவும் உன் தங்கைக்கா என்றேன்.

Ho! no! its all mine. My sarees. I intend staying there for about a month என்று அழகாக ஆங்கிலத்தில் பதில் சொன்னுள். ராதையின் தங்கை புருஷன் ஒரு சிமெண்ட் கம்பெனியில் வேலை பார்க்கிருர்.

மூன்ருவது சகபிரயாணி ஒரு இளம் வாலிபர். ஈரோடுக்காரர். பெயர் ஆர். வேதநாயகம். நாகபுரியிலிருந்து பனிரண்டு மைலுக்கு அப்பாலுள்ள ஜவஹர் நகரில் அமைக்கப்பட்டுள்ள இராணுவதளவாட உற்பத்திச்சாலையில் வேலைபார்ப்பவர். அடுத்த ஆண்டில் நடைபெறவிருக்கும் தனது திருமணத்திற்கு அவசியம் வரவேண்டுமென்று கேட்டுக் கொண்டார்.

*அடுத்த நாள்.*

சென்னை-டெல்லி கிராண்ட் டிரங் எக்ஸ்-பிரஸ் தில்லியை நோக்கி விரைந்து கொண்டிருந்தது.

மறுநாள்பொழுதும் புலர்ந்தது.

ரயில் பாதையின் இரு புறங்களிலும், கரிசல் மண் காடுகளில் நிலக்கடலை, சோளம், போன்ற புன்செய்ப் பயிர்கள் படர்ந்திருந்தன.

எல்லோருக்கும் முன்பாக எழுந்திருந்து காலைக் கடன்களை முடித்துக் கொண்டு அமர்ந்தேன்.

எனக்கெதிர்ப்புறம் கீழ்த்தட்டில் ராதையும் பாரதியும் ஒருவர்மேல் ஒருவர் சாய்ந்து கொண்டு தங்கள் வீரப்பிரதாபங்களைப் பற்றிச் சுவாரஸ்யமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

அவர்கள் நூற்றுக்கு நூறு ஆங்கிலத்தி லேயே பிளந்து தள்ளினர்கள். இடையி டையே இந்தியும் கலந்து கொண்டது. தமி ழும் மலையாளமும் எட்டிக்கூடப் பார்க்க வில்லை.

அவர்கள் நெருக்கத்தைக் கலைப்பது பாவமென்று எனக்குத் தோன்றியது. இரு வரும் தாம்பத்ய வாழ்க்கை இன்னதென்று அறியாதவர்கள்.

எதற்கும் ஒரு குட்மார்னிங் போட்டு வைத்தேன். அவர்கள் பேச்சுத் தடைப் பட்டது.

டைனிங்காரிலிருந்து பெட்காபித் தட்டு டன் சர்வர் நுழைந்தான்.

வேதநாயகம் மேல் தட்டிலிருந்திறங்கி பாத்ரூமுக்குக் கிளம்பினர்.

ஒரு சின்னஞ்சிறு குழந்தை, ஐந்து வய திருக்கும், தலைவாரிப்பின்னி, முகப்பவுடர் பூசி, அச்சிட்ட பிராக்குடன் எங்கள் அறையை எட்டிப் பார்த்தாள்.

நல்ல காலம் என் பாக்கட்டில் நிறைய டெக்கா மிட்டாய் இருந்தது.

அரே! பாப்பா! வா. வா. உன்பேர் என்ன என்று கேட்டுக் கொண்டே அதன் கைநிறைய மிட்டாய்ச் சுருள்களைவைத்தேன்.

கொஞ்சம் சங்கோஜத்துடன் தலையை ஒரு புறம் சாய்த்துக் கொண்டு செல்வி என்று கொஞ்சும் தமிழில் பதில் சொன்னுள்.

அழகான குழந்தை! என் கண்ணே அவளுக்குப் பட்டிருக்கும்! சென்னை முன் னுள் அமைச்சர் முத்துச்சாமி அவர்களின் அருமைக் கண்மணியென்று பின்னர் தெரிந்து கொண்டேன்.

வண்டி சென்னையிலிருந்து ஆயிரம் கிலோமைல்களைக் கடந்து வர்தா ஸ்டேஷனை அடைந்தது.

டிக்கட் கலெக்டர் பிரசன்னமானுன்.

நாகபுரியில் இந்த அறை காலியாகி விடும். நீங்கள் அடுத்த அறைக்கு மாற வேண்டும். நாகபுரியிலிருந்து டெல்லிக்கு அனுமதிச் சீட்டுத் தருகிறேன் என்ருன். சரி யென்று சம்மதித்து 27 ரூபாய் கொடுத்து தில்லிக்கு டிக்கட் பெற்றுக் கொண்டேன்.

அடுத்த அறையை எட்டிப் பார்த்தேன். அது இரண்டே தட்டுகள் கொண்டது. கீழ்த் தட்டில், என்னைவிடத் தலை நரைத்த கிழவர் ஒருவர் பட்டப்பகலில் படுத்துக் கிடந்தார்.

மேல்தட்டுத் தான் எனக்கெனச் சொல் லாமல் தெரிந்துவிட்டது. அதன்மேல் எப்ப டிச் சாடுவது?

வெள்ளைக்காரன் காலத்தில் மேல்தட் டுக்குப்போக ஏணி வைத்திருந்தான். Camp Cot போட்டுக்கொள்ளும் அளவுக்கு இடவச தியிருந்தது. கார்டிடம் கேட்டால், Quilt, Pillow, Rugs யாவும் வாடகைக்கு கிடைக்கும். இப்போது? சுதந்திரம் வந்து எல்லாவற்றை யும் சுருக்கிவிட்டதே!

நாகபுரி ஸ்டேஷனில் வண்டி நின்றது. எனது பெட்டியிலிருந்த மூவரும் இறங்கி விட்டனர்.

நான் அடுத்த அறைக்கு எனது பெட்டி படுக்கையை மாற்றிவிட்டு ரயிலைவிட்டுக் கீழே இறங்கிப் பிளாட்பாரத்துக்குச் சென் றேன்.

''நான்தான் அளகேசன்'' நீங்கள் வந் தது ரொம்ப சந்தோஷம். நீங்கள் எல்லாம் இல்லாமல்......... என்று ஆனந்தப்பட்டார் என்னைக் கண்ட முன்னுள் ராஜ்ய மந்திரி O. V. அளகேசன் அவர்கள்!

அதோ சுப்ரி வருகிருர்! அவரை சென்ட் ரல் ஸ்டேசனிலேயே பார்த்தேன். அவரும் அவருடைய மனைவி கமலா அவர்களும் தில்லியிலுள்ள தங்கள் புத்திரி வீட்டுக்குப் போகிருர்கள்.

காப்டன் பாரதி! அதோ பார் சுப்ரி! அவரைப் பார்க்க வேண்டுமென்றுயே என் றேன்.

இவர்தான் நமது சுப்ரமண்ய பாண்டே யின் மகன் காப்டன் பாரதி யென்று சுப்ரியி டம் அறிமுகப் படுத்தினேன்.

பாரதி சுப்ரியின் காலைத்தொட்டு நமஸ் கரித்தான்.

மகாத்மா காந்தியின் தலைமையின் கீழ் பிரிட்டிஷ் ஆட்சியுடன் போராடிய சுதந்திரப் போர் வீரர்களில் பல ''மாடல்கள்'' உண் டெனத்தமாஸாக கூறுவார்கள்.

1920ம் மாடல், 1930, 1942 எனமூன்று மாடல்கள்!

சுப்ரியும் நானும் 1920 மாடல்கள்.

கோவையில் சுப்ரியும் நானும் சேர்ந்துழைத்தோம். சுப்ரி கல்லூரியை விட்டு ஓடி வந்தவர். நான் என்கடையைச் சாத்திவிட்டு இயக்கத்தில் சேர்ந்தவன்.

சுப்ரி 1923-ல் நாகபுரி கொடிப்போராட்டத்துக்குச் சென்று விட்டார். காங்கிரஸ் வேலைகளைச் செட்டிபாளையம் அய்யாசாமிக் கவுண்டரும் நானும் கவனித்து வந்தோம்.

சுப்ரி நாகபுரிச் சிறையினின்று வந்ததும் காங்கிரஸ் காரியாலயத்தை அவரிடம் ஒப்புவித்துவிட்டு நான் வைக்கம் சத்தியா கிரகத்துக்குப் போய்விட்டேன். அங்கு ஈ. வெ. ராமசாமி நாயக்கர் எனக்கு ஜோடியானார்.

இன்று உயிரோடிருப்பவர்களில், கோவையில், சுப்ரியும் நானும் 1920 மாடல்கள். வக்கீல் என். சுப்ரமணிய்ய அய்யர் எந்தமாடல் என்று தெரியவில்லை.

வேதாரண்யம்உப்புச்சத்யாக்கிரகத்தின் போதும் அதற்குப் பிறகும் இயக்கத்தில் ஈடுபட்டவர்கள் 1930-ம் மாடல்கள். சிறந்த தேசபக்தர்கள் T. S அவனுசிலிங்கம், சி. சுப்ரமணியம் போன்றவர்கள்.

1942 மாடல்களில் காந்தியவாதிகள், சந்தர்ப்பவாதிகள், புரட்சிக்கனல் கக்கும் வீரர்கள் எனப் பலரும் கலந்த ஒரு சங்கமம் தோன்றிற்று.

சுப்ரியின் மனைவி கமலாவும் என்மனைவி கோவிந்தம்மாளும் 1932ல் வேலூர் சிறையில் ஒன்ருய் இருந்தவர்கள்.

1930ல் கோவையில் அவர்கள் இருவரும் அந்நிய ஜவுளிக்கடைகள் முன் மறியல் செய்தார்கள். அவர்களைப் போலீசார் கைது செய்யவில்லை. அவர்களென்ன - அவர்களைப் போல் இயக்கத்தில் ஈடுபாடு கொண்டிருந்த பல்லாயிரம் பேர்களை போலீசார் கைது செய்து கௌரவிக்கவில்லை. ஐயோ! என்னைக் கைது செய்யவில்லையே என்று அக்காலத்தில் அழுதவர்கள் பலபேர்கள்!

தில்லியில் தாமிரப்பத்திரம் வழங்க என் தோழர் சுப்ரி அழைக்கப் படாதது எனக்கு வருத்தமாய்த் தானிருந்தது. என் மனத்தின் உற்சாகத்தை அது பாதித்தது.

ரயில்வே கன்டக்டரிடம் ஏணி வேண்டுமென்று கேட்டேன்.

இரவு எட்டுமணிக்கு A. C. கோச்சிலிருந்து ஒரு ஏணி கொண்டு வந்தார். ஆனல் அது உயரம் போதவில்லை - இரண்டு அங்குலம் குறைவாக இருந்தது. அதைப் பொருத்துதற்கு மேல் தட்டில் வளையமும் இருக்கவில்லை. எப்படியோ, நாலைந்து பேர்கள் ஏணியைத் தாங்கிப் பிடிக்க, மேலே ஏறிப் படுத்து இரவைப் போக்கினேன்.

அதிகாலை 4 மணிக்கே சிறுநீர் கழிக்க கீழே இறங்க வேண்டியிருந்தது. கீழ்த்தட்டில் சயனித்திருந்த பெரியவரைக் கூப்பிட்டு அவருடைய கைத்தாங்கலில் மெல்லக் கீழே இறங்கினேன். அவர் ஒரு ஆந்திரா எம்.பி.

பாத் ரூம் அந்நேரத்தில் காலியாகவும் சௌகர்யமாகவும் இருந்ததால் காலைக்கடன்களையெல்லாம் முடித்து, முக க்ஷவரமும் செய்து குளித்து,உடைகளைமாற்றி தில்லியை வரவேற்கச் சித்தமானேன்.

*தில்லியும் வந்தது:*

பகல் பதினேறு மணிக்கு எங்கள் ரயில் தில்லி ஸ்டேசனை அடைந்தது.

எனது நண்பர் பி. எஸ். சின்னதுரை எதிர்பட்டார். அவர் அதற்கு முந்திய நாள் கோவையினின்று தில்லி சேர்ந்த நான்கு சுதந்திரப் படை வீரர்களில் ஒருவர்.

ஆர். வி. சுவாமிநாதனுக்கு நான் சென்னையிலிருந்து அனுப்பிய தந்தி கிடைத்தாகவும், அவர் தம்மை ஸ்டேசனுக்குச் சென்று என்னைச் சந்திக்கும்படி சொல்லியதாகவும் சின்னதுரை தெரிவித்தார்.

தில்லியிலிருந்த சாலை இளந்திரையனுக்கு தந்தி கொடுத்திருந்தேன். அவர் வரவில்லை.

சுதந்திரப் போர் வீரர்களை வரவேற்பதற்குத் தில்லி ரயில் நிலையத்தில் காரியாலயம் அமைத்துக் கொண்டு மத்திய அரசாங்கப் பிரதிநிதிகள் இருந்தார்கள். அவர்கள் எங்களுக்குப் பூமாலைகள் அணிவித்து, அடையாளச் சீட்டுகள் வழங்கினர்கள். எங்களை

ஏற்றிச் செல்ல மோட்டார் பஸ்களும் தயாராக நின்றிருந்தன.

எங்கள் எல்லோருக்கும் தேநீர் வழங்கப்பட்டது. அருந்திய பின் பஸ்களில் ஏறினோம்.

*குலாபி பாக் முகாம்*

தில்லிக்குப் பத்துமைலுக்கு அப்பால் குலாபி பாக் என்னுமிடத்துக்குப் போய்ச் சேர்ந்தோம்.

பஸ்களும், லாரிகளும், கார்களும், குதிரை வண்டிகளும், ஆட்டோ ரிக்ஷாக்களும், படை திரட்டிச் செல்வதுபோல் பாதையில் நிறைந்திருந்ததால் நாங்கள் ஏறிச் சென்ற பஸ் நின்று நின்று நிதானமாகச் சென்று பகல் ஒரு மணிக்குத்தான் எங்கள் முகாமை அடைந்தது.

குலாபி என்றால் ரோஜாமலர் என்று அர்த்தமாம். பாக் (க்கை அழுத்தமாக உச்சரிக்கக் கூடாது ) என்றால் பூங்கா என்று பொருள்படுமாம் !

நாங்கள் சென்ற இடத்தில் பூக்களும் இல்லை. பூங்காவும் காணவில்லை.

அது ஒரு பொட்டைக்காடு

அங்கே ஒரு புதிய காலனி உருவாகியிருந்தது. நாலைந்தடுக்கு மாடிகள் கொண்ட பல கட்டிடங்கள் கட்டப்பட்டிருந்தன. அவற்றிற் பூராவாக மக்கள் இன்னும் குடியேறவில்லை.

காலியாக இருந்த கட்டிடங்களில் நாங்கள் கிரகப்பிரவேசம் செய்தோம். பல மாநிலங்களிலிருந்து வந்திருந்த சுமார் ஆயிரம் சுதந்திரப்போராட்ட வீரர்கள் அங்கு குழுமியிருந்தனர்.

தில்லியில் மாஜிஸ்ட்ரேட்டாக இருந்த ஒரு அதிகாரி அந்த முகாமுக்குப் பொறுப்பாக இருந்தார். பொறுமையும் இனிய சுபாவமும் உடையவராக அவர் காணப்பட்டார்.

நாங்கள் தங்கியிருந்த வீடுகளுக்கு இன்னும் வெள்ளை அடிக்கவில்லை. அவசர அவசரமாக எங்களுக்கென எலக்ட்ரிக் விளக்குகளும், விசிறிகளும், தண்ணீர்க் குழாய்களும் அமைக்கப்பட்டிருந்தன.

அறைகள் அனைத்தும் வெருந்தரை. மேசை, நாற்காலிகள், கட்டில்கள் போன்ற தளவாடங்கள் எதுவும் இருக்கவில்லை.

ஆர். எம். குமாரசாமியும் நானும் பிடித்த அறை நாலாவது மாடியில் இருந்தது. அதை எய்த நான்கு-இருபது-எண்பது படிகள் ஏற வேண்டும். எழுபத்தைந்து வயதும், இருதய நோயும் அடைந்துள்ள எனக்குச் "சீ" யென்று ஆகிவிட்டது.

வந்திருந்த அத்தனைபேர்களுக்கும் சமையல் திறந்த வெளியில்தான் செய்யப்பட்டது. செங்கற்கள் அடுக்கிய அடுப்புகள்பலவற்றில் பாத்திரங்கள் வைத்துச் சமைத்துக்கொண்டிருந்தார்கள். மேலே ஆகாயம்தான் அந்தச் சமையலறைக்குக் கூறையாக இருந்தது. காக்கைகள் மொய்த்திருந்தன.

உட்கார்ந்து சாப்பிடுவதற்கு ஒருசிறிய கூடாரம் அடித்து, அதனுள் நீள மேஜைகளும் பெஞ்சுகளும் போடப்பட்டிருந்தன. ஒரு நூறுபேர்கள்தான் அதனுள் உட்கார்ந்து சாப்பிடமுடிந்தது. மற்றவர்களில் தட்டுகளில் போஜனத்தைப் பெற்றுக்கொண்டு திறந்த வெளியில் அங்கும் இங்கும் உட்கார்ந்து சாப்பிட்டார்கள்.

சாப்பாடு, ரொட்டி, சப்பாத்தி, பூரி, அரிசி, காய்கறிகள். மாமிஸ வகைகள், பழம், பால், எனப் பலரகங்களில் இருந்தன.

வேண்டுவோருக்கு வேண்டுமளவு முகக்கோணலின்றிப் பரிமாறப்பட்டதாகச் சொன்னார்கள்.

நான் அங்கு சாப்பிடவில்லை. காலையில் ஒரு கோப்பை சூடான டீயும், இரவில் ஒரு கோப்பை சூடான பாலும், ஒரு வாழைப்பழமும் மட்டும் அங்கு வாங்கிச் சாப்பிட்டேன். பகலுணவை வெளியில் சென்ற இடங்களில் முடித்துக்கொண்டேன் ஆதலால் எனக்கு உணவுப் பிரச்னை எதுவும் இருக்கவில்லை.

*பழைய முகங்கள்.*

தில்லிக்குச் சென்றதில் ஒரு ஆனந்தம் பழைய முகங்கள் பலவற்றைப் பார்க்கமுடிந்ததுதான்.

ஆனால் அடையாளங்கண்டுகொள்வதில் வெற்றிபெறவில்லை.

ராமரத்தினத்தை நாலுமுறை கண்டு பேசினேன். ஆனால் ஆள் இன்னாரெனத் தெரிந்து கொள்ளாமலே பேசி இருக்கிறேன். ராமரத்தினம் வந்துள்ளதாகக் கேள்விப்

பட்டு, அவரைப் பார்க்கவேண்டுமெனப் பல பேரிடம் சொல்லி அனுப்பினேன். ராமரத்தினம் மீண்டும் வந்தார். என்னுடன்தான் பேசினீர்களே! என்னைப் பார்க்கவேண்டும் என்று சொன்னீர்களாமே என்று அவர்தம் காவியேறிய பற்களைக் காட்டி நகைத்தார்.

மதுரை கிருஷ்ணசாமி பாரதியைத்தான் எனக்கு நன்ருகத் தெரியுமே! அவர் என் அருகில் நின்று என் முகத்தைப் பார்த்துக் கொண்டே இருந்தார். அவர் வாய்திறந்து பேசும்வரையில் அவரை இன்னுரென்று தெரிந்து கொள்ள முடியவில்லை. அவர் எப்போதும் காலஞ்சென்ற எஸ். சத்திய மூர்த்தி அவர்களைப் போன்றே உச்சரித்துப் பேசுபவர் ஆயிற்றே!

சோகில்பட்டி அருப்புக்கோட்டை திருப்பதி ரெட்டியார்-பல்லனைத்தும் போன பண்டைக் கிழவர் -76- என்ன 1938ல் அருப்புக் கோட்டை தாலூகா மகாநாட்டில் தலைமை வகித்தீங்களே - மறந்துட்டிங்களா என்று அறிமுகம் செய்து கொண்டது எனக்கு வெட்கமாக இருந்தது.

நாச்சியார் கோவில் சுப்பையாபிள்ளை-பத்தாண்டு சிறை தண்டனை பெற்றவர். என்ன! அண்ணுச்சி! எங்களூர் மகாநாட்டில் தலைமை வகித்தீர்களே-மறந்திட்டீங்களா-என்ருர்.

நீண்ட தாடியுடன்-என்னை ஒருவர் பார்த்துச் சிரித்தார். நானும் பார்த்தேன். தெரியலையா என்ருர். சொல்லுங்கள் என்றேன். தஞ்சை - கொரடாச்சேரி- தியாகராஜபிள்ளை என்ருர்.

அவருடன் அவருடைய மனைவியும் காசிக்குப் போக வந்திருந்தார். என்னம்மா! நீங்கள் உயிரோடிருக்கையில், இவருக்கு இந்தவேடம் என்றேன். ஏதோ, கொஞ்ச நாளைக்கு அப்படி இருந்து பார்க்கிறேன் என்று பிரியப்பட்டார். சரியென்று சம்மதித்தேன் என்ருர் அந்த அம்மையார்!

சென்னை லட்சுமணசாமி முதலியாரும் தன் துணைவியுடன் வந்திருந்தார்,

நான் தான் சந்திரசேகர முதலியாரின் அக்காள் மகன் என்று ஒருவர் தன்னை அறிமுகப் படுத்திக்கொண்டார்.

சேலம் A. சுப்ரமண்யம் கடந்த நாற்பதாண்டுகளாக எனக்குத் தெரிந்தவர். இளைத்து, எலும்புந்தோலுமாய், இரண்டு கண்களின் ஒளியுமிழந்து பரிதாபக் கோலமாய் உட்கார்ந்திருந்தார். பிறர் சொல்லத்தான் அவரை அறிந்து கொண்டேன்.

கள்ளிக் கோட்டை மாத்ருபூமி ஆசிரியர் K.P. கேசவமேனன்-அவரும் நானும் 1924ம் ஆண்டில் திருவனந்தபுரம் சிறைச்சாலையில் இருந்தோம். கண்ணொளி கெட்டுப்பிறர் கைத் தாங்கலுடன் தரிசனம் தந்தார்.

இப்படி எத்தனையோ பெயர்களைக் கண்டு கொண்டு, இன்பமும் துன்பமும் காந்த கண்ணீர் வடித்தேன்.

அடிக்கடி சந்திக்கும் வாய்ப்பற்றுப் போனதினுல்தான், அவர்களைக் கண்டவுடன், அடையாளம் புரியாமல் போயிற்றே ஒழிய ஒருவரேனும் என் எண்ணத்தினின்று மறையவில்லை.

*14ந் தேதி மாலை*

அடுத்தநாள் 15-8-72 அன்று சுதந்திர தின வெள்ளிவிழாக் கொண்டாட்டத்தின் போது சுதந்திரப் போராட்ட வீரர்களுக்கு தாமிரப் பத்திரம் வழங்கவிருக்கும் கூட்டத்தில், அவர்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டுமென்பதை விளக்க ஒரு ஒத்திகை 14ந்தேதி மாலை மூன்று மணிக்குச் செங்கோட்டையின் உள்ளே திவான்-ஏ-ஆம் என்ற இடத்தில் நடைபெறுமென்று, அறிவிக்கப்பட்டிருந்ததால், எங்கள் முகாமிலிருந்து நாங்கள் எல்லோரும், அன்று பகல் இரண்டு மணிக்குப் பஸ்களில் ஏறிச் சென்ருேம்.

திவானே ஆம் என்ற பழங்கால தர்பார் மண்டபத்தின் உள்ளேயும், அதன் எதிர்ப் புறமும் நாற்காலிகள் போடப்பட்டு அலங்கார வேலைகள் நடந்து கொண்டிருந்தன.

மாநில அரசாங்கங்களிலிருந்தும் யூனியன் அரசாங்கப் பிரதேசத்திலிருந்தும் சுதந்திரப் போராட்ட வீரர்களுடன் தில்லிக்கு வந்திருக்கும் அரசாங்கப் பிரதிநிதிகள், ஒத்திகை நடக்கும் இடத்திற்கு அவசியம் வர வேண்டுமென்றும் அறிவிக்கப்பட்டிருந்தது. அதன்படி எல்லோரும் வந்திருந்ததாகத் தெரியவில்லை. முக்யமாகத் தமிழ்நாட்டு

அரசாங்கத்தால் அனுப்பப்பட்டிருந்த T. D. சுந்தர்ராஜ் I.A.S. எங்கள் கண்களில் அன்றும், அதற்கடுத்த நாளும் தென்படவே இல்லை.

ஒத்திகை நடந்த கூட்டத்திலே, எங்கள் ஒவ்வொருவருக்கும் அடுத்தநாள் வைபவங்களின்போது அணிந்து கொள்ளும் பொருட்டு அடையாள Badges வழங்கப்பட்டன. அதில் எங்கள் பெயரும், மாநில அரங்கத்தின் பெயரும், எங்கள் வரிசை நெம்பரும் குறிக்கப்பட்டிருந்தது.

இந்திய அரசின், உள்துறை இலாகா –Ministry of Home Affairs-மந்திரி K. C. Pant, என்பார் சுதந்திரப்போராட்ட வீரர் ஒவ்வொருவருக்கும், தனித்தனியே, பெயரிட்டு, வீரர் ஒவ்வொருவருக்கும், தனித்தனியே, பெயரிட்டு, அனுப்பியிருந்த வரவேற்புக் கடிதம் எங்களுக்கு வழங்கப்பட்டது.

அக்கடிதத்தை வாசகர்களுடன் பகிர்ந்து கொள்கிறேன்.

புதுடில்லி-1
11-ஆகஸ்ட்-1972
20–சிரவண-1894.

அன்புள்ள ஸ்ரீ அய்யாமுத்து,

25வது சுதந்திர ஜெயந்தி விழா ஆரம்பிக்கப்படும் இத் தருணத்தில் உங்களை மிக்க மகிழ்வுடன் தில்லியில் வரவேற்கிறேன்.

தேசத்தின் பல பாகங்களிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்பட்டு வந்திருக்கும் சுதந்திரப் போராட்ட வீரர்களுக்கு தாமிர பத்ரங்கள் வழங்கப்படும் வைபவம், சுதந்திரதின விழாக்களில் மிக்க சிறப்புடையதாகும்.

சுதந்திரப் போராட்ட இதிகாசத்திலே பொறிக்கப்பட்டுள்ள, அந்த வீரர்களின் ஆண்மை, துணிவு, தியாகம், அவர்கள் பட்ட கஷ்ட நஷ்டங்கள் ஆகியவற்றை அரசும், மக்களும் பாராட்டுவற்கு ஒரு சிறந்த வாய்ப்பினை இவ்விழா அளித்திருக்கிறது.

நீங்கள் இந்திய அரசாங்கத்தின் விருந்தினர் ஆவீர்கள்.

நீங்கள் தங்குவதற்கும், உங்கள் ஆகாராதிகட்கும், போக்குவரத்துக்கும் ஏற்ற வசதிகள் செய்யப்பட்டுள்ளன. உங்களுக்குப் பிரியமானால், நீங்கள் அவற்றைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

இந்த ஏற்படுகள் உங்களுக்கு சௌகரியமாக இருக்குமென நம்புகிறேன்.

தங்களை நேரில் சந்திக்கும் வாய்ப்பை எதிர்பார்க்கிறேன்.

பரிவுடன்,

தங்களன்புள்ள,
K. C. PANT.

*இதர அழைப்புகள்*

1–ஆகஸ்டு, 15, 72ல் தில்லி செங்கோட்டையில் நடைபெறும் சுதந்திரதின விழாவுக்கு வரும்படி ஒரு அழைப்பு தற்காப்பு மந்திரி–காரியாலயத்திலிருந்து கொடுக்கப்பட்டது.

பிரதம மந்திரி காலை 7–19க்கு வருவார். நீங்கள் உங்கள் ஆசனத்தில் காலை 7 மணிக்கே அமர்ந்திடவேண்டுமெனக் கோரப்படுகிறது.

அழைப்புக் கார்டை உங்களுடன் கொண்டுவரவேண்டும். என்றும் அதில் குறிக்கப்பட்டிருந்தது.

2. செங்கோட்டை, தீவானே அம் மண்டபத்தில் 15-8-72 பகல் 11–30மணிக்குச் சுதந்திரப் போராட்ட வீரர்களை கௌரவிக்க நடத்தப்படும் வைபவத்தில் கலந்து கொள்ள வேண்டுமென்று, பிரதமமந்திரியும், தேசீயக்கமிட்டி அங்கத்தினர்களும் அனுப்பிய அழைப்பும் எங்களுக்கு வழங்கப்பட்டது.

ராஷ்ட்ரபதி தலைமை தாங்குவாரென்றும் நாங்கள் எங்கள் ஆசனங்களில் 10 மணிக்கே அமர்ந்திருக்கவேண்டுமென்றும் அவ்வழைப்பால் குறிக்கப்பட்டிருந்தது.

3. 15-8-72 மாலை 6 மணிக்கு ராஷ்ட்ரபதியும், அவர் மனைவி V. சரஸ்வதி கிரியும் அளிக்கும் வரவேற்பில் கலந்து கொள்ளுமாறு ஒரு அழைப்புக் கொடுக்கப்பட்டது.

ராஷ்டிரபதி மாலை 6-15க்கு மொகல் கார்டனுக்கு வருவாரென்று அதில் குறிக்கப்பட்டிருந்தது.

4. 16–8–72-ம் தேதி காலை 8-மணிக்குப் பிரதம மந்திரி இந்திராகாந்தி அம்மையார் தமது ஜாகையில், சுதந்திரப் பேராட்ட

வீரர்களைச் சந்திப்பாரென்றும், விருந்தளிப்பாரென்றும் ஒரு அழைப்பு வழங்கப்பட்டது.

5. 19-8-72 மாலை 4-30 மணிக்குச் சென்னை கவர்னர் தமது ராஜபவனத்தில் தாமிர பத்திர தாரிகளைச் சந்திப்பாரென்றும் அவர்களுக்குத் தேநீர் விருந்து அளிப்பாரென்றும், மற்றொரு அழைப்பும் எங்கட்கு வழங்கப்பட்டது.

ஒத்திகைச் சடங்குகள் முடிந்த பின்னர் 16ந் தேதி புறப்படுவதற்கு டிக்கட் வாங்கிப் பதிவு செய்து கொள்வதற்காக R M. குமாரசாமி, K. M. மருடபதி, K. P. திருவேங்கடம் ஆகியோருடன் தில்லி ரயில் நிலையத்துக்குப் போய்ச் சேர்ந்தேன்.

முதல் வகுப்பு டிக்கட் வாங்கி ரிசர்வ் செய்வதற்கு நான் கானுட் பிலேஸ் என்னுமிடத்திலுள்ள புக்கிங் ஆபீசுக்குப் போக வேண்டுமென்று, எங்கள் வரவேற்பு கமிட்டியார் தெரிவித்தார்கள்.

மற்ற மூவரும் நானும் ஒரு டாக்ஸியில் கானுட் பிலேஸ் என்னுமிடத்துக்குப் போனோம்.

16-8-72 சென்னை செல்லும் G. T. எக்ஸ்பிரஸில் முதல் வகுப்பு டிக்கட் பெற்று பதிவு செய்து கொண்டேன். அதன் கிரயம் 189 ரூபாய். 16ந் தேதி இடம் ரிசர்வ் செய்யப்பட்டுள்ளதாக உறுதி கூறினார்கள்.

டிக்கட்டைப் பெற்றுக்கொண்டு வெளியே வரும்போது இருட்டிவிட்டது. ஒரு பிரமாண்டமான சுதந்திரதின ஊர்வலம் செங்கோட்டை நோக்கிச் சென்று கொண்டிருந்தது.

கண்கவரும் அலங்கார வைபவங்களுடன் தீவட்டிகள் நிறைந்த அந்த ஊர்வலம் மகத்தான காட்சியாக இருந்தது. ஒரு சதுக்கத்தில் சுமார் ஒருமணிநேரம் நின்று அவ்வரிய காட்சியைக் கண்குளிரப் பார்த்துவிட்டு ஒரு டாக்ஸியைப்பிடித்து நாங்கள் நால்வரும் இரவு 9 மணிக்கு குலாபி பாக் போய்ச் சேர்ந்தோம்.

*சுதந்திர தின வைபவங்கள்.*

15ந்தேதி அதிகாலை ஐந்து மணிக்கே நாங்கள் எங்கள் முகாமிலிருந்து கிளம்பிவிட வேண்டுமென்று எங்கள் முகாம் தலைவர் அறிவித்திருந்தார்.

நான் காலை 4 மணிக்கே எழுந்து என் காலைக் கடன்களை முடித்துவிட்டுக் கீழே இறங்கிவந்தேன்.

குமாரசாமி முக்கிமுணகி எழுந்து கீழே வந்து சேர்ந்தார்.

செங்கோட்டையில் எங்களுக்குக் காலை உணவு வழங்குவதற்காக, வெள்ளை வெளேரென்ற அட்டைப் பெட்டிகளில் சிற்றுண்டிகள் வைத்து பாக் செய்துகொண்டிருந்தார்கள்.

அவசர அவசரமாகக் கிடைத்த தேநீரை ஒருமுடக்குக் குடித்துவிட்டு வரிசையாக நின்றிருந்த பஸ்களில் ஏறி உட்கார்ந்தோம்.

சரியாய் 5 மணிக்கெல்லாம் பஸ்கள் எங்கள் முகாமைவிட்டுக்கிளம்பின. தில்லி சிவில் அதிகாரிகள் சிலர் எங்களுடன் வந்தனர்.

நாங்கள் சென்ற பஸ்கள் சரியாய் ஆறு மணிக்குச் செங்கோட்டைக்குள் நுழைந்தன.

அந்த வழியிலே கொடிக்கம்ப மைதானத்துக்குச் செல்லக்கூடாதென்று இராணுவ அதிகாரிகள் நாங்கள் ஏறிவந்த பஸ்களைத் தடுத்து நிறுத்திவிட்டார்கள்.

சிவில் நிர்வாகத்துக்கும், மிலிட்டரி நிர்வாகத்துக்கும் இடையே இருந்த உறவின் லட்சணம் அப்படியிருந்தது!

எல்லோரும் பஸ்களிலிருந்து இறக்கப்பட்டோம்.

கோட்டையைவிட்டு வெளியே வந்து, கோட்டையை வளைத்து, கொடியேற்றுவிழா நடைபெறும் திடலுக்கு எதிர்ப்புறமுள்ள மைதானத்துக்குக் கால் நடையாக அழைத்துச் செல்லப்பட்டோம்.

ஆறுமணிக்குப் புறப்பட்ட எங்கள் ஊர்வலம், நாங்கள் உட்கார வேண்டிய இடம் போய்ச்சேரச் சரியாய் ஏழுமணியாயிற்று.

நடத்துசென்ற பாதை அதிகப்படியாக இருந்தால் ஒருமைல் தூரம்தானிருக்கும். அதைக்கடக்க ஒருமணிநேரம்!

சுதந்திரப் போராட்ட வீரர்கள் என்ற பட்டம் சூட்டப்பட்டதால் நாங்கள் எல்லோரும் நவஜவான்கள் ஆகிவிடமுடியுமா?

செத்தவர்கள் போக எஞ்சியிருந்த எங்களில் பெரும்பாலோர் கிழஞ்சிங்கங்கள். பல்லும் பகடும் போனவர்கள். கண்ணும் காதும் மந்தமானவர்கள். காலும் கையும் ஓய்ந்தவர்கள்.

நீங்கள் பார்த்திருக்கவேண்டுமே அந்த ஊர்வலத்தை!

ஒருவருக்கு இரண்டுபேர்கள் - இரண்டு பக்கமும், கைத்தாங்கல் கொடுத்து நடத்திச் செல்லவேண்டியிருந்தது!

போகப்போக ஒருவர் பொத்தென்று சாய்வார். தரையில் உட்காருவார். மேல் மூச்சு, கீழ்மூச்சு வாங்குவார்.

பல கிழங்கள்-தடிகளை ஊன்றிக்கொண்டு நடந்த நடையைப் பார்க்க காந்தியே உயிரோடு வந்திருக்கவேண்டும். அத்தனை திண்டாட்டம்!

எப்படியோ தட்டுத் தடுமாறி எங்களுக்கு ஒதுக்கப்பட்டிருந்த ஆசனங்களில் போய் அமர்ந்தோம்.

கோட்டையின் மேற்குப்புற மதில் சுவர் எங்களுக்குப் பக்கமாகத்தான் இருந்தது.

கோட்டை மதிலின்மேல் கொடிக்கம்பம் இருந்தது.

விசேஷ அழைப்பாளர்கள் அந்த மேடையில் வீற்றிருந்தார்கள்.

இராணுவ வீரர்கள் அணி அணியாக பாண்டு வாத்தியங்கள் முழங்க எங்களுக்கு வலது புறம் அணிவகுத்து நின்றார்கள்.

சரியாய் 7.19க்குப் பிரதம மந்திரி இந்திராகாந்தி கோட்டை வழியாக கொடிக் கம்பத்தை நாடிவந்தார்.

முப்பத்தோரு மரியாதைக் குண்டுகள் வெடித்துக் காதைத் துளைத்தன.

இனிய கானங்கள் காற்றில் மிதந்து வந்தன.

காலைக் கதிரவன் தன் ஒளியை வீசிக் கொண்டிருந்தான்.

குண்டுகள் வெடித்த சப்தத்தினால் வெருண்ட புறாக்கள் கூட்டங் கூட்டமாய்க் கோட்டையின் மீது பறந்து கொண்டிருந்தன.

திருமதி. இந்திரா காந்தி இந்திய தேசீயக் கொடியை பெருத்த கரகோஷங்களுக்கிடையே ஏற்றிவைத்தார்.

ஹெலிகாப்டர்கள் தாழப் பறந்து பூமாரிகள் பொழிந்தன. அப்பூக்கள் அங்கு வீற்றிருந்த மக்கள் மீது மழையாய்ச் சொரிந்தன.

பலூன்கள் நூற்றுக்கணக்கில் ஆகாயத்தில் பறக்கவிடப்பட்டன. அவை பறந்து சென்ற காட்சி இனிமையாக இருந்தது.

கொடியேற்றி வைத்து இந்திராகாந்தி பேசினார். அதை நீங்கள் பத்திரிகைகளில் படித்திருப்பீர்கள்.

## *செப்பேட்டு விழா*

கொடியேற்றம் முடிந்து மக்கள் கூட்டம் கலைந்து சென்றபின், நாங்கள் உட்கார்ந்திருந்த திடலுக்கு எதிர்ப்புறமிருந்த கோட்டையின் நுழைவாயில் திறக்கப்பட்டது நாங்கள் மிக எளிதாகக் கோட்டைக்குள் நுழைந்து செப்பேடு வழங்கப்பெறும் மண்டபத்தை ஐந்தே நிமிடங்களில் அடைந்தோம்.

சிற்றுண்டிகள் முடிந்தபின் எங்களுக்கு நியமிக்கப்பட்டிருந்த இடங்களில் போய் அமர்ந்தோம்.

சரியாய்ப் பதினொன்றரை மணிக்குப் பிரசிடெண்ட் வந்து சேர்ந்தார். பிரதம மந்திரி இந்திரா காந்தியும் இதர மந்திரிகள் பலரும் சூழ்ந்திருந்தனர்.

வந்தே மாதர கீதத்துடன் விழா ஆரம்பமாயிற்று.

பிரசிடெண்ட் V. V. கிரி விழாவினைத் துவக்கி வைத்து உரையாற்றினார்.

நிதி மந்திரி வெள்ளிவிழா நாணயங்களை வெளியிட்டார்.

போக்குவரவு மந்திரி புதிய தபால்தலைகளின் ஆல்பத்தை வெளியிட்டார்.

பிரதம மந்திரி இந்திரா தமது சொற்பொழிவுக்குப்பின், ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஒரு பிரதிநிதியைக் கூப்பிட்டுச் செப்பேடுகள் வழங்கினார்.

அங்கு கூடியிருந்த சுதந்திரப் போராட்ட வீரர்கள் அனைவருக்கும் செப்பேடுகள் அவரவர் வீற்றிருந்த இடத்தில் கொடுக்கப்பட்டது.

செப்பேடுகளில் ஹிந்தி மொழியில் பொறிக்கப்பட்டிருந்தன.

தமிழ்நாட்டு வீரர்களுக்கு வழங்கப்பட்ட செப்பேட்டுடன், அதில் பொறிக்கப்பட்டிருந்த வாசகத்திற்குத் தமிழில் அச்சிட்ட தாளொன்றும் தரப்பட்டது.

பாரதவிடுதலையின் 25ஆண்டு நிறைவை ஒட்டி, விடுதலைப் போராட்டத்தில் ஆற்றிய பங்கு பணியின் நினைவாக, பிரதம மந்திரி இந்திராகாந்தி, நாட்டின் சார்பில்இந்த தாமிர பத்திரத்தை வழங்குகிறார்.

என்பதே அந்தத் தமிழ் வாசகம்.

தாமிர பத்திரம் வழங்கும் விழாவின் போது இடையிடையே, அகில இந்திய ரேடியோவின் இசைக் குழுவைச் சேர்ந்த மெல்லியர் பலர், இனிமையான கீதங்களைப் பொழிந்தது அருமையாக இருந்தது. அக்குழுவினில் சுப்ரமணிய பாரதியாரின் பேத்தியும் இருப்பதாகக்கேட்டு இன்புற்றோம்.

வந்தேமாதரம்: பங்கிம் சந்திர சாட்டர்ஜியெனும் வங்கக்கவிவாணர் இயற்றிய வந்தேமாதர கீதம் முதலில் ஒலிக்கப்பட்டது.

சர்ஃபாரோஷி–கி–தமன்னு: எனும் வீரஞ்செறிந்த கீதம் அடுத்தபடியாகப் பாடப்பட்டது. காகோரி சதிவழக்கில் தூக்கு தண்டனைக்கு ஆளான ராம்பிரசாத்பிஸ்மல் என்பவரால் இயற்றப்பட்ட இக்கீதம், நாட்டின் பொருட்டுத் தன் நல்லுயிரை இழக்கத்துடித்த ஒருவீரன், தன்னை எதிர்த்த கொடுங்கோன்மையையாளர்களுக்கு விடுத்த சவால் ஆகும்.

ஜண்டா ஊஞ்சா ராஹேஹமாரா : என்பது அடுத்துப் பாடப்பட்ட பாட்டு.

சுதந்திரப் போராட்ட காலத்தில் இப்பாட்டு இமயம்முதல் குமரிவரை நாடெங்கும் நடைபெற்ற பொதுக் கூட்டங்களில் பாடப்பட்டதொன்றாகும்.

இப்பாட்டு பாடப்படுகையில் அதனை இயற்றிய தொண்டுக் கிழவனர் ஸ்ரீ சையாம்லால் குப்தா "பார்ஷாத்" அங்கு பிரசன்னமாகவிருந்தார்.

அடுத்துப்பாடிய பாட்டு நமது தேசீய மகாகவி சுப்ரமணிய பாரதியார் இயற்றிய பாரத சமுதாயம் வாழ்கவே எனும் வீரஞ்செறிந்த பாட்டாகும்.

பிரிட்டிஷ் அரசாங்கம் அக்காலத்தில் இப்பாட்டின் மீது தடைவிதித்திருந்தது.

எனினும் சுதந்திரப் போராட்டக் கூட்டங்களில் இப்பாட்டைச் சுதந்திர வீரர்கள் பாடத் தவறியதில்லை.

இனியொரு விதிசெய்வோம்–அதை
எந்த நாளும் காப்போம்
தனியொருவனுக் குணவில்லையெனில்
சகத்தினை அழித்திடுவோம்

என்ற வீரம் மிகுந்த வரிகள் கொண்ட இப்பாட்டை அன்று 15.8.72 தில்லியில் சுப்ரமணிய பாரதியாரின் பேத்தியும் சேர்ந்து பாடியது நமக்குப் பெருமை தருவதாகும்.

கூன்ஜே ஜயத்வனி செ ஆஸ்மான் என்பது மற்றொரு பாட்டு அன்று பாடப்பட்டது. இப்பாட்டை ஹிந்தி மொழியில் இயற்றியவர் மகாகவி சுமித்ரனந்தன் பந்த் என்பவர். உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்து மக்கள் நேர்மையும் நீதியும் தவருது வாழும் எதிர்காலச் சிறப்பினை இப்பாடல் வர்ணிக்கின்றதாகும்.

சாரே ஜஹாங்சே அச்சா. எனும்பாட்டு முகமது இக்பால் எனும் உருது மொழிக் கவிஞரால் இயற்றப்பட்டதாகும்.

எந்த நாட்டினும் ஏற்ற மிக்கது எங்கள் இந்தியா! இமய எல்லையும், இனிய கங்கையும், எழிலும் செல்வமும் மிக்கதிந்தியா! சர்வ மதத்தினரும், சண்டை தவிர்த்து நல் சால்புடன் வாழும் இந்தியா! எனக் கூறும் இந்த இக்பாலின் பாட்டு வந்தே மாதர கீதத்தைப் போன்று இந்தியாவில் பிரசித்தி பெற்றதாகும்.

பாட்டுகளனைத்தும் பாடி முடிந்ததும் உள்துறை மந்திரி K. C. Pant வந்தனோபசாரம் கூறினர், ஜனகன மனவெனும் தேசீய கீதம் முழங்க, எல்லோரும் எழுந்து நின்று தாய்நாட்டை வணங்கியபின் கூட்டம் இனிது கலைந்தது.

எங்கள் பஸ்களில் மீண்டும் ஏறி முகாமை அடைந்து, உணவருந்தி, ஓய்வெடுத்துக் கொண்டோம்.

*ராஷ்டிரபதி அளித்த வரவேற்பு*

சுதந்திர தினவிழா பிறகு ஆண்டு தோறும் தில்லியிலுள்ள பிரமுகர்கள், சிவில் ராணுவ அதிகாரிகளின் குடும்பங்கள், ஆகியோரை அழைப்பது நடைமுறையில் உள்ள ஒரு வழக்கம்.

இவ்வாண்டு, வெள்ளிவிழாவில் கலந்து கொள்ள தில்லி சென்றிருந்த சுதந்திரப் போராட்ட வீரர்களும் அழைக்கப்பட்டிருந்தனர்.

மாலை ஐந்து மணிக்கு எங்கள் முகாமிலிருந்து புறப்பட்ட பஸ்களில் ஏறிச் சரியாய் ஆறுமணிக்கு ராஷ்ட்ரபதி பவனத்தின் வெளிவாயிலில் இறங்கி, உள்ளே நுழைந்து மொகல் கார்டனை அடைந்தோம்.

அது ஒரு திறந்த புல்வெளி. சுற்றிலும் அழகான பூஞ்செடிகள்.

நுழைவாயிலின் முன்னுள் பனிரண்டு வீரர்கள், கைகளில் நீண்ட வேலுடன், குதிரைகளின் மீது ஆரோகணித்துச் சிலைகள் போல் நின்றிருந்தனர்.

முகர்கார்டனின் உட்புறமும் இப்படிப் பல உயிருள்ள சிப்பாய்ச் சிலைகள் நின்றிருக்கக் கண்டோம்.

நுழைவாயினுள் நின்றிருந்த பணியாள் ஒருவன் எங்கள் கையிலிருந்த பைகளை எல்லாம் வாங்கி, நம்பரிட்டு, வைத்துக்கொண்டான். பைகளை அவன் தொட்டுத்தொட்டுப் பார்த்தான். ஏன் என்று கேட்டேன். பையினுள் கைத்துப்பாக்கிகள், வெடி குண்டுகள். இருக்கிறதாவென்று தொட்டுப்பார்த்தேன் என்ருன்.

எனது பையைத் திறத்து காட்டினேன். அதில் பணமும், காகிதமும், பேனுவும் இருக்கக்கண்டு, கையில் கொண்டு சொல்ல அனுமதித்தான்.

ராஷ்ட்ரபதி பவனம் மிகப் பெரிய மாளிகை. அதன் உள்ளே சென்று நாங்கள் பார்க்கவில்லை. தில்லியிலுள்ள கல்லூரிகள், கல்வி நிலையங்கள், மருத்துவ நிலையங்கள் அத்தனைக்கும் அதனுள்ளே இடமிருக்கும்.

அதனை அடித்துக்கூட்டிச் சுத்தம்செய்ய மட்டும் தினம் ஆயிரம்ரூபாய் செலவாகும்!

அதனுள் இருக்கும் சிப்பந்திகள், அதிகாரிகள், காவலாளிகள் ஆகியோர் ஒரு பெரிய தேசத்தைப் பார்க்கப் போதுமானவர்கள்.

கரீபி - வறுமையின் காற்று அங்கு நுழையுமா? நுழைய முடியுமா? கரீபி ஹட்டோ என்று அதனுள் இருப்பவர்கள் சொல்லத் தான் வேண்டுமா?

மொகல்கார்டனின் ஒரு மூலையில் நீளமான மேஜைகள் போடப்பட்டு, அவற்றின் மீது சிற்றுண்டிகளும், பானங்களும், அவற்றை எடுத்து உண்ணத் தட்டுகளும், பருகக் கோப்பைகளும் வைக்கப்பட்டிருந்தன. மேஜைகளின பக்கத்தில் விநோதமான உடையுடுத்திய வேலையாட்கள் நின்றிருந்தனர்.

சரியாய் ஆறேகால்மணிக்கு ராஷ்ட்ரபதி வருகிருரென்று முரசொலித்தது. சங்கு முழங்கிற்று.

ராஷ்ட்ரபதியும், அவர்மனைவியும் பரந்த வெளியின் நடுவே அமைக்கப்பட்டிருந்த, சிங்காரப் பந்தலில் வந்தமர்ந்தார்கள். பொதுமக்கள் அவர்களைச் சேவித்துக் கொண்டே வலம் வந்தார்கள்!

எல்லாம் நாடக பாணியில் நடைபெற்றன.

மேஜைகள்மீது வைக்கப்பட்டிருந்த சிற்றுண்டிகளை வந்தவர்கள் எடுத்துண்டார்கள்.

நான் நின்றிருந்த மூலைக்குத் தமிழ் மந்திரிகள் சி. சுப்ரமண்யம், மோகன் குமாரமங்கலம், கெ. எஸ். ராமசாமி ஆகிய மூவரும் வந்தனர். புன்முறுவலால் ஒருவரையொருவர் உபசரித்துக்கொண்டோம்.

ரயில்வே உதவி மந்திரியொருவர் - காஷ்மீரத்தவர் – அக்கூட்டத்தில் எனக்கு அறிமுகம் செய்துவைக்கப்பட்டார். 16ந் தேதி பிரயாணத்துக்கு நான் முதல்வகுப்பு டிக்கட் பெற்றுள்ளதாகவும், ரிசர்வேஷன் கிடைக்குமா கிடைக்காதாவென்று ஐயுறுவதாகவும் நான் அவரிடம் தெரிவித்தேன். அப்பர் பர்த்தின்மீது ஏற ஏணி இல்லாத குறையினையும் கூறினேன். நாளுச்சு, ஜமாய்த்துவிடுகிறேன் என்ருர். போன்மூலம் தன்னை ஞாபகப்படுத்தும்படியும் சொன்னுர்.

சுதந்திரத் திருநாளின் வெள்ளிவிழாவை இவ்வாறு கழித்துவிட்டு, அன்றிரவைக்கழிக்க

எங்கள் முகாமிற்குத் திரும்பிச் சென்று உறங்கினேம்.

*அடுத்தநாள்.*

அடுத்தநாள் 16ந்தேதி விடிந்தது.

பிரதம மந்திரி இந்திரா காந்தி அளிக்கும் காலே விருந்திற்குச்செல்ல எல்லோரும் ஆயத்மாகிக்கொண்டிருந்தனர்.

என்மனத்துள் ஒருஎண்ணம் கிளர்ந்தது.

நம்மைப்பார்க்க, நம்மை வரவேற்க, நமக்கு முகமன் கூற நாமிருக்கும் முகாமிற்கு எவரும் வரவில்லை.

நாம் ஏன் பஞ்சைப் பரதேசிகள் போல அவர்கள் வீடுதேடிச்சென்று விருந்துண்ண வேண்டும்? அதில் என்ன சிலாக்யம் என்று என்மனம் எண்ணலாயிற்று.

பண்டரிபுரத்துக்குச் சென்ற பக்தகோடிகள் போல் திறந்த மைதானத்தில் அடுப்புக் கூட்டிச் சமைக்கப்படும உணவைத் தின்றுவிட்டுக் கட்டாந்தரையில் படுத்துக் கிடக்கிறேம்.

வெள்ளேயனே விரட்டி, இந்தியாவுக்குச் சுதந்திரம் தேடித்தர எண்ணற்ற சாகஸங்கள் புரிந்த வீரர்களுக்கு அளிக்கப்படும் வரவேற்பா இது என்று என்மனம் என்னைக் கேள்வி கேட்டது.

ராஷ்டிரபதி கிரி நமது சேவகன்தானே! பிரதமமந்திரி இந்திராவும் நமது சேவகிதானே! பார்லிமெண்ட் அங்கத்தினர்களும் அமைச்சர்களும் நமது சகாக்கள் தானே! எவரும் நம்மை வந்து பார்க்கவில்லேயே, நாமேன் அவர்கள் அளிக்கும் பிச்சைசோற்றுக்கு ஓடியோடி அலேய வேண்டும் என்று என்மனம் என்னுடன் தர்க்கமாடியது.

வேண்டாமென்ற முடிவுடன், என் பெட்டி படுக்கையுடன் நேரே தில்லி ரயிலடிக்கே புறப்பட்டுவிட்டேன்.

இந்திரா காந்தி அளித்த விருந்துக்குச் சென்று வந்தவர்கள், விருந்தும், உபசரிப்பும், இதர ஏற்பாடுகளும் மிக அருமையாக இருந்ததென்றும், ஒவ்வொரு மாநிலத்தவரையும் அம்மையார் தனியிடத்தமர்த்தித் தாமும் அவர்களுடன் நின்று புகைப்படங்கள் எடுத்துக்கொண்டதாவும், மிக்க பரவசத்துடன் என்னிடம் கூறி மகிழ்ந்தார்கள்.

நீங்கள் அங்கு வராதது ஒரு குறையென்று கூறினர் குமாரசாமி.

16ந் தேதி பிராணத்திற்கு நான் வாங்கியிருந்த முதல் வகுப்பு டிக்கட்டுக்கு ரிசர்வேஷன் கிடைக்கவில்லை. 17ந் தேதிதான் கிடைக்குமென்று கூறிவிட்டார்கள்.

ரயில்வே உதவி மந்திரிக்குப் பிளாட்பாரத்திலிருந்து டெலிபோன் செய்து தொடர்பு கொண்டேன். அவர் பிளாட்பாரம் சூப்ரின்டெண்ட் மிஸ்டர் பத்ரியைப் பார்க்குமாறு சொல்லிவிட்டார்.

பத்ரி அநுதாபப்பட்டார். ஆனல் அவரால் ஒன்றுஞ் செய்ய முடியவில்லை.

எனது முதல் வகுப்பு டிக்கட்டைத் திருப்பிக் கொடுத்துவிட்டு,A.C.சேர் டிக்கெட் ஒன்று வாங்கினேன்,

ரயில் புறப்படுந் தருவாயில் சாலேயும் சாலினியும் சிரித்துக்கொண்டு ரயிலடிக்கு வந்தார்கள். எனது தந்தி கிடைக்கவில்லையென்றும், முகாமிலிருந்து நான் எழுதின கார்டு கிடைத்ததென்றும் அவர்கள் தெரிவித்தார்கள். கடைசி நிமிஷத்திலாவது அவர்களேப் பார்க்க முடிந்ததென்ற மகிழ்ச்சி உண்டாயிற்று.

முதல் வகுப்பு ரிசர்வேஷன் நாளே தருவதாகச் சொல்கிருர்கள், நீங்கள் ஒரு நாளே எங்களுடன் கழித்துவிட்டுப் போனுலென்ன வென்று சாலினி வாதாடினுள்.

எனக்கு இங்கே வியர்த்துக் கொட்டுகிறது. இதுவென்ன ஒரு ஊரா? இங்கு எப்படித்தான் இருக்கிருர்களோ. ஒரு நாளேக்கு ஆயிரம் ரூபாய் கிடைப்பதானுலும் நான் இங்கு தங்கமாட்டேன் என்று சொன்னேன்.

அவர்கள், என்னே ரயிலிலேற்றி, ரயில் புறப்படும் வரை காத்திருந்து விடைபெற்றுச் சென்ருர்கள்.

அமெரிக்காவில் தூக்கு தண்டனே பெற்றவனே நாற்காலியில் உட்கார வைத்து, மின்சாரத்தைச் செலுத்திக் கொல்வார்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். மூன்ரும் வகுப்பு ஏர் கண்டிஷன் நாற்காலியில் உட்

கார்ந்தவுடனே, அந்த நினைவுதான் எனக்கு வந்தது.

ஒரு புறம் ஒரு வரிசைக்கு மூன்று நாற்காலிகள். மறுபுறம் ஒரு வரிசைக்கு இரண்டு நாற்காலிகள். இரு புறத்துக்குமிடையே நடைபாதை!

நடை பாதையின் அகலம் ஒரு முழம். ஒரு நாற்காலிக்கும், அதன் எதிர் நாற்காலிக்கும் இடைவெளி ஒரு முழம். இப்படியாக ஒரு பெட்டியில் போடப்பட்டிருந்த நாற்காலிகளின் எண்ணிக்கை எண்பது.

பெட்டிக்கு உள்ளே இருக்கும் காற்றும் வெளியே செல்லாது. வெளியே இருக்கும் காற்று பெட்டிக்குள் நுழையாது. இதுதான் Air Conditioned Coach என்பது!

ஆஸ்துமா பீடித்துள்ள எனக்கு இதை விடப் பெரிய பிராண அவஸ்தை வேறெதுவும் இருக்கமுடியாது. இரண்டு இரவுகளை இப்பெட்டியில் எப்படிக் கழிப்பதென்று எண்ணவே பயமாக இருந்தது.

ஒருநாள் அரை நாள் பிரயாணமென்றால் எப்படியோ கழித்துவிடலாம். ஆனால் தொடர்ச்சியாக 52 மணிநேரத்தை இதில் எப்படிக் கழிப்பது.

புலியைப்பார்த்து நரி தன்னுடலில் சூடுகள் போட்டுக்கொண்டமாதிரி, எவனோ மடையன் ஏரோப்பிளானைப் பார்த்து, இப்படியொரு ரயில் பெட்டியை நிர்மாணித்துவிட்டான்!

இரவு வந்ததும் சிலபேர்கள் ஒருமுழ இடைவெளியில் படுத்துறங்கினார்கள்-நானும் படுத்துப்பார்த்தேன்.

பாலங்களின் மீதும், நிற்காது செல்லும் ரயில் நிலையங்களைக் கடக்கும்போதும் ஏற்பட்ட சத்தம், ஏதோ பூகம்பம் ஏற்பட்டுவிட்டாப்போல் ஒரு அதிர்ச்சியை உண்டாக்கிற்று.

எழுந்து உட்கார்ந்து கொண்டேன்.

இரும்பு உரல் உலக்கையில் திருப்பதி ரெட்டியார் வெற்றிலை பாக்கு இடித்துக் கொண்டிருந்தார். இடித்ததை எடுத்து வாயில் போட்டுக்கொண்டு கம் என்றிருந்தார்.

அவரிடம் ஏதோ குறும்புத்தனமாகப் பேசினேன். அவருடைய இருகன்னங்களும் கொஞ்சம் BLOAT ஆவதுபோல் தெரிந்தது.

அவர் சிரித்துவிடப் போகிறார். ஜாக்கிரதை! உங்கள் சட்டையெல்லாம் அபிஷேகம் ஆகிவிடும் என்று என்னை எச்சரித்தார் தேவகோட்டை அருணாசலம்.

அப்படித்தான் ஆகும்போலிருந்தது. பாவம் திருப்பதி ரெட்டியார், எழுந்து, நடைபாதையில் படுத்திருந்தவர்களை மெல்லத் தாண்டி, பாத்ரூமில் நுழைந்து தம்பலத்தைத் துப்பிவிட்டுவந்தார்.

பாவம்! அவருக்கு எத்தனை வேதனையும், நஷ்டத்தையும் நான் கொடுத்துவிட்டேன்.

என் பக்கத்தில் மகுடபதியும், திருவேங்கடமும் இருந்தார்கள்.

மதுரை டி. கே. ராமா சற்று தூரத்தில் இருந்தார். நாச்சியார் கோவில் சுப்பையா பிள்ளையும், மற்றும் சில சுதந்திரப் போர் வீரர்களும் படுத்திருந்தார்கள்.

எனக்கும் சிறு நீர் கழிக்கும் வேதனை உண்டாயிற்று. எத்தனை HIGH JUMP, எத்தனை LONG JUMP, பாத்ரூம் போவதற்குள்! எப்படியோ சமாளித்தேன்.

வழியில் ஒரு சினிமாக் காட்சி! ஒரு ஹிப்பியும் ஹிப்பிச்சியும் உட்கார்ந்திருந்தார்கள்.

ஹிப்பிப்பெண்ணின் மார்மீது ஹிப்பி, மனிதன் தன் தலையை வைத்து சாய்ந்திருந்தான்.

அவளும் அவனைக் கெட்டியாக அணைத்துப் பிடித்திருந்தாள்!

ரதியும் மதனும் அப்படித்தான் சயனித்திருப்பார்களோ?

ராதையும் கண்ணனும் அப்படித்தான் துயின்றிருப்பார்களோ என்று எண்ணிக் கொண்டே என் நாற்காலியில் அமர்ந்தேன்.

எப்படியோ இரண்டு இரவுகளையும் ஒரு பகலையும் அந்த ரயில் பெட்டியில் போக்கி விட்டுப் பதினெட்டாம் தேதி பகல் பதினொரு மணிக்குச் சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனில் இறங்கினேன்.

*சென்னையில்*

சென்னையில் ரயிலைவிட்டு இறங்கியதும் தன்னந்தனியே ஒரு டாக்ஸியிலேறி ஓட்டல் தேடிச் சென்றேன்.

ஸ்வாகத்தில் இடமில்லை.

வுட்லண்ட்ஸ் அதே கதி

தாசபிரகாஸ் டிட்டோ

பெரம்பூர், படேல் ரோடில் இருக்கும் எனது பழைய நண்பன் T.V. சிவக்கொழுந்து வீட்டிற்குச் சென்றேன். டாக்ஸிக்குப் பத்து ரூபாய் ஆகிவிட்டது!

அன்றிரவு பெரம்பூரில் போக்கிவிட்டு அடுத்தநாள் காலை ஔவை நடராஜன் வந்து அழைத்துச் செல்ல சக்தி சுகர்ஸ் விருந்தினர் அறையில் தங்கினேன்

19ந் தேதி மாலை 3-50மணிக்கு சென்னை ராஜ் பவனத்தில் கவர்னர் தேநீர் விருந்து அளிப்பதாகத் தில்லியில் இருக்கும்போதே அழைப்பு வந்திருந்தபடியால் கிண்டிக்குச் சென்றேன். அங்கு சென்ற பின்னர்தான் அவ்விருந்து அடுத்த நாளைக்கு ஒத்திவைத்திருப்பதாகத் தெரியவந்தது.

அன்றிரவு சென்னை ராஜாஜி ஹாலில் தாமிர பத்திரம் பெற்றுவந்தவர்களுக்கு சென்னை முதல்வர் கருணாநிதி அவர்கள் விருந்தளிப்பதாகத் தகவல் வந்தது.

மாலை ஆறுமணிக்கெல்லாம் எனது இரவு போஜனம் முடிந்துவிட்டதால் விருந்துக்குச் செல்வானேன் என்றிருந்தேன். ஔவை நடராஜன் வற்புறுத்தியதால் அங்கு சென்றேன்.

எல்லோரும் விருந்துண்டார்கள். கவர்னர் K. K. ஷா அவர்களும், அமைச்சர்கள் அனைவரும் விருந்தினர்களை நேரிற்கண்டு மகிழ்ந்தனர்.

விருந்துக்குப்பின் கவர்னர் அவர்களும், முதல்வரும் பரிவுரை ஆற்றினார்கள். தாமிர பட்டதாரிகள் ஒவ்வொருவரையும் பெயர் சொல்லிக் கூப்பிட்டு கவர்னர் மலர்மாலை சூட்டினார்.

மறுநாள் சென்னை வானதி பதிப்பகம் திருநாவுக்கரசு அவர்கள், அவர் வெளியிட்டிருந்த அண்ணல் காந்தி மலரஞ்சலியெனும் அழகிய புத்தகமொன்றை அன்பளிப்பாகக் கொணர்ந்து கொடுத்தார்.

அவரால் அச்சிட்டு வெளியிடப்படவிருக்கும் எனது புத்தகத்தைப் பற்றி விபரங்கள் கூறிவிட்டு, அன்றிரவு கொச்சின் மெயிலில் ஏறினேன்.

முதல்வகுப்புப் பிரயாண டிக்கட் வாங்கி, லோயர் பர்த் ரிசர்வ் செய்து, அன்பர் சிவக்கொழுந்து பிளாட்பாரத்தில் காத்திருந்தார்.

அவரிடமும், வழியனுப்ப வந்திருந்த ஔவை நடராஜனிடமும் விடைபெற்றபின் கொச்சின் எக்ஸ்பிரஸ் விசிலடித்துக் கொண்டு நகர்ந்தது.

20ந் தேதி காலை-கோவையில் இறங்கி-எனது பேரனொருவன் கோபு கொணர்ந்த காரில் ஏறிப் பகல் பனிரெண்டுமணிக்குக் கிணத்துக்கடவில் உள்ள எனது காந்தி பண்ணையை அடைந்து என் வருகையை ஆவலுடன் எதிர்பார்த்திருந்த என் பிரிய மனையாளைப் பார்த்தேன்.

நான் இக்கட்டுரையை முடிக்குந் தருவாயில் ஆர். எம். குமாரசாமியிடமிருந்து வந்த கடிதத்தை உங்களுடன் பகிர்ந்து கொள்ள ஆசைப்படுகிறேன்.

ரங்கசமுத்திரம்
30—8—72

அன்புடையீர்,

வணக்கம்.

சென்னையில் ஆளுக்கொரு பக்கமாய்த் தங்கியதால் புறப்படும் போது உத்திரவு பெற்றுக்கொள்ள முடியவில்லை.

20-ந் தேதி மாலை ராஜ்பவனில் கவர்னர் அளித்த டீ பார்ட்டி நன்கு அமைந்திருந்தது.

எல்லா மொழிகளிலும் தேசீயப் பாடல்கள் பாடினார்கள்..........Prof Sher Singh என்ற மந்திரியும் வந்திருந்தார். அவருக்காக ஒரு பஞ்சாபி பாட்டும் பாடினார்கள்.

விடுதலை வீரர்கள் சார்பில் நான் கவர்னருக்கு வந்தனம் கூறினேன்.

25 ஆண்டுகளுக்கு முன்பே இந்த விழா நடந்திருக்கவேண்டும். காலந்தாழ்ந்து இன்றுநடந்த போழ்திலும், அறுபதைக் கடந்த என் போன்றவர்களுக்கு வாலிப உணர்ச்சி தோன்றுகிறது.

எனினும் எங்கள் உளங்களிலே ஒரு ஏக்கம்.

வறுமையிலும் அறியாமையிலும் வாடித் தவிக்கும் மக்கள் முன்னேறவேண்டும் என்பதற்காகவே மகாத்மாகாந்தி அன்று அந்நிய அரசுடன் போராடினார்.

மக்கள் நல்வாழ்வு பெறவே சுதந்திரம் வேண்டுமென அவர்கூறினார்.

சுதந்திரம் பெற்று கால் நூற்றாண்டு கடந்தும், ஏழ்மையும், அறியாமையும், வறுமையும், நாட்டைவிட்டு அகலவில்லை.

சுதந்திரப் போரில் ஈடுபட்டுச் செத்தவர் போக, எஞ்சியிருக்கும் சிலராகிய நாங்கள் கண்மூடும் முன்பாவது, காந்தியடிகள் விழைந்த கிராம ராஜ்யம் மலராதா-என்று எங்கள் மனம் ஏங்கித் தவிக்கின்றது என்று என் பேச்சினிடையே கூறினேன்.

அக்காளுக்கு என் வணக்கம்

அன்பன்

ஆர். எம். குமாரசாமி

# சக்திக் கூத்து

— ந. சிதம்பரசுப்ரமண்யன்

கிரேக்க விஞ்ஞானி ஆர்கிமெடிஸ் குளிப்பதற்காகத் தொட்டியில் இறங்கினர். தொட்டி நிரம்ப ஜலம் இருந்ததால், ஜலம் தொட்டியிலிருந்து வழிந்தது. உடனே அவருக்கு 'சுருக்கென்று' யோசனை தோன்றிற்று. அரை நிர்வாணமாக இருந்த நிலையிலேயே "யூரேகா" நான் கண்டுபிடித்து விட்டேன்) என்று தெருவிலேயே கதறிக் கொண்டு வீட்டை நோக்கி ஓடினராம்.

அவர் கண்டுபிடித்த ரகசியம் இதுதான். கிரேகஸ் அரசனுன இரண்டாம் ஹீரோ என்ற மன்னன் பொற்கொல்லனிடம் ஒரு மகுடம் செய்யக் கொடுத்திருந்தான். மகுடத்தைப் பார்த்ததும், அதில் கலப்படம் செய்திருப்பானே என்ற சந்தேகம் உண்டாயிற்று. சிறந்த அறிவாளியும் விஞ்ஞானியுமான ஆர்கிமெடிஸிடம் அதை அனுப்பி, அதில் வேறு உலோகம் கலந்திருக்கிறதா என்று பார்க்கச் செய்தான். அதை எப்படிக் கண்டுபிடிப்பது? உருக்கித் தங்கப்பாளமாகச் செய்து பார்த்தால் மகுடம் இருக்காது. அதைப்பற்றி யோசித்துக் கொண்டே தான் குளிக்கச் சென்றிருந்தார். தான் தொட்டியில் விழுந்ததும் அதிலிருந்த ஜலம் வெளியானதும் அவருக்குப் பெரிய உண்மை உதயமாயிற்று. ஒரு பொருளை வெளியே நிறுத்து எடை போட்டால் ஒரு எடை வருகிறது. அதையே ஒருதிரவபதார்த்தத்தில் நிறுத்தால் அதன் எடை குறைகிறது. எவ்வளவு குறைகிறதென்ருல், போடப்பட்ட பொருளின் நிறைக்குச் சமமான திரவபதார்த்தத்தின் எடை என்னவோ அவ்வளவு குறைகிறது. இது தான் ஆர்கிமெடிஸ் சித்தாந்தம் என்பது. இதை வைத்து அவர் தங்கத்தின் எடை எவ்வளவு இருக்கவேண்டுமென்று கண்டுபிடித்தார். வித்தியாசத்திலிருந்து அது கலப்படம் என்பதைக் கண்டுபிடித்தார்.

பொருள், அதன் நிறைவு, அதன் கனம், அதன் எடை இவைகள் எல்லாம் விஞ்ஞானத்திற்கு மிகவும் அடிப்படையான விஷயங்கள். ஆதிகாலத்தில், நாம் பஞ்சபூதங்கள் என்று சொல்வதில், ஆகாசத்தைத் தவிர மற்ற நான்கையும் தனிப் பொருளாகத்தான் கருதினர்கள். பின்னர் விஞ்ஞானம் வளர வளர, தனிப் பொருள் என்று சொல்லப்படுவதெல்லாம் பல பொருள்களின் சேர்க்கை என்பதைக் கண்டு கொண்டார்கள். பிரித்துக் கொண்டே போனல், இனிமேலும் அதை உடைக்கவோ, பிரிக்கவோ முடியாது என்று தனித்தியங்கும் பொருள்களை தனிப்பொருள்கள் (elements) என்று சொல்லப்படுகின்றன. இந்தப் பொருள்களின் தனித்தன்மை அவைகளில் காணப்படும் அணுக்களின் எண்ணிக்கைகளால் இப்பொழுது நிர்ணயிக்கப்பட்டு வருகிறது. இப்பொழுது சுமார் 99 தனிப் பொருள்கள் இருப்பதாக நிர்ணயிக்கப் பட்டிருக்கின்றன.

இந்த அணு என்பது பொருள்களின் கடைசி எல்லையென்றும், அதைப் பிரிக்க முடியாது என்றும் வெகுகாலமாக எண்ணப் பட்டு வந்தது. ஆனல் சமீப காலங்களில் விஞ்ஞானிகளின் முயற்சிகளால் அணு பிளக்கப்பட்டது.

ஆத்மானுபவத்தில் அணுவிற்குள்ளே அணுவாகவும், அண்டத்திற்கு மேல் பேரண்டமாகவும் பரந்து நிற்கும் பரம்பொருளின் உண்மைத் தத்துவத்தைக் கண்ட திருமூலர் அணுவைப் பிளந்துகொண்டே போனலும், அதுவும் ஒரு விதத்தில் உண்மைப் பொருளைக் கண்டுபிடிக்க உதவும் என்று சொல்கிறர்.

அணுவில் அணுவினை ஆதிப்பிரானை
அணுவில் அணுவை ஆயிரம் கூறிட்டு
அணுவில் அணுவை அணுக வல்லார்க்கு
அணுவில் அணுவை அணுகலும் ஆமே.

அணுவில் அவனும் அவனில் அணுவும்
கணுவற நின்ற கலப்பது உணரார்
இணையிலி ஈசன் அவன் எங்கு மாகித்
தண வற நின்றான் சராசரம் தானே.

அணுவைப் பிளந்த நவீன விஞ்ஞானிகள், என்ன கண்டார்கள்? பூமி எப்படிச் சூரியனைச் சுற்றி வருகிறதோ அதே போல் ஒரு மூலவஸ்துவை அந்த வஸ்துவின் லக்ஷ அளவு பெரிய சுற்றளவின் மற்றதொன்று வேகமாகச் சுற்றி வருவதைக் கண்டார்கள். பிரபஞ்சத்தின் சாரத்தையே அணு அடக்கிக் கொண்டிருக்கிறது போலும். இந்த அணுவைப் பிளந்ததில் அவர்கள் அங்கு கண்டது மூலப்பொருள்கள் அல்ல. பொருள்களின் அணுவைப் பிளந்ததில் சக்தியைக் கண்டார்கள். அதாவது மூன்றுவிதமான சக்திகளின் கலவையே அணு என்பது புலனாயிற்று. அதாவது நமது முன்னோர்கள் மூன்று குணங்கள் என்று சொன்னார்களே அவைகளே தாம் அதாவது சத்வம் (Proton) தாமஸம் (Nentron) ராஜஸம் (Electron) விஞ்ஞானிகளின் மொழியிலே புரோடான் என்பது பாஸிடிவ் (Possitive) எலக்ட்ரான் (Negative) நெகடிவ். நியூட்ரான் என்பது (Neutral) நியூட்ரல். இவைகளிலேயே ப்ரோடானும் நியூட்ரானும் சேர்ந்து மூலப்பொருளாக இருக்கின்றன. எலக்ட்ரான் மாத்திரம் தனியாக இருந்து கொண்டு அந்த மூலப் பொருளைச் சுற்றிச் சுற்றி வந்துகொண்டிருக்கிறது.

மற்றொரு நியதியையும் கண்டார்கள். அதாவது ஒரு தனிப்பொருளில் எவ்வளவு ப்ரோடான் இருக்கிறதோ அந்த அளவுக்கு ந்யூட்ரானும் எலக்ட்ரானும் இருக்கின்றன. தனிப்பொருளில் மிகவும் மெலிந்ததான நீர் வாயுவிலே ஒரு ப்ரோடான், ஒரு எலக்ட்ரான், ஒரு ந்யூட்ரான் இருக்கின்றன. இதற்கு அடுத்தபடியான ஹீலியம் என்ற தனிப் பொருளிலே 2 ப்ரோடான், 2 எலக்ட்ரான், 2 ந்யூட்ரான்கள் இருக்கின்றன. கனமான ஜட வாயுவின் நைட்ரோஜனில் எவ்வேழாக இருக்கின்றன. இதில் விஷேசம் என்னவென்றால் இந்தச் சக்திகளின் எண்ணிக்கையில் மாறுதல் இல்லை. ஒரே கணக்காகத்தான் இருக்கின்றன.

இந்த அணுவைப் பற்றிய அறிவு வந்ததும் பல பழைய விஞ்ஞானக் கொள்கைகள்

தகர்த்தெறியப்பட்டன. இப்படித் தகர்த்த விஞ்ஞானிகளில் தலைசிறந்து விளங்குபவர் ஐன்ஸ்டீன்-பொதுவாக, பொருள்கள். அவற்றின் இயக்கம், வேகம், சக்தி என்பவற்றையெல்லாம் மறுக்க முடியாத சில விதிகளை ஏற்படுத்தியிருந்தார் ஐஸக் நியூடன்.

முதலாவது விதியில், ஒரு பொருள் அசைவற்ற நிலையில் இருக்குமானால் அது அசைக்கப்படும் வரையில் அப்படியேதான் இருக்கும். அது போலவே இயங்கும் ஒரு பொருள், அதில் மாறுதல் உண்டு பண்ணும் வரையில் அப்படியே போய்க்கொண்டுதான் இருக்கும். அதாவது காரில் நாம் போகும் பொழுது திடீரென்று கார் நிறுத்தப்பட்டால் நம் உடல் முந்திய ஆசனத்தில் இருக்கிறதல்லவா அதுபோல.

இரண்டாவது விதி, நிலையின் மாறுதல் எந்த அளவில் இருக்கிறதோ அதைப் பொருத்தே, மாற்றும் சக்தியும் இருக்கும். அதாவது 50 மைல் வேகத்தில் போகும் காரை 5 நிமிஷத்தில் நிறுத்த எவ்வளவு சக்தி வேண்டுமோ அதே அளவு சக்தி 20 மைல் வேகத்தில் போகும் காரை 2 நிமிஷத்தில் நிறுத்த வேண்டியிருக்கும் என்றார்.

மூன்றாவது, எந்தச் செயலுக்கும் அதற்கு எதிரிடையான விளைவு உண்டாகிறது என்பதுதான். ஒரு பந்தைச் சுவற்றில் மோதினால் அது நம்மிடையே திரும்பி வருகிறது. பீரங்கி, குண்டைத் தள்ளும்போது, பீரங்கி பின்னோக்கிப் பாய்கிறது.

இந்த விதிகள் எல்லாம் சமீப காலம் வரையில் அசைக்க முடியாதவைகளாக ஏற்றுக் கொள்ளப்பட்டன. ஆனால் இப்பொழுது ஒப்புமைத் தத்துவம் பகுதி தத்துவம் முதலிய கொள்கைகள் வந்து பழைய கொள்கைகளை நிராகரித்துவிட்டன.

ஐன்ஸ்டனின் வாதம் நியூடனின் அடிப்படைகளையே தாக்குவதாகிவிட்டன. 'அசைவில்லாத நிலை' என்பது நியூடனின் நிலை. ரயில் வண்டியில் நாம் உட்கார்ந்துகொண்டு போகும் பொழுது நாம் அசையாமல் இருக்கிறோம் ஆனால் அது அசைவற்ற நிலையா! ரயில் வண்டி தொடர் ஓடிக்கொண்டிருக்கிறது. ரயில் வண்டியும் நிற்கிறது. அப்பொழுதாவது நாம் அசையாமல் இருக்கிறதாகச் சொல்ல முடியுமா? பூமியே ஓடிக் கொண்டேயிருக்கிறதே.

மற்றொரு முக்கியமான வித்யாசம். முந்திய விஞ்ஞானிகள், பொருள்கள்வேறு, சக்திவேறு, என்று தனித்தனியாகஆராய்ந்து வந்தார்கள். பொருள்களின் தன்மை, எடை, கனம், பரிமாணம் முதலியவற்றையும் சக்தியின் தன்மைகளைப்பற்றி இவைகளின் வேகம் இயக்கம் இவைகளைப் பற்றியும் ஆராய்ந்து வந்திருக்கிறார்கள். பொருள்கள் என்பது முன் சொன்ன 99 தனிப்பொருள்களும் அவற்றின் பலவிதமாக கலவை செய்யப்பட்ட அநேக கலப்புப் பொருள்களும்தான். சக்தி என்பவை வெப்பம், ஒளி, ஒலி, காந்தம், மின்சாரம் போன்றவைகளும்தான். ஆனால் நவீன ருஷியான ஐன்ஸ்டீன் "பொருள்வேறு, சக்தி வேறு என்பது அர்த்தம். பொருளும் சக்தியும் இரண்டும் ஒன்றுதான்" என்று சொல்லி அதற்கு ஒரு சாம்யத்தையும் சொல்லிக் கொடுத்தார். அதாவது $E=mc^2$. ஒரு பொருளின் கனத்தோடு, ஒளியின் வேகத்தோடு பெருக்கி வரும் தொகையை மறுபடியும் ஒளியின் வேகத்தோடு பெருக்கினால் அதுதான் சக்தியின் அளவு. ஒளியின் வேகம் ஒரு விநாடிக்கு 186000மைல்கள். ஆகவே ஒரு பவுண்டு கனமுள்ள பொருளில் இருந்து உண்டாகும் சக்தி $1lb \times 186000 \times 186000$ ஆகும். அதாவது அதிலிருந்து பிறக்கும் சக்தி, உலகம் பூராவிற்கும் ஒரு மாதத்திற்கு வேண்டிய மின்சாரம் அதிலிருந்து உண்டாகும். இந்த சாம்யம்தான் சூரியன் முதலான பல நட்சத்திரங்கள் இத்தனை காலமாக ஒளி தூவுவதற்குக் காரணத்தையும் இது விளக்குகிறது. ஒரு விஞ்ஞானி, "எரிந்து கொண்டிருக்கும் சூரியன் ஒரு காலத்தில் அணைந்து போகும். அப்பொழுது உலகமே சில்விட்டு அழிந்து போகும்" என்றார். நமக்கு சூரியனிடமிருந்து வரும் ஒளி, சூரியன் எரிவதால் நமக்கு வரும் வெப்பமல்ல. இது பொருள்களின் அணுச் சிதைவு ஏற்பட்டு அதனால் விளையும் சக்தியே இந்த ஒளி அலைகளாக நமக்கு வருகின்றன என்பதையே இந்தச் சாம்யம் விளக்குகிறது.

பொருள்களின் அணுக்கள் சிதைந்து சக்தியைப் பெருக்குகின்றன. சக்தி, அலைகள்

ஒன்று இரண்டு பொருள்களாகின்றன. ஒரு பொருள் தன் திணிவை உதறி எறிந்து விட்டு ஒளியின் வேகத்தால் இயங்க ஆரம்பிக்கும் பொழுது, அது சக்தியாகிவிடு கிறது. இயங்கிக் கொண்டிருக்கும் சக்தி ஒன்றுகச் சேர்ந்து உறைந்து கெட்டியாகிச் செயலற்றுப் போகுமாயின் அது பொருளாகி விடுகிறது. இப்படிப்பட்ட அதிசயத்தைக் கண்டுதான் ஐன்ஸ்டீன் சொன்னுர்.

நாம் தெய்வீக உணர்ச்சியை அனுபவிப் பதே மிகவும் அழகும் புனிதமும் ஆனது. அதுவே உண்மை விஞ்ஞானத்திற்கு வித்து. எவன் ஒருவனுக்கு இந்த உணர்ச்சியில் லையோ, எவன் ஒருவனுக்கு ஆச்சர்யப்பட வும் மெய் சிலிர்க்கவும் திறன் இல்லையோ அவன் இருந்தும் இறந்தவனுக்குச் சமம். எதை நாம் ஊடுருவிப் பார்க்க முடியாதோ, எது அறிவிற்கும் அழகுக்கும் சிகரமாக இருக் கிறதோ, எதை நாம் சிற்றறிவில் சிறிதளவே அறிய முடிகிறதோ அந்த அறிவும் அனுபவ மும் தான் நமது சமயக் கோட்பாட்டிற்கு அடிப்படையாக இருந்து வருகிறது.

இந்த உண்மையை நம் பெரியோர்களும் கவிகளும், ஞானிகளும் உணர்ந்திருந்தார்கள். அதனுலேயேதான் இந்தப் பிரபஞ்சத்தையும் சிருஷ்டியையும் சக்தியின் கூத்தாகவும் சாட் சாத் புவனேஸ்வரியின் லீலையாகவும் கண்டு வணங்கி ஆனந்தித்திருந்தனர். இந்த சக்தி யின் திருவிளையாடலைக் கண்டு நம் பாரதி பராசக்தியைப் பல பல பாடல்களில் போற்றி யிருக்கிருர்.

தீராத காலமெலாம் தானும் நிற்பாள்
தெவிட்டாத இன்னமுதின்செவ்விதழ்ச்சி
நீராகக் கனலாகவானுய்க் காற்றுய்
நிலமாக வடிவெடுத்தாள் நிலத்தின்மீது
போராக நோயாக மரணமாகப்
போந்திதனை அழித்திடுவாள்
புணர்ச்சி கொண்டால்
நேராக மோன மகானந்த வாழ்வை
நிலத்தின்மிசை அளித் தமரத்
தன்மையீவாள்

விண்டுரைக்க அறிய அரியதாய்
விரிந்த வான வெளியென நின்றனை
அண்டகோடிகள் வானில் சமைத்தனை
அவற்றில் எண்ணற்ற வேகம் சமைத்தனை
மண்டலத்தை அணுவணுவாக்கினுல்
வருவதெத்தனை அத்தனை யோசனை
கொண்ட தூரம் அவற்றிடை வைத்தனை
கோலமே! நினைக்காளியென்றேத்துவேன்.

வாயுவாகி வெளியை அளந்தனை
வாழ்வெதற்கும் உயிர்நிலை ஆயினை
தேயுவாகி ஒளியருள் செய்குவை
செத்தவற்றைக் கருப்பொருள் ஆக்குவை
பாயு மாயிரம் சக்திகளாகியே
பாரிலுள்ள தொழில்கள் இயற்றுவை
சாயும் பல்லுயிர் கொல்லுவை, நிற்பன
தம்மைச் சார்ந்து சுகம்பல நல்குவை

—என்றும்

மூலப் பழம் பொருளின் நாட்டம்...இந்த
மூன்று புவியும் அதன் ஆட்டம்
காலப் பெருங்களித்தின் மீதே—எங்கள்
காளி நடம் உலகக் கூட்டம்

—என்றும் சக்தியின் புகழை வாயாரப் பாடிக் களிக்கிருர்.

தேவி மகாத்மியத்தில் பின்வரும் தோத் திரம் காணப்படுகிறது.

''தாயே, நீயே சக்தி, நீயே எல்லாவற் றிற்கும் பிறப்பிடம். உலகத்திற்கும் வித்து நீயே. அதன் மாயையும் நீயே. உலகம் யாவற்றையும் மோகிக்கச் செய்திருக்கிருய். இருந்தும் உன் கிருபையால் உலகிற்கு விடு தலையும் கொடுக்கிருய்.''

பராசக்தியான அன்னை காளியின் அத்யந்த உபாசகரான ஸ்ரீராமகிருஷ்ண பரம ஹம்ஸர் சொல்கிருர்: ''என் அன்னைதான் சுத்த சக்தி. என்தாய் தொழிலற்று இருக்கும் போது பரப்ரும்மமாய் இருக்கிருள். அவள் படைத்தொழிலில் ஈடுபட்டு, சிருஷ்டி, ஸ்திதி, சம்காரம் மூன்றையும் செய்கின்ற பொழுது அவள் பராசக்தியாக, அன்னை காளியாகவும் தோன்றுகிருள்.''

மற்றொரு கதையையும் சொல்கிருர். ஒரு பண்டிதன் தான் மிகுந்த பண்டிதன் என்று நினைத்துக்கொண்டிருந்தாராம். அவர் நிர்க் குணப் பிரம்மத்தைத்தான் கடவுள் என்று ஆமோதிப்பார். ஆனுல் அவருக்கு அன்னை பராசக்தியருளால் அன்னையை சக்தி ரூப மாகக் கண்டார். அவருக்கு பிரக்ஞை போய் விட்டது. சுய நினைவு வந்ததும் ''காளி'' என்று சொல்ல வந்தவர் ''கா-கா-கா'' என்று கத்திக்கொண்டிருந்தாராம்.

“ ●●● ●●● ●●● ●●● ●●● ●●● ●●● ”

— தி. ஜானகிராமன்

[ஆசிரியர் ஐயா அவர்களுக்கு, வணக்கம் பல. எனக்கு புதுக்கதை எழுத ஆசை. வயசாக வயசாக, இளமைக்குப்போக சபலம், அதனால் ஒரு சில புது எழுத்தாளர் களை துரோணராக ஆவாகனம் செய்து ஒருகதை கீழே எழுதியிருக்கிறேன். ஐயா அவர் கள் பத்திரிகையில் போடவேணும். மேலும் இரண்டு நல்ல வார்த்தை எனக்குக் கடிதம் எழுதி இந்த ஆரம்பமுயற்சிக்கு மேலும் மேலும் ஊக்கம் தரவேணும்].

தழைந்த கீற்றுச்சார்பும் மூங்கில் தூணும் இருந்த மண்பூச்சுப் பெயர்ந்து போய் குண்டும் குழியுமாகக் காணப்பட்ட துடை யின் பாதியளவுயரமாக உள்ள திண்ணைமீது தன் வலது காலை நீட்டிக்கொண்டும் இடது காலை மடக்கித் தூக்கலாக வைத்துக்கொண் டும் உட்கார்ந்து அவன் காணப்பட்டான். காலையில் எழுந்ததும் தன் முகத்தைக் கழு வாததால் தன் கண்ஓரங்களில் சீழ்ப்பொட்டு போலிருந்த வெள்ளைநிறமான பூளையைத் துடைக்கமுடியாதவனாகவும் அவன் காணப் பட்டான். அவன் எண்பது வயதை உடைத் தாயிருந்தான். அவன் ஒரு கிழிந்த அரை வேட்டியையும் அதைவிடக் கிழிந்த மேல் துண்டையும் உடைத்தானவனுயிருந்தான். இடது காலைத் தூக்கி மடக்கி உட்கார்ந் திருந்ததால் கிழிந்த கரை வேட்டியின் ஓட்டைகளின் வழியாக இடதுகொட்டை பார்ப்போர்களுக்குப் படுவதை அவன் தெரிந்து கொள்ளாதவன்போல் காணப் பட்டான். அவன் தூக்கம் நன்ருகத் தெளி யாதவன் போலவும் காணப்பட்டான். அவன் தெருவைப் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் தெருவைப் பார்க்காமலுமிருந்தான். திண்ணைமீது தனக்குப் பக்கத்தில் கிடந்த சேற்றில் அடிக்கு அடி ஊன்றி காய்ந்த களி மண் ஒட்டிக்கொண்டிருந்த தனது கைத் தடியை அடிக்கடி கண்ணை இடுக்கிப் பார்த் துக் கொண்டிருப்பவனுகவுமிருந்தான்.

அப்போ கொடுவாய்ப்பேட்டை என்ற அந்த ஊரில் பிறந்து வளர்ந்து அந்த ஊர்த் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் படித்தும் அந்த ஊரிலிருந்து மூன்றுவது மைல் தொலைவில் உள்ள கொண்டகரம்பட்டி என்றும் சிறிய மேஜர் பஞ்சாயத்துட்டவுனில் உள்ள ஜில்லா போர்டு உயர்தரப்பள்ளிக்கு நடந்துபோயும் போகும்போது சாலை ஓரமாக உள்ள மாமரங்களின் மீது கல்லெறிந்து மாங் காய்களை வீழ்த்தி தின்றுகொண்டும் பள்ளிக் கூடம் படித்து முடித்து, பிறகு டில்லியில் போய் ஒரு சாதாரண அஸிஸ்டெண்ட்டாக அமர்ந்து அந்த சமயத்தில் அண்டர் செக்ரட் டரியாக உயர்ந்திருந்த அக்ரகாரத்தைச் சேர்ந்த சர்மா என்பவரின் வராண்டா கல் லூரியில் படிப்பவள் ஒருவளும் மதராஸிப் பள்ளியிலும் படிப்பவள் ஒருவளுமான இரண்டு பெண்கள் கோடை விடுமுறைக் காக ஊருக்கு வந்தவர்கள் தங்கள் கால் களால் நடந்துகொண்டுதிண்ணையில் அவன் உட்கார்ந்திருந்த அந்த வலையர்தெரு வழி யாக, காலையில் தெரு ஓரமாக உட்கார்ந்து கழிவுசெய்து கொண்டிருந்த வலையர் தெருக் குழந்தைகள் வியப்புடன் அவர்களைநிமிர்ந்து பார்க்க நடந்து கொண்டிருந்தார்கள்.

திண்ணையில் அவன் உட்கார்ந்திருக்கும் கோணங்களைப் பார்த்து அவர்கள் சிரிப்பது போலவும் கோபப்படுவது போலவும் காணப் பட்டார்கள்.

தலையில் பின் குடங்கள் வரையில் தொங் கும் நீண்ட முடியை உடைத்தாயிருந்த பெண் சொன்னுள். “Look at this bastard, showing off his balls—”

“as if they are two breasts” என்று கூந் தலை நறுக்கிப்போட்டு ‘பாப்’ செய்து கொண் டிருந்ததால் ஆணோ பெண்ணோ என்று புரி

யாமலோ அல்லது அவள் அணிந்து கொண்டிருந்த லுங்கியால் முஸ்லீமோ அல்லது பகல் வேஷமோ என்றோ அல்லது குழந்தைகளுக்கே உண்டான ஒரு ஆவலாலோ அக்காலேவிட இன்னும் அதிகமாக பூவரசுமரத்தடியில் மூத்திரம் பெய்து கொண்டிருந்த குழந்தைகளால் பார்க்கப்பட்ட தங்கை சொன்னாள்.

"Dont be silly. Which breasts are like that?" என்று முன்னால் பேசினவள் விடை சொன்னாள்.

"A bear's!" என்று சிரித்தாள் மூத்தவள்.

"You mean polar bear's" என்று சிரித்துவிட்டு, "பாப்" செய்துகொண்டிருந்தவள் மேலும் சொன்னாள். "Anyway, I should thank daddy for sending us here to see these great sights".

"O, dont talk of that hypocrite".

"மத்லப் ?"

"மத்லப் ஐ ஸீ ஹெ. He wanted to get rid of mummy and us for a couple of months"

"What!"

"Yes. He wanted to have fun with Miss Mukherjea-that middle-aged, sagged bitch."

"Bullshit"

"சுப். பச்சா நீ. உனக்கு ஒன்னும் தெரியாது. I won't be shocked if mummy goes to the divorce court next year this time".

"You dont talk like a daughter".

"Why? Why do you say that?"

"Yes have'nt got a wee bit of aedipus complex!"

"What! what! you school lass-talking about aedipus and what not?"

"ஏன்! நீ தானே என்னை மோதிவர்மாவோட பொயட்ரீ ரீடிங் ப்ளே எல்லாத்துக்கும் அழச்சிண்டு போனே."

"You are terrific"

அவன் அவர்களைப் பார்த்துக்கொண்டேயிருந்தான். தெருவின் அந்தப் பக்கத்திலிருந்து வருவதைப் பார்த்தான். வாசலோடு போவதைப் பார்த்தான். இந்தப் பக்கம் பேசுவதைப் பார்த்தான். அவர்கள் தெருக்கோடி திரும்பி மறைவதைப் பார்த்தான். பிறகு ஏதோ கேட்கவேண்டும் என்றுஆசைப்பட்டவன் போல காணப்பட்டான். எதிர் வீட்டுக்குப் பக்கத்திலிருந்த பூவரசமரத்தடியைப் பார்த்தான். வெளிக்குப் போய்க்கொண்டும், சிறிய சிறிய கற்களைப் பொறுக்கி எறிந்து கொண்டுமிருந்த மூன்று குழந்தைகளைப் பார்த்தான். அந்தப் பெண்கள் தங்களைக் கடந்து சென்றதும் உடனே பாதியில் எழுந்து கால்களை அகட்டி அகட்டி அந்தக் குழந்தைகள் அவர்களையே பார்த்துக்கொண்டும் அவர்களுடைய முகங்களையும் தலைகளையும் தங்கள் கண்களால் நன்றாக பார்ப்பதற்காக அவர்களை முந்திக்கொண்டு முன்னால்போய் நின்றும் நடந்தும் பார்க்க அவர்கள் முயலுவதையும் அவன் கட்டாயம் பார்த்துத்தானிருக்க வேண்டும்.

அப்பொழுது ஒரு அந்தப் பெண்கள் போன திசையிலிருந்து ஒரு கூட்டப்பாடல் மாதிரி கேட்கவே, ஊருக்கு வெளியேயுள்ள

கருப்பக்கலியபெருமாள் கோவிலில் திருவிழா தொடங்கிவிட்டதோ என்றும், அதற்காகத் தான் பக்கத்துத் தெருவான செங்குந்தர் தெருவிலிருந்து பஜனைக்கூட்டம் புறப்பட்டிருக்குதோ என்றும் ஊகங்கள் செய்வது போலக்காணப்பட்டான் அவன். இது என்ன மாசம், வைகாசியா, சித்திரையா, ஆவணியா என்ற கேள்விகளால் அவன் அலைக்கழிக்கப்படுவதுபோல, அவன் முகம் கவலை குழப்பச் சின்னங்களைக் காட்டிக் கொண்டிருக்கும் பொழுதே கூட்டம் பாடிக்கொண்டே அவன் வீட்டு வாசல் வழியாகப் போயிற்று,

மொபைல் கோரஸ்

ஐஜாக்குப் பண்ணுவோம்
ஐஜாக்குப் பண்ணுவோம்
ஐயமாரும் போலீசாரும்
ஐயா வேண்டாம் என்றாலும்
ஐஜாக்கு பண்ணுவோம்
ஐஜாக்கு பண்ணுவோம்
கன்னம் தாடையைப் பிடித்து
கூழைப் பாட்டு பாடினாலும்
கைவிடோம் கைவிடோம்
ஐஜாக்கிங் போரினை
கைவிடோம் கைவிடோம்

| | | |
|---|---|---|
| ஒருவன் | : | ஐஜாக்கு |
| **மற்றவர்கள்** | : | பண்ணுவோம் |
| ஒருவன் | : | ஐஜாக்கிங் |
| மற்றவர்கள் | : | வாழ்க |

தேவதரிசனம் :

**நான்**

* பரம ஏகாந்தத்தில் "நான்" அழிந்து போகிறது.

ஆதியின் முதல் நாளில் பிறந்தவனைக் காட்டிலும் நமக்குச் சுமை அதிகம்.

பரிணமம், ஆற்றல் என்பதெல்லாம் அறிவின் சுமையே.

ஜீவயாத்திரைக்கு உபகாரமாயிருக்கக்கூடிய அறிவு முழுதும் சுமையாக ஆகிவிடக் கூடாது.

அங்ஙனமாகிவிட்டால் மனிதன் பெற்ற லாபம் சிக்கலென்று ஆகிவிடும்.

சிக்கலை ஒரு கலையாகப் பயின்று வைத்திருக்கின்றோம்.

பஜனைக்குரல்கள் யாருடையது என்று கண்டுபிடிக்க முடியாமல் குழப்பத்திற்குள்ளானவன் போல் அவன் காணப்பட்டான். அவன் குழப்பமே அடைந்தான். அவன் பார்த்தான் அவன் கண்களை இடுக்கிப்பார்த்தான். அந்தப் பெண்கள் தான் இப்படி பஜனைக்கூட்டமாக மாறி தெருக்கோடியிலிருந்து திரும்பிவந்தார்களோ என்று நினைத்துப்போலவும் அவன் கண்கள் வியப்பையும் ஒரு புரியாத தன்மையையும் வெளியிடுவது போல் காணப்பட்டன. அதற்குக் காரணம் அந்தப் பெண்களுக்குப் பின்னால் காலை அகட்டி அகட்டி அதே குழந்தைகள் இந்த பஜனைக்கூட்டத்தின் பின்னாலும் ஓடுவது தான் என்பது அவனுடைய நெஞ்சின் இருளில் மறந்து போகப்பட்ட ஒரு நடு நிசியின் கனவைப்போல தெரிந்தது.

"யாரு அங்கே ?" ஒரு கேள்வி கேட்டான் அவன்.

"நான்தான் என்று அவன் மனைவியைப் போல் காணப்பட்ட ஒருவள் நிலைப்படியில் நின்றுகொண்டு சொன்னாள். அவள் இடுப்பில் வயதின் காரணமாக ஒரு கூனலை அல்லது வளைவை உடைத்தாயிருந்தது போலிருந்தது.

"சாலியத்தெரு பஜனையா போவுது ?" என்று மீண்டும் கேட்டான் அவன்.

"அந்தமாருதி தோணலியே" என்று இடுக்கின கண்களால் பேசுவதுபோல் விடை சொன்னாள் அவள்.

"பின்ன யாராம் ?"

"தெரியலையே"

"ஆங்"

"எனக்குத் தெரியலியே"

"தெரியலியா ? தூமியைக்குடிப்பே ! உனக்கு என்னதான் தெரியும் ? யாரு அங்கே ஐயாவு வாடா"

"யாங் தாத்தா" என்றுகத்திக்கொண்டே எதிர் வீட்டுத் திண்ணையில் பஜனைக் கூட்டம் என்று இவன் நினைத்துக் கொண்டிருந்த கூட்டத்தைப் பார்த்துக் கொண்டிருந்த ஒருவன் எழுந்து வந்தான்.

"யாருடா பஜனை பண்ணிகிட்டுப்போறாங்க மருதப்பா ?"

"பள்ளிக் கூடத்துப் பையங்க ........ பஜனையில்லெ. ஐஜாக்குப் பண்ணப் போருங்களாம்."

"என்னது"

"ஐசாக்கு பண்ணப் போருங்களாம்."

"நீ என்னுடா சொல்றே"

"பேப்பர் படிச்சீங்கன்னுத்தான் புரியும்?"

"என்னுத்தைப் புரியும்?"

"ஏரப்ளான்ல பண்ருங்கள்ள—அரபு நாடுகள்ள—அந்த மாதிரி."

"புரியும்படியா சொல்லுடா தூமிகுடிச்ச பயலே."

"பள்ளிக்கூடம் போறதுக்கு மூணுவண்டியை மாசக் குத்தகைக்கு பேசிக்கிட்டுத் தானே போருங்க இவங்க. அந்த மூணு மாட்டு வண்டியை ஐஜாக்கு பண்ணி இன்னக்கி வலயத் தெருவிலே கொண்டவிடப் போருங்களாம்"

"என்னுடா ஜாக்கு ஜாக்குங்கறே?"

"ஏரப்ளான்ல போறப்ப துப்பாக்கியைச் காட்டி ட்ரைவர் கண்ட்ராக்டரு எல்லாரையும் வேற ஊர்ல கொண்ட எறக்கச் சொல்லுவாங்கள்ள—அந்த மாதிரி—அதுதான் ஐ ஜாக்கு."

"அதுக்கு முன்னுடி பொம்பளை வேசம் கட்டிக்கிடுவானேன்?"

"என்னது பொம்பளை வேசமா ?"

"ஆமாண்டா-இந்த பசங்க செத்த முன்னுலெ ரண்டு பொம்பளையாபோனுங்க-தெருக் கோடிக்குப் போய் வேசம் மாத்திக்கிட்டு வந்தாங்க—இது தான் இப்ப சொன்னியே அந்த யாக்கா ?"

"நீங்க என்னு சொல்றீங்க—அந்த பொண்ணுங்க—மொட்டய்யரு பேத்திய வுள்ள ! டில்லியிலேந்து லீவுக்கு வந்திருக்காங்க"—மெதுவாக— "கிளத்துக்கு எல்லாம் கலக்கம்."

"யாரு பேத்தி?"

"மொட்டைய்யரு பேத்தியுவ."

"மொட்டைய்யரு பேத்தியுவளா ?"

"ஆமா—கைலி கட்டிகிட்டு, மயிரை வெட்டிக் கிட்டுப் போவுது ரண்டாவது பேத்தி. காலம் கெட்டு கிடக்கு."

எண்பது வயசானவன் தனக்குள்ளாகச் சிரித்துக் கொள்வது போல் காணப்பட்டான். மொட்டய்யரின் அக்காளின் நினைவும் தன்னுடைய இளம் பருவமும் நினைவுக்கு வருவது போல அவன் கண்கள் ஒளி விடுவது போல் காணப்பட்டன.

"காலம் எப்பதாண்டா கெடலே தூமி குடிச்ச பயலே என்று மேலும் நினைத்துக் கொண்டே—

(ஆசிரியர் ஐயா அவர்களுக்கு வணக்கம். புதுக் கதை எனக்கு எழுத முடியவில்லை என்று என் தோல்வியை ஒப்புக் கொள்ளுகிறேன். அதனுல் கதையை மேலே கொண்டுபோக முடியவில்லை. மன்னிப்புக் கேட்டுக் கொண்டு இத்துடன் முடித்துக் கொள்கிறேன். ஆரம்ப முயற்சி கடைசி முயற்சியாகவும் போய் விட்டது பற்றி நீங்கள் வருத்தப்பட வேண்டாம்.) ●

# PRAYER BY NIGHT

By, AMARYLLIS

'Twas a warm and stuffy night
Past the witching hour
When I came out of my study
For a breath of fresh air;
A mangy mongrel at the corner
Growled fitfully where it lay;
Up a neem tree a foolish cock
Crowed once while the crickets chirped:
Still and silent, the City slept.

I looked around as I walked along
The dull, drab streets, lifeless and bleak,
Barren of beauty or meaning;
The dungy earth lay still and dead.
I yawned in sheer boredom
When looking upwards I beheld
A sight that made me gasp for joy!

In a silver sky the gibbous moon
Rained nacreous light, flooding
The earth below with milky glow;
Not a cloud to hide the stars
As they scintillated in their signs.
Overhead I saw the Dog-Star bright
Looking large and luminiferous:
While Westward with his sword and belt
Went Orion armed towards the pearly haze
Of Pleaides (The Sisters Six
That nursed a God of War!).
I remembered their sizes and shivered
At the vast distances that made them so small!

Over North was Capella
With her kids capering behind;
I saw too the Gemini twins,
Castor and Pollux, Immortal offspring
Of Leda and the Swan!
Eastward, o'er a cocoanut frond,
I espied Leo, with Regulus in the van,
Rampant on his hind legs
As if pursuing the Hunter in the West:
Alone Canopus in the southern sky
Sulked in scholarly seclusion:
(Sent to the South to balance the earth
Long long ago, when the world was young,
When a God wedded the Mountain's Daughter!)

Oh! the faith of our fathers and their fancy!
Their wonder and worship of all that is
Majestic and mysterious! Knowing less,
They saw more, the Greeks, the Hindus,
The Chaldeans and the Egyptians.
I thought they heard the Music of the Spheres
As the stars sang in their skyey tracks.

I stretched my eyes and let them grow
Into interstellar spaces;
I felt baffled; almost afraid
To contemplate such magnitudes and distances;
I bethought myself then of puny Man,
Infinitesimally insignificant,

His pettiness, his littleness,
His smallness and his meanness,
His plans and his projects,
His pacts and his policies,
His budgetings and accountings,
His Proposals and arguments!

All, all, within this speck of dust,
This Earth!

There was a stirring in my being, now,
Like a nascent nova from a nebula
To God I prayed:
"Let me not be vain, oh Lord!".

# ரசனை இன்பம்

மஹேந்திரன்

பாரதி ஒரு மாபெரும் ரஸிகர். அவர் இந்த உலகில் தான் கண்டு கேட்டு உணர்ந்து ரஸித்து அனுபவித்த விஷயங்களையெல்லாம் அற்புதமான கவிதைகளாக வடித்துச் சென்ருர். 'எத்தனை கோடி இன்பம் வைத்தாய், இறைவா' என்று வியந்து மகிழ்ந்தார். ஒரு நூறு இன்பம்பற்றி எழுதிப் பார்த்தால் சிரமம் தெரிகிறதே, கோடி கோடி இன்பம் என்று சொல்லுகிருரே, அதன் மூலம் அவர் உணர்த்துவதுதான் என்ன என்று அறிய வேட்கை எழுந்தது. அவரது கவிதைகளையும் கட்டுரைகளையும் புரட்டியபோது 'அமிர்தம் தேடுதல்' என்னும் கட்டுரை கிடைத்தது. அதில் 'அளவில்லாத அழகும் இன்பமும் கொண்ட உலகமொன்று நம்மோடு இருக்கிறது. இந்த உலகம் கவலையற்றதாகும்'' என்று கூறி மேலும் விளக்கம் தந்துள்ளார்.

''தண்ணீர், குளித்தால் இன்பம்;
குடித்தால் இன்பம்;

தீ, குளிர்காய்ந்தால் இன்பம்;
பார்த்தால் இன்பம்;

மண் இதன் விளைவுகளிலே
பெரும்பான்மை இன்பம்,
இதன் தாங்குதல் இன்பம்.

காற்று, இதைத்தீண்டிஞல் இன்பம்,
மூச்சிலே கொண்டால்
இன்பம்.

பின்னும் இவ்வுலகத்தில்,

உண்ணுதல் இன்பம்
உழைத்தல் இன்பம்,
உறங்கல் இன்பம்,
ஆடுதல் இன்பம்,
கற்றல், கேட்டல், பாடுதல், எண்ணுதல்,
அறிதல் எல்லாம் இன்பந்தான்''

இதிலிருந்து உலகமே இன்பமயம் என்று அவர் உணர்த்துவதை நாம் அறிகிருேம். அவரது கவிதைகளை ஆழ்ந்து கற்ருல் அவரது ரஸனை இன்பத்தை நாமும் நுகரலாம்.

உ) திரு. டி. கே. சி. அவர்கள் ரஸனையின் இருப்பிடம். ரஸிகர்களுக்கெல்லாம் மணி போன்றவர். வாழ்க்கையின் ஒவ்வொரு கணப்பொழுதிலும் ரஸனை இன்பத்தில் திளைத்தவர். நல்ல செல்வந்தர். குற்ருலத்திலும் சரி சென்னையிலும் சரி தன்னை அணுகியவர்க்கெல்லாம் விருந்து படைத்து ரஸனை இன்பத்தையும் நல்கி வந்தவர். தன் உயிருக்குயிரான மைந்தன் இயற்கை எய்தியபோது கிடைத்த இரங்கற்பாவையும் மிகுந்த ஈடுபாட்டுடன் ரஸித்து மகிழ்ந்தவர். தமிழுக்கு இப்படி ஒரு கவிதை கிடைப்பதாயிருந்தால் ஒரு உயிரையும் இழக்கலாம் போலும் என்று அறிவித்தவர். நெல்லையில் வட்டத் தொட்டி ரஸிகர் மன்றம் அமைத்து உலகை ரஸித்து மகிழ்ந்தவர். ''தமிழ்நாட்டு இளைஞர்கள் மிகவும் கொடுத்து வைத்தவர்கள்: ஏனெனில், அவர்கள் நெடுங்காலத்திற்கு ஜீவித்திருந்து, பாரதி, தேசிய விநாயகம் ஆகியோரின் கவிதைகளைப் படித்து இன்புறும் பாக்கியம் பெற்றவர்கள்'' என்று சொன்ஞர். நம் இளைஞர்கள் கவிதை இன்பம் பருக வேண்டுமென்ற பேராவலை மட்டும் அது காட்டவில்லை. இவ்வுலகில் நெடுங்காலம் ஜீவித்திருந்து இக்கவிதைகளையெல்லாம் மேலும் படித்து இன்புறும் பாக்கியம் தமக்கில்லையே என்ற ஆற்ருமை உணர்வையும் காட்டவில்லையா?

3) திரு. வி. க. மற்ருெரு சிறப்பான ரஸிகர். அவரது ரஸனைக்கு ஒரு உதாரணம். ''அழகுக் கடவுளைக் கண்டின்புற எவரும் வானத்தை நோக்க வேண்டுவதில்லை; மலைக் கேக வேண்டுவதில்லை; கடலை நாட வேண்டியதில்லை; காவியங்களைப் புரட்ட வேண்டியதில்லை. அழகுக் கடவுள் பெண்ணுமி யாண்டும் காட்சியளிக்கிறது.'' இது பெண்களைப் பராசக்தியாகக் கருதி வழிபட்ட தமிழ் முனிவரின் தூய ரஸனை உணர்வாகும்.

4) கல்கி, மற்ருெரு நுட்பமான ரஸிகர். 'அலை ஓசை' என்ற தனது இனிய நவீனத்தில் 'ரஜனி பூர் ஏரி' யை அவர் வர்ணிப்பதைக் காண்போம்.

''அங்கே நள்ளிரவின் நிசப்தம் நிலவியது. வைகறையின் சலனமற்ற சாந்தம் குடி கொண்டிருந்தது மாலைநேரத்தின் மனோகரம் பரவியிருந்தது. அந்த விஸ்தாரமான நீல நிற நீர்ப்பரப்பைப் பார்த்தால் ஞானிகள் எங்கும் நிறைந்த பரம்பொருளைத் தங்களுக்குள்ளே காணும்போது அடையும் ஆனந்தத்தைப் பாமர ஜனங்களும் அடைவார்கள். காதலர்கள் தங்களுடைய காதலிகளின் கண்களுக்குள்ளே தங்கள் பிரதி பிம்பத்தைக் காணும்போது அடையும் களிப்பை அந்த ஏரி நீரில் தங்கள் உருவத்தைப் பார்க்கும் எவரும் பெறுவார்கள். முதல் முதலில் பெற்றெடுத்த குழந்தையின இதழ்களில் இலேசாக அரும்பும் புன்னகையைப் பார்க்கும் போது அன்னைக்கு உண்டாகும் மகிழ்ச்சி அந்த ஏரி நீரின் சிற்றலைகள் விரியும் காட்சியைப் பார்க்கும் அனைவருக்கும் உண்டாகும்.'' அந்த ஏரியின் அருகில் நின்று நாம் அவர் உணர்த்தும் உணர்வுகளை அனுபவிப்பது போன்ற உணர்ச்சி ஏற்படுகிறதல்லவா ?

5) மேலே குறிப்பிடப் பட்டுள்ளவர்களைப்போன்று உன்னதமான ரஸிகர்கள் சிலர் நம்மிடையே இருக்கத்தான் செய்கிருர்கள், சில ரஸனை உணர்வுகளையும் அவற்றை வெளிப்படுத்திய ரஸிகர்களையும் இங்கு நாம் காண்போம்.

''லோக சத்யத்தில் ப்ரம்ம தரிசனம்
காட்டும் கோடி கோடிக்கலைகளே
மண்ணிலே விண்ணை விளக்கும்''

''திரிசங்கு சுவர்க்கம்.'' என்ற அடிப்படையில் ''புதிய சுவர்க்கம்'' என்னும் தலைப்பில் நமது ''சிவாஜி'' ஆசிரியர் அவர்கள் நாடகம் ஒன்று அமைத்துள்ளார்கள். அதில் திரிசங்கு மன்னனிடம் நதி கன்னிகை பேசுகிருள். மலை, மன்னனிடம் உரையாடுகிறது. வானவில், மன்னனிடம் சல்லாபம்செய்கிறது மன்னனும் வானவில்லும் உரையாடுவதைக் காண்போமே:

*திரிசங்கு:*

''தொலைவில் தெரியும் வானவில்லே,
நீயும் என்னுடன் பேசுவாயா?''

*வானவில்:*

''ஆம், உமக்கு அருகில், உமது உள்ளத்திலும் இருப்பேன். உமது காதில் ஒரு கோடிக்கதைகள் சொல்வேன். ஆன்மாவென்னும் வற்ருத பெருவெள்ளம் தேவலோகத்தின் அமுதகலசத்தில் மட்டுமிருக்கவில்லை என்பதையும் உம் காலடியில் வருடிச் செல்லும் நீரருவியிலும், அருந்தும் உணவிலும் வாழும் உலகிலும் எங்கும் அமுதமயமாய் விளங்குகிறதென்றும் காட்டுவேன். சிருஷ்டி மர்மங்களைப்பற்றிய கதைகள் உமக்குச்சுவையாக இருக்குமா? உலகில் நீர் பார்க்கும் ஸ்தூலப் பொருள்களின் தோற்றத்திலும் அவற்றின் அழகிலும் என்னுடைய ஏழு வர்ணங்களாலும் அந்த மர்மத்தைத் தான் நான் சித்திரிக்கிறேன். பெண்களின் கடைக் கண்ணிலும் மலர்களின் இதழ்க்கடைகளிலும் எனது புன்சிரிப்பைக் காண்பீராக. உம் இதயத்தின் உபசாந்தியிலும் நான் ஒளிந்து கொண்டிருக்கிறேன்.''

நம் ஆசிரியர் அவர்களின் ரஸனை உணர்வுகள் ஜ்வலிப்பதை நாம் பார்க்கிருேமல்லவா?

6) இதோ மற்ருெரு ரஸிகர்.

''கண்முன்னுள்ள ஒவ்வொரு கணத்தையும் வாழ்ந்து முடிப்பதைப்போல் ஒருவன் அடையும் பயன் வேறெதுதான் உண்டு...... இப்போதைக்கு நமக்கு, தமிழும் கவிதையும் ரஸனையும் ரஸிகர்களும் என்ற வட்டத்துக்கு வெளியேயுள்ள உலகத்தைப் புரிந்து கொள்ள முடியவில்லை. அதற்கு அவசிய

மும் இல்லை. ஒவ்வொரு கணமும் இனிமை, ஒவ்வொரு மாற்றமும் விளையாட்டு, எதிலும் சிக்கி உழலாத மனம். வாழ்க்கை நன்றாகவே இருக்கிறது. இதுபோதும். வாழ்வின் சேமிப்பும் அதன் பயனும் வாழ்வுதான்.'' ரஸிகர் யாரென்று தெரிந்து கொண்டிருப்பீர்கள். இந்த உணர்வுகள் நம் ஆசிரியர் அவர்களின் மனமலர்ச்சியையும் அமைதியையும் நிறைவையும் காட்டுகிறதல்லவா?

7) திரு. ஜானகிராமன் தமிழ் நாட்டின் தலைசிறந்த நாவலாசிரியர். ''அவரது நூல்களைப் படித்தால் சுவையான கலை நிகழ்ச்சியொன்றைப் பார்ப்பது போன்ற உணர்வு ஏற்படுமென்று'' அமரர் திரு. கு. அழகிரிசாமி அவர்கள் ஒருமுறை விமர்சித்துள்ளார். அவரது ரஸனை உணர்வைப்பார்ப்போம்,

''சுற்றிலும் உலகம் சிறியதும் பெரியதுமாக சாதாரண அசைவுகளில்கூட வியப்புகள் நிறைந்து இயங்குகிறது. அதைப் பார்த்துக்கொண்டிருப்பதே ஆனந்தம்தான்.''

''வாழ்க்கை என்பதே ஒருகலைதான். நாம் அதைப்புரிந்து கொள்வதில்தான் அதனுடைய ரஸனையை, ருசியை நாம் அனுபவிக்கிறோம். அணில்பிள்ளை யொன்று மற்றொன்றைத் துரத்திக்கொண்டே ஓடுகிறது. காகம் ஒன்று எங்கள் வீட்டு மதிற்சுவரின்மேல் உட்கார்ந்துகொண்டு கரைகிறது. தெருவில் உடம்பெல்லாம் புழுதி படிய சிறுவர்கள் ஆனந்தமாகக் கிட்டிப்புள் விளையாடுகின்றனர். பெரியவர்கள் இருவர் காரசாரமாக எதையோ விவாதித்தவண்ணம் தெருவழியே செல்கின்றனர். இதையெல்லாம நான் பார்க்கிறேன், கேட்கிறேன். இந்த உலசில் பங்கு பெறும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தமைக்கு மகிழ்கிறேன்.''

நாவலாசிரியரின் மனப்பக்குவமும் இனிய திருப்தியும் நமக்குத் தெளிவாக விளங்குகிறதல்லவா!

8) தமிழ் நாட்டின் நல்ல கட்டுரையாளர்களில் ஒருவரான தமிழ்வாணன் என்ன சொல்லுகிறார் என்பதைப் பார்ப்போமே.

''உலகத்திலே காண்கின்ற ஒவ்வொரு சாட்சியிலும், கேட்கின்ற ஒவ்வொரு ஓசையிலும் தொடுகின்ற ஒவ்வொரு உணர்விலும் ஊறிக்கிடக்கிறது அழகு. கொட்டிக் கிடக்கும் இந்த அழகை அள்ளிப்பருகுவதற்காகவாவது கவலையைக் காற்றிலே பறக்கவிடக் கூடாதா? கவலையால் கருகிவாடும் இதயத் தாமரைக்கு இதைவிடச் சிறந்த அமுதுவேறு ஏது?''

9) பண்பட்ட இலக்கிய ரஸிகரான திரு. நா. பார்த்தசாரதி அவர்கள் சொல்லுவதைக் கேட்போம்.

''பூ, காய், பழம், வித்து, மரம், செடி, கொடி, கடல் எல்லாமே தெய்வம் தான். அவற்றைத் தெய்வமாகப் பார்ப்பதற்குப் பழகிக்கொண்டால், நிற்குமிடமெல்லாம் கோவில்தான். நினைக்குமிடமெல்லாம தியானம்தான். பார்க்குமிடமெல்லாம் பரம் பொருள்தான். தளிர்களில் தெய்வம் அசைகிறது. மலர்களில் தெய்வம் சிரிக்கிறது. மணங்களில் தெய்வம் மணக்கிறது'''

இயற்கை வழிபாட்டின் உணர்வுகளை தெளிவாக எடுத்துக்காட்டுகிறதல்லவா ?

10) திரு. A. K. விஜயபானு அவர்கள் ஆங்கிலமும் தமிழும் ஆழ்ந்து படித்த அறிஞர். நல்ல இலக்கியப் புலமையுடையவர். சிறந்த கலாரஸிகர். நல்ல பல நூல்கள் இயற்றியுள்ளார். அரசாங்கத்தின்

பெரும் பதவியொன்றில் இருந்து வருபவர். அவரது ரஸனை உணர்வுகளை நாம் பார்க்கப் போகிறோம்.

"ஆடவல்லோருக்கு, வாழ்வு ஒரு ஆடிக் களிக்கும் அரங்கு. அனுபவசாலிகளுக்கு, அது ஒரு சுவைமிக்க நாடகம். பொற்காசுகளையும் வெள்ளிக் காசுகளையும் குவித்து வைத்திருப்போருக்கு அது ஒரு பொன்னூஞ்சல். உரனும் திறனுமற்றவர்க்கு அது ஒரு கடினமான பாலைவனப்பிரயாணம். மதப்பற்று அதிகமுடையோருக்கு. வாழ்வு ஒரு பயங்கரமான சிறைக்கூண்டு. கட்டிளங் காளையருக்கும் கன்னியருக்கும், அது ஒரு மகரந்தம் சொரியும் மதுக்கோப்பை. சூழ்ச்சிக்கலை நிபுணர்களுக்கு, வாழ்வு ஒரு அழகிய சதுரங்கப்பலகை. கலைப்பித்தர்களுக்கு, அது ஒரு கலைக்கோவில். சிந்தனையாளருக்கு, அது ஒரு மாபெரும் பள்ளி. ஆனால், ஏழைகளுக்கு அது ஒரு முடிவற்ற ஏமாற்றம்; தொடர்ந்து சென்று கொண்டேயிருக்கக் கூடிய ஒரு சோக நாடகம்." அவரது ரஸனை உணர்வுகள் வாழ்க்கையை இவ்வாறு கணித்திருக்கிறது.

11) 'சிவாஜி' ஆகஸ்ட் இதழில் பிரசுரமாகியுள்ள திரு வல்லிக்கண்ணன் அவர்களின் 'நிலவு தரும் நினைப்பு' அவரது தேர்ந்த ரஸனையுள்ளத்தைக் காட்டுகிறது.

12) இறைவன் நமக்கு காணுதல், கேட்டல், நுகர்தல், தொட்டுணர்தல், பேசுதல் என்ற அற்புதமான புலன்களைக் கொடுத்திருக்கிறார். அபபுலன்களால் அனுபவமிக்க ஏராளமான அளவில் இயற்கைச் செல்வங்களையும் வழங்கியுள்ளார். அவற்றை நாம் உணர்ந்து ரஸிக்கும்போது அவை இன்பானுபவமாக அமைகிறது. இறைவனது படைப்பின் ஆற்றலை உணர்ந்து, உலகின் ஒவ்வொரு அசைவையும் ரஸிக்கும் மனப்பக்குவம் பெற்று, அன்பைப் பெருக்கி அமைதி பெற்று பேரின்பம் அடைவோமாக.

# நான் ஏன் பிறந்தேன்?

[ திருமெய்யம். புலவர். முத்துவேங்கடேசன்]

காலம் படைத்திட நான் பிறந்தேன்—புதுக்
கவிதை வாழ்ந்திட நான் பிறந்தேன்
ஞால மலரெழில் சோலையிலே—மெய்ஞ்
ஞான மலர் பெற நான் பிறந்தேன்!

எண்ணம் நிலைத்திட நான் பிறந்தேன்—மன
ஏற்றம் நுகர்ந்திட நான் பிறந்தேன்
விண் மணம் மண்ணில் விளங்கிடவே—உயர்
வித்தகம் காட்டிட நான்பிறந்தேன்!

கல், கனி யாகவே நான் பிறந்தேன்-கவின்
காவியம் வாழ்வுற நான்பிறந்தேன்
சொல்லெனும் சொர்க்க மண்டலத்தில்—மனத்
துயரம் மறைந்திட நான் பிறந்தேன்.
ஏன்பிறந் தேனெனக் கேட்கையிலே—என்
இதயம் மலர்ந்து மணக்குதடா!
வான்புகழ் கொஞ்சும் கவியுலகில்—இந்த
மானிடம் வென்று விளங்குமடா!

# ஆடும் காளி அன்னையே!

—என். எஸ். சிதம்பரம்

1. ஆட வைத்தும் பாட வைத்தும்
ஆடல் காட்டும் அன்னையே!
கூட வைத்தும் நாட வைத்தும்
கோலங் காட்டும் அன்னையே!
தேட வைத்தும் தெளிய வைத்தும்
தேசு காட்டும் அன்னையே!
ஓட வைத்தும் உணர வைத்தும்
உயர்த்தும் காளி அன்னையே!

2. கற்க வைத்தும் கனிய வைத்தும்
கருணை காட்டும் அன்னையே!
நிற்க வைத்தும் நெகிழ வைத்தும்
நிகழ்த்திக் காட்டும் அன்னையே!
விற்க வைத்தும் விரிய வைத்தும்
வீரம் காட்டும் அன்னையே!
நற்க லத்தைப் பொற்ப லத்தை
நல்கும் காளி அன்னையே!

3. ஞானக் கூத்து மோனக் கூத்து
நடத்தும் காளி அன்னையே!
ஊனக் கூத்தர் காணு தெங்கும்
உலவும் காளி அன்னையே!
வான நாடர் வணங்கி யேத்த
வாழ்த்தும் காளி அன்னையே!
தீனன் என்னைக் கரையே சேர்க்கும்
தேவி காளி அன்னையே!

4. உள்ளம் என்னும் காட்டில் நின்றே
ஓங்கி யாடும் அன்னையே!
கள்ளம் இல்லாப் பூமி நின்றே
களித்தே ஆடும் அன்னையே!
வெள்ள ஞான வீட்டில் நின்றே
விரும்பி ஆடும் அன்னையே!
அள்ளி வரங்கள் அளித்து நின்றே
ஆடும் காளி அன்னையே!

# WHITHER GRATITUDE.

[ K. G. K. ]

As I was lounging in my chair,
My mind was reeling in despair.
The Muse me then stroked down so cool
And sang the days of olden school.

THEN

In days of yore were teachers free;
They sat and taught beneath a tree
To earnest chaps of eight or nine
And did impart the Knowledge fine.
The grass was wet with dripping dew;
The mat it served for younger crew.
The mossy stone upon the ground
Their seat it was so crude around.
The Olden rule in scriptures told,
" Ye go and learn in teacher's hold,"
So youths did roam all corners four;
They searched and found the teacher's door.
No Wall, No grill, No roof, Nor tile,
The place it was like lonely isle;
No lab, no craft, no Cadet Corps,
Yet soared in Arts of sixty four.
They little thought of homes away,
Which were to them the hopes and gay.
With smile on lips they did indeed
Comply with all their teacher's need.

NOW

The 'Res' and 'Pect' are torn and thrown;
At bottom rock the weeds have grown;
The pupils' hearts are crank and cold;
The chalk and talk are meek and old.
Among the staff the cord is loose;
The Justice caught in brutish noose;
The Law behind the bars pined;
The Fiends of wrath are out unkind.
How sad the plight of 'Ceptor-clan!
What thoughtless plots the teeners plan!
What cruel Love the children nurse!
Why public blink to solve this curse!
Homer and Vergil cry, O hark,
" The Love is Native of the Rock."
" O Lord,— who knows Thy attitude?
Where Thou hast shut the GRATITUDE?."

---

Note :— Readers will recall to their memory the essay "ON BEING GREATFUL" by Amaryllis in our September issue.

— EDITOR.

# நட்சத்திரப் பேட்டி

—என். சாமிநாதன்.

நிருபர் : வணக்கம்.

நடிகை: வணக்கம். உக்காருங்க ... (உட்புறம் நோக்கி) கூல்டிரிக்ங் கொண்டு வாப்பா.

நிருபர் : அதெல்லாம் எதுக்குங்க... சரி பேட்டியை ஆரம்பிக்கலாமா?

நடிகை: நான் ரெடிங்க.

நிருபர் : சினிமாவிற்கு வருவதற்குமுன் உங்க பேரு என்ன? அப்போ நீங்க என்ன பண்ணிக்கிட்டிருந்தீங்க?

நடிகை: வந்துங்க... எங்க அம்மா ஆப்பக் கடை வச்சிருந்துதுங்க .. நான் பால் வியாபாரம் பண்ணிக்கிட்டிருந்தேன் என்னை எல்லாரும் 'பால்காரி பாக்யம்' பாங்க...

நிருபர் : நீங்க பால்காரியாயிருந்து படவுலகில் நுழைந்தது எப்படி?

நடிகை: ஒருநாபாருங்க ... எங்க கிராமத்தில் ஒரு வீட்டுக்கு புதுசா யாராரோ காரெல்லாம் போட்டுகிட்டுவந்திருந்தாங்க. நா அந்தப்பக்கம் பால் ஊத்தப் போயிருந்தேங்க அப்ப அந்தக் காரைப் பாத்துட்டு, அப்படியே மயங்கி வேடிக்கை பாத்துகிட்டு நின்னுகிட்டிருந்தேன். ஏன்னுப் பாருங்க நா அதுக்கு முந்தி காரே பார்த்ததில் லீங்க–நின்னுகிட்டிருந்தேன். அப்ப வீட்டுக்குள்ளேருந்து ஒரே சத்தம் கேட்டுதுங்க. ஒரு அம்மாவைப் பார்த்து ஒரு ஐயா சத்தம்போட்டுக் கிட்டிருந்தாரு. "நீ நடிக்காட்டிப் போ நான் வேற எந்தக் கழுதையை யாவது போட்டுப் படம் பிடிக்கிறேன்னு"சொல்லிகிட்டேஅந்தஐயா வெளியே வந்தாரு. வந்தவரு என்னைப் பார்த்துட்டு உள்ளே வான்னு கூப்பிட்டாரு. நா ஒண்ணும் புரியாம போனேன் என்னைக்காட்டி "இந்தப் பொண்ணுதான் இனி எம்படத்தில் நடிக்கப் போவு"துன்னுரு. அந்த அம்மா கோவிச்சுகிட்டு காரிலே ஏறி கிட்டுப் போயிடுச்சு.

நிருபர் : பலே, உடனே உங்களைப் படத்துக்கு ஒப்பந்தம் பண்ணினுங்களா?

நடிகை: அதெல்லாம் ஒண்ணுமில்லீங்க. அந்த அம்மா போனப்புறம் என்னை அந்த ஐயா கூப்பிட்டு 'சும்மா அந்த அம்மாவைப் பயங்காட்டறதுக்காக கூப்பிட்டேன் நீ போகலாம்' னுரு சரின்னு வீட்டுக்குப்போயி ஆயா கிட்ட எல்லாம் சொன்னேன். அப்பறம் நிதம் அந்த வீட்டுக்குப்போவேன். கோவிச்சுகிட்டுப் போன அந்த அம்மா வரலேன்னு சொல்லிகிட்டாங்க. நாலுநாளா அந்த ஐயா பொறுத்துப் பாத்தாரு. பிறகு என்னைக் கூப்பிட்டு 'அந்த அம்மா கோபம் தனிஞ்சு 2, 3 நாளில் வரும்னு நெனச்சேன்; வரலே. இனி வேற வழியில்லே. படம் குட்டிசுவரானுலும் பரவாயில்லை. நீயே நடின்னுரு. அப்புறம் மேக்கப் எல்லாம் பண்ணி நடிக்க வச்சாரு.

நிருபர் : படம்ரிலீசானப்புறம் உங்கநடிப்பை பார்த்துட்டு மற்ற முதலாளிங்க உங்களை வெச்சுப் படம் எடுத்தாங்க இல்லே?

நடிகை: நடிப்பாவது,மண்ணாங்கட்டியாவது அந்த ஐயா பெரிய டைரக்டராம். அவரே துணிஞ்சு என்னை நடிக்க வச்சார்னு அதில் ஏதோ இருக்குதுன்னு எனக்கு மத்தவங்க படத்தில்

நடிக்க சான்ஸ் கொடுத்தாங்க நம்ம மொதலாளிங்க குணம்தான் தெரியுமே, திறமையாவது, ஒண்ணுவது? எல்லாம் குருட்டு அதிர்ஷ்டம்தான்.

நிருபர் : நீங்க உங்க சின்ன வயதில், பெரியவங்களா ஆனப்புறம், சினிமாவில் நடித்துப்பேர் வாங்கணும். அப்படி வரணும், இப்படி வரணும்னு ஏதாவது ஆசைகள் இருந்தனவா?

நடிகை: அதெல்லாம் ஒண்ணுமில்லீங்க, ஏதோ வவுத்துக்குக் கட்டும்படியா பால் வியாபாரம் ஆனுல் போதும்னு நெனச்சேங்க.

நிருபர் : (தயங்கியவாறு) உம்...வந்து... உங்களுக்கு வயது என்ன ஆகிறது?

நடிகை: சரியா முப்பத்தாறுங்க... மேக்கப் போட்டுகிட்டு பதினெட்டு, இருபதுன்னு புளுகுவாங்க.

நிருபர் ; கலைக்கு நீங்க எந்த விதத்தில் தொண்டு செய்யலாம்னு இருக்கீங்க ?

நடிகை: தொண்டாவது, மண்ணுவது. ஏதோ பேர் இருக்கிற வரைக்கும் பணம் கிடைக்கணும். அதுக்கு உண்டான வழியைச் செய்யறேன்.

நிருபர் : நீங்க வீட்டில் இருக்கும் போதுமேக்கப் போட்டுக்குவீங்களா ?

நடிகை: அநேகமா இல்லீங்க.

நிருபர் : அப்போபரவாயில்லியே. மேக்கப் இல்லாமயே நீங்க சின்ன வயசாத்தான் தெரியறீங்களே. முப்பத்தாறு வயசுன்னு யாரு சொல்லுவாங்க.

நடிகை: இப்ப ஷீட்டிங்குக்குப் போறதுக்காக மேக்கப் ஆயிடுச்சுங்க.

நிருபர் : உங்கள் திறமையையெல்லாம் காட்டி நீங்க நடித்த படம்-அதாவது உங்களுக்கே திருப்தியளித்த படம் ஒண்ணு சொல்லுங்க.

நடிகை: நான்தான் அப்பவே சொன்னேனே... எல்லாம் குருட்டு அதிர்ஷ்டம்னு. எனக்கு நடிப்பு வந்து ஏதாவது படத்தில் நடிச்சிருந்தாத்தானே.

நிருபர் : நேரம் ஆகிறது. நீங்க நன்ருக சமையல் செய்வீர்கள். ஓய்வு நேரத்தில் வீட்டில் சமையல் செய்வது உங்களுக்குப் பிரியமான வேலைன்னு கேள்விப்பட்டிருக்கிறேன். ஆகவே விடை பெறுவதற்கு முன், நீங்க சமையல் செய்வது போல போட்டோ எடுத்துக்கிட்டாத் தேவலைன்னு பார்க்கறேன்.

நடிகை: அதுக்கென்னங்க... ரெண்டு நிமிஷத்தில் ரெடி பண்ணிடறேன். (போட்டோ எடுத்து முடித்ததும்)

நிருபர் : ஆமாம்... இதையெல்லாம் நீங்க எப்போகத்துக்கிட்டீங்க ! சின்ன வயதிலேயே பழக்கமா ?

நடிகை: இதுங்களா ?... வந்து... நடிகையானப்புறம்தான் கத்துகிட்டேன்.

நிருபர் : இவ்வளவு வேலைக்கிடையிலேயும், வீட்டு வேலையைக் கத்துகிட்டு அழகாச் செய்யறீங்களே !

நடிகை: அட... நீங்க ஒரு அப்பாவிங்க; நான் கத்துகிட்டது வீட்டு வேலையில் லீங்க... வீட்டு வேலைசெய்யற மாதிரி 'போஸ்' குடுக்கறதுதான்.

நிருபர் : நான் வரட்டுமா... கடைசியா... உங்க விசிறிகளுக்கு எங்க பத்திரிகை வாயிலாக ஏதாவது சொல்லணுமா ?

நடிகை: என்னத்தைச் சொல்றதுங்க ... இப்படி ஒண்ணும் புரியாம, திறமையில்லாத எனக்கு ஆதரவு அளிக்கிற அவங்களை நெனச்சாப் பரிதாபமா இருக்குங்க. அப்புறம் ஒண்ணுங்க... இந்தப் பேட்டியை அப்படியே பிரசுரம் பண்ணுங்க... இன்னொண்ணு ... இந்த நடிகைக்குப் பிடிச்ச பத்திரிகைன்னு சொல்லி, நீங்க நடத்த றீங்க பாருங்க ஒரு மட்டரகப் பத்திரிகை அதுப்பேரை மட்டும் போட்டுடாதீங்க ... போயிட்டு வாங்க... வணக்கம்.

(சினிமா நட்சத்திரங்களைப் பற்றிய பேட்டிகள் எழுதியெழுதி அலுத்துப் போன நிருபர் ஒருவர்தன் ஆத்திரம் தீர எழுதிய கற்பனைப் பேட்டி இது).

SHIVAJI 38th ANNUAL OCTOBER—1972 Regd No. M. 3398



## அமுத வாக்கு

வாழ்க பராசக்தீ - நினையே
வாழ்த்திடு வோர் வாழ்வார்
வாழ்க பராசக்தீ - இதைஎன்
வாக்கு மறவாதே !



Edited Printed and Published by its owner Sri Triloka Sitaram at his Kavignar Press,
2-A Fort Station Road Trichy-2. Annual Subscription Rs. 10